# கல்கி

KALKI 27.5.2001 ரூ. 5.00

‘முதல்’
அமைச்சர்
தொகுதி...



...மாஜி
அமைச்சர்
தொகுதி!

# Anywhere. Anytime.




- 91% on-time performance
- Convenient connections
- Extensive network with our airline partners

एअर·इंडिया AIR·INDIA

Contact Air-India or your travel agent for details. Visit our website at www.airindia.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் :
kalkiweekly@vsnl.com

# “பிரதமரைப் பேட்டி எடுக்கணும்!”

## திவ்யா உண்ணியின் ஆசை!

‘‘பிடிவாதமாகக் கொட்டும் அக்டோபர் மழையைக்கூட ரெயின் கோட் போட்டுச் சமாளிக்க முடியும். ஆனால் கொளுத்தும் கோடையில் மோட்டார் சைக்கிள் சவாரி, தற்கொலைக்குச் சமம்'' - இப்படிப் புலம்பிய கேமராக்காரரை ஏவிஎம். ஸ்டுடியோவின் ஏசி ஃப்ளோருக்கு அழைத்துப் போனோம்.

‘வேதம்' படப்பிடிப்பின் இடைவேளை. தர்பூசணி ஜூஸைச் சின்னக் குழந்தை மாதிரி உஸ்... உஸ்... என்று உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருந்தார் திவ்யா உண்ணி. பக்கத்தில் போய் நாம் பரிதாபமாக நின்றதும் ‘‘ஜூஸ் சாப்பிடுங்க'' என்றபடி ஜொலித்த இரு கண்ணாடி டம்ளர்களில் திரவ நிலை அடைந்த தர்பூசணியை நிரப்பினார்.





**என்ன மேடம் இயற்கையான பழச்சாறு எல்லாம் சாப்பிடுறீங்க. பிராண்டெட் கூல்டிரிங்ஸ் பிடிக்காதா?**

"முதல்லே மேடம்ன்னு கூப்பிட



மாட்டேன்னு சொன்னாத்தான் மேலே பேசுவேன்" என்று நிபந்தனை விதிக்க "சாரி... சொல்லுங்க மிஸ் திவ்யா உண்ணி" என்றதும், "ம்... இது ரைட்" என்றபடி தொடர்கிறார். "கூல்டிரிங்ஸ் சாப்பிட்டா, கண்ணுல கருவளையம் விழும்ன்னு என்னோட டயட்டீஷியன் சொல்லியிருக்காங்க... அதனாலே ஜூஸ்தான் என்னோட ஃபேவரட். அதிலும் கிழங்கு ஜூஸ் எனக்கு ரொம்ப பிடிக்கும்..."

**கிழங்கு ஜூஸா? புதுசா இருக்கே..?**

எங்க வீட்லே ரொம்ப பேமஸ்... அவிச்ச மரவள்ளிக் கிழங்கை வேரெல்லாம் எடுத்துட்டு... துண்டு துண்டா வெட்டிக்கணும், கால்கிலோ கிழங்குன்னா, அரை லிட்டர் காய்ச்சின பால். பாலை மிக்ஸியில் ஊற்றி... அதிலே கிழங்கைப் போட்டு, முந்திரி, பாதம் சேர்த்து... ஒரு பத்து டிராப் ரோஸ் வாட்டர் விட்டு நல்லா அரைக்கணும். அப்புறம் பில்டர் செஞ்சி டெய்லி ரெண்டு கிளாஸ் சாப்பிட்டா, உடம்பு பளபளன்னு ஜொலிக்கும்... மில்க் ஷேக் தோத்துடும். அப்படியொரு டேஸ்ட். நிறைய கிழங்கு ஜூஸ் குடிச்சா குண்டாயிடுவோம்... நான் அடிக்கடி எக்ஸ்ட்ரா வெயிட் ஆறது கிழங்கு ஜூஸ் சாப்பிட்டுத்தான்."

**வித்தியாமா இருக்கே! போட்ட வெயிட் குறைய ஏதாவது ஜூஸ் அயிட்டம் கைவசம் இருக்கா?**

எப்படி கரெக்டா கேட்டீங்க. அதுக்கு ஒரே வழி கொய்யாப்பழ ஜூஸ். *(இது என்ன கூத்து... கொய்யாப் பழத்துல யாராவது ஜூஸ் போடு வாங்களா?)*

செம்பருத்தி சர்பத்துலே கொய்யாபழத்தைப் போட்டு ஜூஸ் பண்ணிச் சாப்பிட்டால் காத்துபோன பலூன் மாதிரி உடம்பு வெயிட் குறைஞ்சுடும்.

**ஏது சினிமாவை விட்டுட்டு ஒபிசிட்டி கிளினிக் ஆரம்பிச்சுடுவீங்க போல இருக்கே...**

அதுமாதிரி ஐடியாவெல்லாம் கிடையாது. என்னோட லட்சியமே ஒரு பெரிய ஜர்னலிஸ்ட்டா வரணும்ன்னுதான். இவ்வளவு பிசியிலேயும், கொச்சின் செய்ன்ட் தெரஸா காலேஜில் போஸ்ட் கிராஜுவேட் டிப்ளோமா இன் ஜர்னலிசம் படிக்கிறேன். ஸ்டார் டீவிலே வர்ற ஃபேஸ் டு பேஸ் புரோக்கிராம்ல நம்ம பிரதமரைப் பேட்டியெடுக்கிற அளவுக்குப் பெரிய ஜர்னலிஸ்ட்டா வரணும்.

**இவ்ளோ பெரிய லட்சியத்தை வெச்சுக்கிட்டு எதுக்குச் சினிமாவுலே நடிக்க வந்தீங்க.**

இதுவும் மீடியாதானே. இங்கே கிடைக்கிற புகழை வெச்சு ஈஸியா ஜர்னலிஸ்ட் ஆயிடலாம். இல்லியா?

**அது இருக்கட்டும். 'கண்ணன் வருவான்', 'சபாஷ்'ன்னு வரிசையா நடிச்சீங்க. அப்புறம் திடீர்ன்னு ஆளைக்காணோமே, எங்கே போயிட்டீங்க?**

இப்போ சத்யராஜ்கூட மிஸ்டர் நாரதர், முரளிகூட கல்வெட்டு, அர்ஜுன்சார் கூட வேதம், அருண்குமார்கூட புத்தன்னு ஒரு அரை டஜன் படத்துல நடிக்கிறேன். அதே மாதிரி மலையாளத்துலேயும். அரை டஜன் படம் கையிலே இருக்கு. இதனால கேரளா, தமிழ் நாடுன்னு அடிக்கடி ஜம்ப் பண்ண வேண்டியிருக்கு.

**பிரசாந்த் மாதிரி நீங்களும் டான்ஸ் ட்ரூப் வெச்சுருக்கீங்களாமே..?**

நடிக்காமல் வேணா இருந்துடுவேன். ஆனா டான்ஸ் பண்ணாம இருக்க முடியாது. மாசத்துல ஏழு நாள் ஸ்டேஜுக்குன்னு ஒதுக்கிடுவேன். துபாய், சிங்கப்பூர், ஜெர்மனி, இங்கிலாந்துன்னு, புரோக்கிராம் சாக்குல டூர் அடிக்கிறது ரொம்ப பிடிக்கும்.

**யானை வளர்க்குறீங்கன்னு சொன்னாங்க. பார்க்கப்போனா யானை வளர்க்கிற ஒரே நடிகை நீங்கதான்னு நினைக்கிறோம். கின்னஸ்லெல்லாம் எழுதிப் போட்டீங்களா?**

போட்டோமே. அப்ளிகேஷனை ரிஜக்ட் பண்ணிட்டாங்க. ஜெசி கரோல்ங்கிற ஆப்ரிக்க நடிகை ஏற்கெனவே யானை வளர்த்திருக்காங்களாம்.

**அடடே...! சரி போனா போகுது. உங்க யானையைப் பத்திச் சொல்லுங்க.**

அவன் பேரு தேவிதாசன். பதினைஞ்சு வயசு ஆயிடுச்சி. கொச்சி பக்கத்துல இருக்கிற சிலவனூர்தான் எங்க கிராமம். அங்கே பொன்னித்தம்மன் காளிக்கோயில் இருக்கு. அதான் குலதெய்வம். பரம்பரையா கோவிலுக்குத்தான் யானை வளர்க்கிறோம். மற்ற கோவில் திருவிழான்னாலும், மேக்கப்போட்டு, முகத்துல நெத்திப்பட்டம் கட்டிக்கிட்டு கிளம்பிடும். திரும்பிவர பத்து நாள், மாசம்கூட ஆகும். அப்போல்லாம் அவனைப் பார்க்கலேன்னா ரொம்ப கஷ்டமாக இருக்கும். வந்த பிறகு அவன்கூட புட்பால் ஆடினா எல்லாம் சரியாயிடும்.

**தேவிதாசன் இப்போ எங்கே இருக்கார்?**

அவனும் என்னை மாதிரியே சினிமாலே நடிக்கிறான். இப்போ ஏற்காட்டுல ஷூட்டிங்.

(நல்ல கலைக் குடும்பம். 'நல்லா இருங்க' என்று கை குலுக்கி விடைபெற்றோம்.)

சந்திப்பு : **விஷுவல்தாசன்**

ஹய்யா!
எனக்கு கோகுலம்
இலவசமா கிடைக்குது!

# கல்கி சந்தா செலுத்தினால் கோகுலம் / GOKULAM இலவசம்!

* உங்கள் குழந்தைகளிடம் படிக்கும் பழக்கத்தை உருவாக்குங்கள்.

* கோகுலம் அவர்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கச் செய்யுங்கள்.

* கல்கி வார இதழுக்கு ஓராண்டு சந்தா ரூ.275/- செலுத்தினால் போதும்; ரூ.36/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஆறு மாதங்களுக்கு (ஆறு இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக வந்து சேரும்.

* கல்கி வார இதழுக்கு இரண்டு ஆண்டு சந்தா ரூ.550/- செலுத்தினால் ரூ.72/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஓராண்டுக்கு (12 இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக அனுப்பப்படும்.

* ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவரும் தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொண்டு பயன்பெறலாம். சந்தா முடிவு தேதி நீடிக்கப்படும்.

* கல்கி என்ற பெயருக்கு மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்பவும். வெளியூர் காசோலைகள் ஏற்பதற்கில்லை.

டி.டி. அல்லது எம்.ஓ. அனுப்ப முகவரி :
மானேஜர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

என் பெயர் : ..............................

என் மகன் / மகள் பெயர் : ..............................

..............................

விலாசம் : ..............................

..............................

..............................

..............................

கல்கி வார இதழுக்கு ஓராண்டு / இரண்டு ஆண்டுகள் சந்தா ரூ. .............. அனுப்பியுள்ளேன். என் மகன் / மகள் பெயருக்கு கோகுலம் தமிழ் / ஆங்கிலம் 6/12 இதழ்கள் * அன்பளிப்பாக அனுப்பவும்.

* *தேவையற்றதை அடித்து விடவும்.*

கையொப்பம் : ..............................



# இவரும் 'முதல்' அமைச்சர்

எந்த விதமான பகட்டும், பந்தாவும் இல்லாமல், நாம் மதிக்கும் பக்கத்து வீட்டுப் பெண்மணியை நினைவுபடுத்துகிறார் உப்பிலியாபுரம் சரோஜா! முதல்வர் ஜெயலலிதாவின் அமைச்சரவையில் முதல் ஐந்து பேரில் ஒருவராகப் பதவியேற்றவர் இவர்.

"அன்று மதியம் எம்.எல்.ஏக்கள் கூட்டத்தில் அம்மாவைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தபின், சாப்பிட்டுவிட்டு ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோதுதான் தலைமைக் கழகத்தில் தேடுவதாகச் சொன்னார்கள். தொடர்பு கொண்டவுடன் தோட்டத்துக்குப் போகச் சொன்னார்கள். அம்மா என்னை அமைச்சராக்குவதாகச் சொன்னவுடன் ஆனந்தக் கண்ணீரே வந்துவிட்டது. இதுவரை சுதந்தர இந்தியாவில் தமிழ்நாட்டில் எந்த அமைச்சரவையிலும் மலைவாழ் இனத்தைச் சேர்ந்த பெண்மணிக்கு அமைச்சர் பொறுப்புக் கொடுக்கப்பட்டதில்லை. எனக்கு அமைச்சர் பொறுப்பு கொடுக்கப்பட்டதன் மூலம், அந்தப் பெருமையைத் தட்டிச் சென்று விட்டார் அம்மா" என்று நெகிழ்ச்சியுடன் சொல்கிறார் சரோஜா.

அந்த வகையில் இவர் 'முதல்' அமைச்சர். சமூகநலம், அல்லது ஆதிதிராவிடர் பழங்குடி இலாகா இவருக்குக் கொடுக்கப்படலாம் என்கிறார்கள். நாம் சந்தித்த போது அவரது அறையில் மூச்சு முட்டும் அளவுக்குக் கட்சிப்பிரமுகர்கள்.

"நான் தலைவரோட (எம்.ஜி.ஆர்.) பக்தைங்க... சத்துணவு அமைப்பாளராக வேலை பார்த்துக் கொண்டிருந்த எனக்கு உப்பிலியாபுரம் இடைத்தேர்தலில் (1984) போட்டியிட வாய்ப்புக் கொடுத்தார் தலைவர். அப்போது கொள்கை பரப்புச் செயலாளராக இருந்த அம்மா எனக்காகத் தொகுதியெங்கும் மூன்று நாட்கள் பிரசாரம் செய்தார். வெற்றி பெற்றேன். அதன் பிறகு சில மாதங்கள் கழித்துப் பொதுத் தேர்தல் வந்துவிட்டது. தலைவர் அப்போதும் சீட்டு கொடுத்தார். தலைவர் மறைவுக்குப் பிறகு அம்மாவோடதாங்க இருந்தேன்" என்கிறார்.

உப்பிலியாபுரம் ரொம்பவும் பின்தங்கிய தொகுதி. சேலம்-திருச்சி மாவட்டங்களைப் பிரிக்கும் மலைகளை ஒட்டிய பகுதி. பெரும்பாலும் மலைச்சரிவிலும் மலையிலும் கிராமங்கள். வானம் பார்த்த விவசாயம். இந்தப் பகுதி மலையைப் பச்சைமலை என்று சொல்வார்கள். 1984ல் சட்டமன்ற உறுப்பினராக வந்தவுடன்

அடித்து ஓய்ந்த அனுதாப அலையில், தி.மு.க. அமைச்சரவையில் பலர் தோல்வியைத் தழுவ, தொகுதியில் வளர்ச்சிப் பணிகளைச் செய்த அமைச்சர்கள் சிலர் வெற்றிக் கனியைப் பறித்திருக்கிறார்கள். அப்படி வெற்றி பெற்ற அமைச்சர்களில் துரைமுருகனும் ஒருவர்.

காட்பாடி தொகுதியில் அமைச்சர் செய்துள்ள பணிகளைப் பற்றி நாம் ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம்.

மலைமேலுள்ள பல கிராமங்களுக்கு மின் வசதியைச் செய்து தந்திருக்கிறார் சரோஜா.

"துறையூரில் பஸ் டிப்போ, 68 மலைக் கிராமங்களுக்குக் குடிநீர் வசதி, நல்ல தார் சாலைகள், டாப் செங்காட்டுப்பட்டியில் மேல்நிலைப் பள்ளி என்று பல வசதிகள் செய்து கொடுத்தேன். இந்தப் பணிகள் 1991-96ம் ஆண்டும் தொடர்ந்தன. ஆனால் கடந்த ஐந்து ஆண்டுகளாக எந்தப் பணியும் நடக்கவில்லை. சாலைகள் போடப் படவில்லை, மோசமான சாலைகள் காரண மாக பஸ் போக்குவரத்து ரத்து செய்யப் பட்டது. எங்கு நோக்கிலும் குடிநீர்ப் பஞ்சம். நான் பிரசாரத்துக்குச் சென்ற இடங் களில் மக்கள் புகார் மழை பொழிந்து விட்டார்கள்" என்கிறார் சரோஜா.

# தான்!

1989 மற்றும் 1991ல் போட்டி யிடும் வாய்ப்பு கிடைக்காததால் மாவட்ட மகளிர் அணியில் பொறுப்பேற்று, கட்சிப் பணியில் மூழ்கிவிட்டார் சரோஜா. இவர் கணவர் பெருமாள், பஞ்சாயத்து நடுநிலைப் பள்ளியில் தலைமையாசிரியராக இருக்கிறார். இரண்டு மகன்கள், ஒரு பெண். எல்லோருக்கும் கல்யாணமாகிவிட்டது.

அமைச்சர் அதிர்ந்து பேசத் தெரியாதவர். பொழுது போக்கு...? "தலைவர் படம் பார்ப்பேன். அரசியல் பத்திரிகை கள், ஆன்மிகப் புத்தகங் கள் படிப்பேன்" என்கிறார்.

"ரொம்பவும் பின் தங்கிய கிராமத்தில் பிறந்தாலும் வசதியில்லாத அந்தக் காலத்தில், தன் பிடிவாதம் காரணமாக எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்து முடித்தாராம்.

"எங்க குல தெய்வம் உக்கிரகாளி. சிவன் கோயிலுக்கு அடிக்கடி போவேன்."

இப்போது இவருக்குள்ள கவலை மற்றும் படபடப்பு, அம்மா மிகுந்த நம்பிக்கையுடன் கொடுத்துள்ள பொறுப்பை எந்தவிதமான குறையுமின்றி நிறைவேற்ற வேண்டுமே என்பதுதான்.

"எங்கள் பகுதியில் எந்த தொழிற்சாலையும் கிடையாது. வேலை வாய்ப்பு தருவது விவசாயம்தான். பால் உற்பத்தியாளர்கள் அதிகம் என்பதால் பால் குளிரூட்டும் நிலையம் வைக்கலாம். செங்காட்டுப்பட்டியில் கல்லூரி கொண்டு வர வேண்டும். புளியஞ்சோலை, பச்சை மலைப் பகுதியைச் சுற்றுலாத் தலமாக அபிவிருத்தி செய்யலாம். நிறையப் பணிகள் காத்துக் கொண்டிருக்கின்றன" என்று விடை கொடுக்கிறார். "ஸார் இனிப்பு எடுத்துக் கோங்க" என்று சாக்லேட் தட்டை நீட்டு கிறார் கட்சித் தொண்டர் ஒருவர்.

சந்திப்பு:
**ஸ்ரீநிவாசன்**

# நனவாகுமா காட்பாடி கனவு?



அமைச்சர் எது வுமே செய்யவில்லை என்று சொல்ல முடியாத எதிர்க்கட்சியினர், அவர் செய்துள்ள பணிகளில் குறை களைச் சொல்கிறார்கள் என்று குறிப்பிட்டிருந்தோம். காட்பாடி தொகுதியில் அமைச்சர் பல வளர்ச்சிப் பணிகள் நிறை வேற்றியிருந்தாலும், பெரும் பாலான பணிகள் பாதியில் நிற்கின்றன. அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்துள்ள நிலை யில், முடியாத பணிகளின் கதி என்னவாகும்? அந்தப் பணிகளை முடிப்பதற்கு நிதி தொடர்ந்து கிடைக் குமா? துரைமுருகனைக் கேட்டோம்.

'இன்னமும் சில முக் கியமான பணிகள் நிலுவை யில் இருக்கின்றன. உதா ரணமாக மருத்துவக் கல்லூரி.

## பண மொழிப் போட்டி முடிவுகள்!

**வ**ந்து குவிந்த பணமொழிகளுள் மூன்றைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

**கட்டுப் பணம் கையில் இருந்தால்**
**எட்டுத் திக்கிலும் வழி தெரியும்**
*- அ. கல்யாணி, ஆலங்குளம்*

**காலில்லாதவன் காட்ஸில்லாவுடன்**
**மோத முடியுமா?**
**காசில்லாதவன் உலகில் நலமாய்**
**வாழ முடியுமா?**
*- தா. முகமது இக்பால், தஞ்சாவூர்*

**வனக்கோழி வான்கோழி**
**வவுத்துக்கு அடிகோலி**
**பணக்கோழி தினக்கூலி**
**வாழ்க்கைக்கு அடிகோலி**
*- கே.எஸ். ரவிநாத், தானே*



ஓசை நயத்துக்கு அ. கல்யாணியும் கற்பனை வீச்சுக்கு முகமது இக்பாலும் தலா ரூ.100 பரிசு பெறுகிறார்கள்.

பாம்பனில் கோழி வளர்ப்பவர் சொல்லக் கேட்ட பண மொழியை, மஹாராஷ்டிரா போன பிறகும் மறவாத கே.எஸ். ரவிநாத்துக்கு ரூ.50 சிறப்புப் பரிசு!

- ஆர்.

கழிஞ்சூர் ஏரியில் கட்டடம் கட்ட டெண்டர் விட்டாச்சு. இனி டெண்டரை ஏற்றுக் கொண்டு மேல் நடவடிக்கை எடுக்க வேண்டும். காட்பாடியைச் சுற்றியுள்ள, விருதம்பட்டு, காங்கேயநல்லூர், தாரா படவேடு ஆகிய பகுதிகளை ஒருங்கிணைத்து, காட்பாடியை ஒரு நகராட்சிப் பகுதியாக மாற்ற வேண்டும். கோப்பு இறுதிக் கட்டத்தில் இருக்கிறது. மோர்தானா அணை கால்வாய்கள் கட்ட இருபது கோடி ரூபாய் செலவாகியிருக்கிறது. இன்னமும் சில பணிகள் இருக்கின்றன. அவற்றை முடித்தால்தான் விவசாயிகள் முழு பலனைப் பெற முடியும்.

''காட்பாடி வெடி மருந்து தொழிற்சாலையில் அறுபது கோடி செலவில் விஸ்தரிப்புப் பணிகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. நிறைவேறினால் ஆயிரம் பேருக்கு வேலை கிடைக்கும். அதே போன்று காட்பாடி தொகுதியில் சிறு தொழில் பேட்டை அமைக்க முழு முயற்சி செய்து வந்தேன். சட்டக் கல்லூரி ஒன்று தொகுதிக்கு சாங்ஷன் ஆகி இருக்கிறது. இந்தப் பணிகள் எல்லாம் தொகுதியில் தொய்வில்லாமல் நடக்க வேண்டும்.''

''இந்தப் பணிகள் நிறைவேற்றப்பட்டால் உங்களுக்குத் தொகுதியில் மேலும் நல்ல பெயர் கிடைக்கும் என்று, அ.தி.மு.க. அரசு தொகுதியைப் புறக்கணிக்கும் வாய்ப்பு இருக்கிறதா?''

''இப்போது எதுவும் சொல்ல முடியாது. நல்லதே நடக்கும் என்று நம்புவோம்.''

''நீங்கள் சொன்ன திட்டங்கள் நிறைவடைய தொடர்ந்து நிதி கிடைக்கும் என்று நம்புகிறீர்களா?''

''இந்தத் திட்டங்களின் பலன்கள் மக்களைச் சென்றடையப் போகின்றனவே தவிர எனக்கு வரப்போவதில்லை. இயல்பான முறையில் இந்தத் திட்டங்களுக்கு நிதி கிடைக்கும் என்று நினைக்கிறேன். இந்த விஷயத்தில் அரசியல் காழ்ப்புணர்ச்சி காட்டப்பட்டால் மக்கள் தக்க சமயத்தில் பாடம் கற்பிப்பார்கள்.''

சந்திப்பு : **ப்ரியன்**

அட்டை, படங்கள் : **ராஜன், வெங்கடேஷ்**

# பரிதி கைது: பழிவாங்கல் ஆரம்பம்!

ஜெயலலிதா முதல்வராகப் பதவியேற்ற நான்காவது நாள், முன்னாள் துணை சபாநாயகரும், தற்போதைய எழும்பூர் தொகுதி எம்.எல்.ஏவுமான பரிதி இளம்வழுதி கைது செய்யப்பட்டிருக்கிறார். "பழி வாங்கும் நடவடிக்கையில் ஈடுபடமாட்டேன்" என்று முதல் நாள் ஜெ. பேட்டியளித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. குற்றம் செய்யாதவர்கள் மீது நடவடிக்கை எடுப்பதும், சித்ரவதை செய்வதும் இந்த ஆட்சியில் தொடரும் என்பதற்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டிருப்பதாகக் கலைஞர் சொல்லியிருக்கிறார்.

பரிதி விஷயத்தில் நடந்தது என்ன? என்பதை சென்ற இதழில் விரிவாக எழுதியிருந்தோம். தேர்தல் அன்று வேப்பேரி அகர்வால் பள்ளியில் இருந்த வாக்குச் சாவடியில் ஜான் பாண்டியனின் ஏஜென்டாக இருந்தவர் டேவிட். அந்த வாக்குச் சாவடியில் ஏற்பட்ட மோதலில் டேவிட்டுக்கு அரிவாள் வெட்டு விழுந்ததாம். அதையடுத்து பரிதி இளம்வழுதி மற்றும் தி.மு.கவினர் தம்மைத் தாக்கியதாகப் புகார் கொடுத்தார் டேவிட். முதலில் பதிவு செய்யப்பட்ட முதல் தகவல் அறிக்கையில் கொலை முயற்சி பற்றிய சட்டப் பிரிவுகள் குறிப்பிடப்படவில்லை. ஆனால் பதினான்காம் தேதி (ஆட்சி மாறியவுடன்) முதல் தகவல் அறிக்கையில் இந்தப் பிரிவு சேர்க்கப்பட்டிருக்கிறது. பரிதி அலுவலகத் தாக்குதலில் ஜான் பாண்டியனையும் அவர் ஆட்களையும் பத்தாம் தேதியே கைது செய்து ரிமாண்ட் செய்த காரணத்தால் கோபப்பட்டுப் போன இப்போதைய ஆளும் கட்சி, போலீஸுக்கு 'அழுத்தம்' கொடுத்து, அவர்களின் அணுகுமுறையை மாற்றத் துடித்தது. இடையில் ஜெயலலிதாவும் 'பரிதியையும் கைது செய்ய வேண்டும்' என்று அறிக்கை விட்டார் என்பதையும் சொல்ல வேண்டும்.

பதினான்காம் தேதி இரவிலிருந்து அப்போதைய போலீஸ் கமிஷனர் காளிமுத்துவுக்கு, பரிதியைக் கைது செய்யச் சொல்லி பிரஷர். ஆனால் பதினாறாம் தேதி ஜான்பாண்டியன் ஜாமீன் மனு விசாரணைக்கு வர இருந்ததால் கொஞ்சம் தயக்கம் காட்டினார் காளிமுத்து. ஜான்பாண்டியனை எப்படியும் வெளியில் கொண்டு வந்துவிட வேண்டுமென்ற எண்ணத்தில் கோர்ட்டில் 'விசாரணை முடிந்தது' என்று சொல்லி, 'ஆட்சி மாறினால் சட்டம் மாறிவிடுமா' என்று நீதிபதியிடம் வாங்கிக் கட்டிக் கொண்டார் அரசாங்க வழக்கறிஞர். ஜான்பாண்டியனுக்கு ஜாமீன் கிடைக்கவில்லை. இது ஆளும்கட்சியின் ஆத்திரத்தை மேலும் தூண்டிவிட்டது.

இதையடுத்து 18ம் தேதி புதிய போலீஸ் கமிஷனராக முத்துக்கருப்பன் பொறுப்பேற்றார். அன்று மாலைக்குள் பரிதியைக் கைது செய்ய வேண்டும் என்று துணை கமிஷனருக்குக் கடுமையான உத்தரவு போடப்பட்டது. அதன்படி கைது செய்யப்பட்டார் பரிதி. "என் மீது பொய் வழக்குப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. அதைக் கோர்ட்டில் நிரூபிப்பேன். என்னை சட்டமன்றப் பணி ஆற்ற முடியாமல் தடுத்திருக்கிறது அ.தி.மு.க. ஆட்சி" என்கிறார் பரிதி இளம்வழுதி.



1991-96 காலகட்டத்தில் தி.மு.க. சார்பில் தனியொரு மனிதனாக சட்டசபையில் செயல்பட்டு அப்போதைய ஜெ. அரசுக்குச் சரியான மண்டையிடியைக் கொடுத்தவர் பரிதி. கலைஞர் சொல்லியிருப்பது போன்று இந்தப் 'பிள்ளையார் சுழி'க்குப் பின்னால் பெரும் பழிவாங்கல் படலம் இருக்கிறதா, இல்லையா என்பது அடுத்த சில மாதங்களில் தெரிந்து விடும்.

— ரமா

'அம்மா'வுடைய வெற்றி மிதர்ப்பில் களித்துக் கொண்டிருப்பீர்கள், நாங்கள் கூடத் தான், எங்கள் முதல்வர், 'அம்மா'வுக்கென்று பிரசாரம் பண்ணியது எவ்வளவு 'எஃபெக் டிவ்'வாக இருந்திருக்கிறதென்று சிலிர்த்துப் போயிருக்கிறோம்!

என்ன இப்படிப் பேய் முழி முழிக்கிறீர்கள்? இவர் எப்போ பிரசாரம் பண்ணினாரென்றா? எங்களுக்கு மட்டும் ரொம்பத் தெரியுமாக்கும்? ஏதோ மனிதரைத் திடீரென்று காணவேயில் லையே... இங்கே பி.ஜே.பிக்காரர்கள் மஹா ராஷ்ட்ராவில் தண்ணீர்ப் பஞ்சம், சத்துணவு இல்லாமல் ஐந்நூறு குழந்தைகள் உயிரிழந்த பரிதாபம், அது இதுவென்று ஆர்ப்பரித்து, முதல்வரை மாற்றச் சொல் கிறார்களே, இவர் பதிலடி கொடுப்பாரா என்று பார்த் தால்.... விலாஸ்ராவ்ஜீக்குத் திடீரென்று, மற்ற மாநிலங் களில் தேர்தல் நடப்பதும், அதற்கு இவர் காங் கிரஸ் சார்பில் பிரசாரம் பண்ணவில்லை என்று எல்லோரும் ஏங்கித் தவித்துக் கண்ணீர் விடுவதும் நினைவுக்கு வந்து, சூறாவளி சுற்றுப் பயணத்துக்குக் கிளம்பிவிட்டார் என்பது தெரியவந்தது. 'அம்மா'வுடைய வெற்றியைக் காட்டிலும், 'பெரியம்மா'வுடைய தயை, (சோனியாதானுங்க) நாற்காலி நிலைக்க இன்றி யமையாததாயிற்றே...! என்னவோ எங்கே பார்த்தாலும் "அம்மா... அம்மா அம்ம அம்ம அம்மா" பாட்டாகத்தான் இருக்கிறது.

## மும்பை மசாலா: ஃபர்தீன்

இதே மெட்டில், 'ஹம்மா...ஹம்மா' என்று முனகலும் கேட்கிறதே! பாடலை எழுதியது NCB (நார்காடிக்ஸ் கண்ட்ரோல் ப்யூரோ); பாடு வது ஃபர்தீன்கான் அண்டு ஃபாமிலி!

'ப்யார் துனே க்யா கியா' வெற்றியைக் கொண்டாடினோமா, (இந்த வருடத்திய அபூர்வ 'ஹிட்'டுகளில் இதுவும் ஒன்று), 'கோக்' விளம்பரத்துக்குப் போஸ் கொடுத்தோமா (அது தானே ஹீரோவுக்கு ஸ்டேடஸ் ஸிம்பல்?) என்றில்லாமல், கோகெய்னுக்கு விளம்பரம் கொடுக்க அலைய வேண்டுமா?

இப்பு கல்தான் புகழ் சஞ்சய்கானைத் தெரி யும்தானே? அவரது தம்பி ஃபெரோஸ்கான்...? ('ஆப் ஜைஸயா கோயி மேரே ஜிந்தகி மே ஆயி' பாட்டோட ஹீரோங்க...) அவருடைய பிள்ளை இந்த ஃபர்தீன்கான். ராஜேந்திர குமாரிலிருந்து ஜிதேந்திரா வரை எல்லோரும் தங்கள் புத்ர சிகாமணிகளைச் சினிமாவில் நுழைக்க படாதபாடு பட்ட/படு பவர்கள்தான். (ராஜ்கபூரை விட்டு விடுங்கள். அது கொள்ளுப் பேத்தி, எள்ளுப்பேரன் வரை நீளும் சினிமா ஃபாமிலி ட்ரீ!) அண்மைக் காலத்தில் (மொட் டைத் தலையில்) க்ரீடம் சூடிக் கொண்ட ஒரே நபர் ராகேஷ் ரோஷன்தான். அவர் பிள்ளை ஹ்ர்த்திக்கைப் போன்ற இளமையும், திறமையும், ஃபர்தீனுக்கு இருந்தது. பெரியப்பாவின் மாப்பிள்ளையை (சஞ்சய் கான், ஹ்ருத்திக்கின் மாமனாராயிற்றே) அடி யொற்றி, இவரும் பரபரப்பை ஏற்படுத்தியுள் ளார்... ஆனால் தவறான கார ணத்துக்காக. முத லில் சில ஃப்ளாப் புகளை அளித்தாலும், ப்யார் துனே க்யா கியா மூலம், ஃபர்தீன் தனக்கு ஒரு நிலையான மார்கெட்டைத் தேடிக் கொண்டு விட்டார். ஆனால், அந்த வெற்றி யைக் கொண்டாடிவிட்டுத் திரும்பியவர், நேராக ஜூஹூ HDFC பாங்கின் ATM மெஷி னிலிருந்து காசு எடுக்க முயன்று (சொந்தக் காசுதான்) தோற்றிருக்கிறார். காருக்குத் திரும் பியதும், பிறிதொரு காரிலிருந்து வந்திறங்கிய நபர், இவரிடம் எதையோ கொடுக்க, மறைந் திருந்து காத்திருந்த NCB ஆட்கள், லபக்கிவிட் டனர். ஃபர்தீன் சொந்த உபயோகத்துக்கென்று ஒரு கிராம் கோகெய்ன் 2500 ரூ.க்கு வாங்கியதாகவும், விற்க



• தலேர் மெஹந்தி

# தூனே க்யா கியா?

வந்த நபரிடமே 9 கிராம் மிச்சமிருந்ததாகவும், இருவரும் கைது செய்யப்பட்டு விசாரணைக்கு ஆட்படுத்தப்பட்டதாகவும் செய்திகள் ஃப்ளாஷ் ஆயின. குற்றத்தை டீஸண்டாக ஒப்புக்கொண்டு விட்டதால், பாஸ்போர்ட்டை வாங்கிக்கொண்டு, பெயிலில் விட்டுக் கனுப்பி விட்டனர்.



• ஃபர்தின்

''என் குடும்பத்தாரை வேதனைப்படுத்தியதற்கு வெட்கப்படுகிறேன், இனி பொறுப்புணர்வோடு நடந்து கொள்வேன்'' என்று ஃபர்தீன் தெரிவித்ததிலிருந்து, அவரது மேன்மை விளங்குகிறது. செய்த தவறை ஒப்புக்கொண்டு, வருந்தி, திருந்த முற்படுவது உயர்ந்த பண்பல்லவா? சோதனைக் காலத்தில் நிதானமிழக்காமல், வழக்கம் போல் பலரையும் திட்டித் தீர்க்காமல், ஃபர்தீனுக்குப் பக்க பலமாய் நின்ற அவர் குடும்பத்தாரின் பண்பை பாராட்டாமல் இருக்க முடியாது. விசிறிகள் மட்டும் 'ஃபர்தீன் தூனே க்யா கியா' (நீ என்ன செய்து விட்டாய்) என்று ஓயாமல் புலம்புகிறார்கள்!

**'பா**ப் இங்' தலேர் மெஹந்தியின் லேட்டஸ்ட் ஆல்பம், 'நபி பூபா நபி' ஒரே எதிர்ப்புக்குள்ளாகியிருக்கிறது மும்பையில். 'ராஸா' (Raza) அகாடமிக்காரர்கள், இவர் அரை குறை ஆடை ஆட்டக்காரிகளுடம் ஆடும் ஆட்டத்திற்குள் எப்படி நபி, அலி, மதீனா போன்ற புனிதமான இஸ்லாமியப் பெயர்களை இழுக்கலாம் என்று போட்டார்களே ஒரு போடு! மனிதர் ஆட்டமாக ஆடி விட்டார். பாடல் வரிகளிலிருந்து இந்தச் சொற்களை அகற்றி விடுவதாகப் பணிந்து விட்டார். ஆனால் யூனிவர்ஸல் மியூசிக்காரர்கள் இசைவு தெரிவிக்கவில்லையே? (யார் 'ரீஷூட்' செய்வதாம்?) இந்தியாவைப் பொறுத்தவரை ஷூட் செய்வது மலிவு! ரீ ஷூட் செய்வது காஸ்ட்லி!

— ஜெயஸ்ரீ ராஜ்

# அஞ்சல் மூலம் பேச்சு

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பார்கள். ஆனால் பல நேரங்களில் முகத்தைக் கொண்டு அகத்தை அறிய முடிவதில்லை. மின்னுவ தெல்லாம் பொன்னாக இருப்பதில்லை. கருப்பாகத் தோற்றமளிக்கும் கற்கள் வைரக்கற்களாக இருக்கலாம். சிடுசிடுப்பாக தோற்றமிக்கவர்கள் மென்மையான உள்ளம் கொண்டவர்களாக இருக்கலாம்.

இதேபோல் பல மொழிகள் முதலில் நமக்கு பரிச்சயமே இல்லாத அன்னிய மொழி போல் தோற்றமளிக்கும். ஆனால் திறந்த மனதுடன் அம்மொழியை அணு கும்போதுதான் 'அட, இம்மொழியில் பல சொற்கள் முதலிலேயே நமக்கு அறி முகமான சொற்கள்தானே' என்று புரிந்து கொள்வோம்.

தமிழ் மொழியிலுள்ள பல சொற்கள் மலையாளம், கன்னடம், தெலுங்கு மொழிகளிலும் புழக்கத்தில் உள்ளன என்பது நமக்குத் தெரியும். தமிழில் உள்ள 'வெள்ளம்' (நீர்) என்ற சொல் மலை யாளத்திலும், 'அன்னம்' (சோறு) என்ற சொல் தெலுங்கிலும் சகட்டு மேனிக்குப் பயன்படுத்தப்படுகின்றன. அதேபோல் 'பத்து', 'பால்' என்ற சொற்கள் சற்று மாறி 'ஹத்து', 'ஹாலு' என்று கன்னடத்தில் உபயோகப்படுத்தப்படுகின்றன.

---

**பல மொழிகள் முதலில் நமக்கு பரிச்சயமே இல்லாத அன்னிய மொழி போல் தோற்றமளிக்கும். ஆனால் திறந்த மனதுடன் அம்மொழியை அணு கும்போதுதான் 'அட, இம்மொழியில் பல சொற்கள் முதலிலேயே நமக்கு அறி முகமான சொற்கள்தானே' என்று புரிந்து கொள்வோம்.**

---

"அது சரி. இப்படி தமிழ் சொற்கள் தென்னிந்திய மொழிகளில் மட்டும்தான் உபயோகப்படுத்தப்படுகின்றனவா? இல்லை, மற்ற மொழிகளிலும் பயன் படுத்தப்படுகின்றனவா'' என்ற வினா எழலாம். ஆம் நீங்கள் நினைப்பது சரியே. தமிழ் அன்னை உயர்வு தாழ்வின்றி, பாகுபாடின்றி அனைத்து மொழிகளுக்கும் விருந்தளிக்கின்றாள்.

தமிழ் மொழியின் 'வில்லங்கம்' என்ற சொல் மராட்டியில் 'வில்லங்' என்றே எடுத்தாளப்பட்டிருக்கின்றது. 'உபகாரம்' என்ற சொல் ஏறத்தாழ எல்லா வடஇந்திய மொழிகளிலும் பயன்படுத்தப்படுகின்றது.

ஆகவே, ஒரு விஷயம் நமக்குத் தெளிவாகிறது. அதாவது, தமிழ் மொழி யைக் கற்றவர்கள் மற்ற மொழிகளை மிக எளிதில் கற்றுக் கொண்டுவிடுவார்கள். ஆனால் அதிக அடக்கத்தின் காரண மாகவோ, அல்லது தாழ்வு மனப்பான்மைக் காரணமாகவோ நாம் இந்த உண்மையை இந்நாள் வரை புரிந்து கொள்ளாமலேயே இருக்கின்றோம். இதன் காரணமாக மற்ற மொழிகளைக் கற்க அஞ்சி குடத்திலிட்ட விளக்காகவே இருக்கின்றோம்.

இப்போதெல்லாம் தொலைக்காட்சி யில் வரும் பல நிகழ்ச்சிகளைக் கண்டு பல இந்தி சொற்கள் பலவற்றை அறியத் துவங்கி இருப்பதோடு, இந்தி மொழி கற்கும் ஆர்வமும் நம்மவர்களிடம் பெருகி உள்ளது. உங்களுக்குத் தெரியுமா? தமிழ் மொழியில் புழக்கத்தில் உள்ள 5000க்கும் மேற்பட்ட சொற்கள் இந்தியிலும் உள்ளன.

சில உதாரணங்களை இங்கு பார்ப்போம்

1. அனுகூலம் (அனுகூல்)
2. அனுதினம் (அனுதின்)
3. அனுபவம் (அனுபவ்)
4. அனுபூதி (அனுபூதி)
5. அநேகம் (அநேக்)
6. அபயம் (அபய்)
7. அபிப்ராயம் (அபிப்ராய்)
8. அந்தம் (அந்த்)
9. அனாவசியம் (அனவஷ்யக்)
10. அதிகம் (அதிக்)

('அட அப்படியானால் இந்தி மொழி யைச் சுலபமாகக் கற்றுக் கொள்ளலாமே' என்று மனதுக்குள் கூறி மகிழ்வது

# மொழி இந்தி பயிலலாமே

எங்களுக்குப் புரிகிறது.)

---

**ஒரு விஷயம் நமக்குத் தெளிவாகிறது. அதாவது, தமிழ் மொழியைக் கற்றவர்கள் மற்ற மொழிகளை மிக எளிதில் கற்றுக் கொண்டுவிடுவார்கள். ஆனால் அதிக அடக்கத்தின் காரண மாகவோ, அல்லது தாழ்வு மனப்பான்மைக் காரணமாகவோ நாம் இந்த உண்மையை இந்நாள் வரை புரிந்து கொள்ளாமலேயே இருக்கின்றோம். இதன் காரணமாக மற்ற மொழிகளைக் கற்க அஞ்சி குடத்திலிட்ட விளக்காகவே இருக்கின்றோம்.**

---

ஆம்! நாம் மனது வைத்தால் ஆறே மாதங்களில் இந்தியில் பேச கற்கலாம். இதற்கான பயிற்சியை 'பாரத ஸ்டேட் பாங்கு அதிகாரிகள் சங்கப் பயிற்சி மையம்' அளிக்கிறது.

**DIPLOMA IN CONVERSATIONAL HINDI**

**(பேச்சு மொழி இந்தி டிப்ளமோ பயிற்சிக்கான விபரங்கள்)**

1. இப் பயிற்சியில் மொழி ஆர்வ முடைய எவரும் சேரலாம் (பள்ளி சிறுவர் முதல் ரிடையர் ஆனவர் வரை)

2. இது ஆங்கிலம் மூலமாகவும் தமிழ் மூலமாகவும் நடத்தப்படுகிறது.

3. அஞ்சல் வழியில் நடத்தப்படுவ தால் எங்கிருந்தபடியும் சுலபமாகப் படிக்கலாம்.

4. 'இரு வழி தொடர்பு' (Two way Communication) இப்பயிற்சியில் சிறப்பு அம்சமாகும். அதாவது ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் பாடங்கள் கூரியர் மூலம் அனுப்பப்படும். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் பயிற்சிகள் இருக்கும். இப்பயிற்சிகளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். இவற்றை திருத்தி, பயிலு பவர்களுக்குத் திருப்பி அனுப்பி வைக்கப்படும்.

5. ஒவ்வொரு மாதமும் (இறுதி ஞாயிற்றுக்கிழமையில்) ஒரு நேர்முக வகுப்பு நடத்தப்படுகின்றது. இவ்வகுப்பு களில் அந்த மாதம் அனுப்பிய பாடங்கள் விளக்கப்படுவதுடன் இந்தி மொழியில் உரையாட (மதிய உணவுடன்) பயிற்சியும் அளிக்கப்படுகின்றது.

6. நேர்முக வகுப்புகளுக்கு வர முடி யாதவர்களுக்கு உதவியாக (மொழி விளக்க மேம்பாட்டு மையங்கள்) திருச்சி, கோவை, மதுரை, தில்லி, ஹைதராபாத், மும்பை போன்ற இடங்களில் உள்ளன.

7. உச்சரிப்புகளை விளக்க ஒலி நாடாக்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

8. பயிற்சியை வெற்றிகரமாக முடித்தவர்களுக்கு Diploma in Conversational Hindi சான்றிதழ் வழங்கப்படும். இந்தச் சான்றிதழ்கள் வருடாவருடம் நடக்கும் பட்டமளிப்பு விழாவில் வழங்கப்படுகின்றன. இப்பட்ட மளிப்பு விழாவில் இதுவரை ஆற்காடு இளவரசர், முன்னாள் பிரதமர் திரு. சந்திரசேகர். பாரதரத்னா திரு. சி. சுப்ர மணியம், மேக்ஸேஸே பட்டம் பெற்ற டாக்டர் கிரண்பேடி ஆகியோர் கலந்து கொண்டு பட்டமளிப்பு உரை நிகழ்த்தி உள்ளனர்.

9. பயிற்சி காலம் ஆறு மாதம்.

பயிற்சிக் கட்டணம் ரூ.425 (நேர்முகப் பயிற்சி, தேர்வுக் கட்டணம் உட்பட)

ஜூலை 2001ல் துவங்கவிருக்கும் பயிற்சியில் சேர விரும்புபவர்கள் ரூ.75க் கான டிமாண்ட் டிராப்ட் SBIOA Institute, Chennai என்ற பெயரில் எடுத்து சுய விலாசமிட்ட, தபால் தலையுடன் (ரூ.6/-) கூடிய உறையுடன் கீழ்கண்ட முகவரிக்கு எழுதவும். உறையின் மேல் English Medium / Tamil Medium என்று பயிற்சி மொழியைக் குறிப்பிடவும். (இந்த ரூ.75/- பயிற்சிக் கட்டணத்திலிருந்து கழித்துக் கொள்ளப்படும்)

The Executive Director, SBIOA Institute,
229, NSC Bose Road, P.B. No.1279,
Chennai - 600 001. Phone : 5340226



"மேடம் என் மகளுக்கு எல்.கே.ஜி. சீட் குடுங்க, குடுக்காம போங்க, அதுக்காக என்னைப் பதிமூணாம் வாய்ப்பாடு கேட்டுச் சித்ரவதை செய்யாதீங்க!"

"!!!!!"



"என்னடா எலக்‌ஷன் முடிஞ்சப்புறமும் பொட்டியும் கையுமா தலைவர் அலையறாரு?"

"அட இது பேரனுக்கு எல்.கே.ஜி. சீட் பொட்டிப்பா!"

# அம்மா தாயே,



"என்ன இந்த பிச்சைக்காரன் மூணு வாரமா ஸ்கூல் முன்னாடியே நிக்கறான்?"

"ஒரே ஒரு எல்.கே.ஜி. சீட் போட்டா போயிடுவானாம்!"

"இந்த ஸ்கூல்ல என்ன ஒரு மரம்கூட இல்ல."
"வெயிலுக்குக்கூட யாரும் ஒசில இங்க ஒதுங்கக் கூடாதாம்."





"சாரி மிஸ்டர், இது அசெம்ப்ளி சீட் இல்ல, மறியல் பண்ணி வாங்க."

# ஒரு LKG சீட்!

கருத்து : மாதுரி

"உங்க ஸ்கூல் ப்ரின்சிபால பார்க்கணும், எப்படிப் போகணும்?"
"ஏழு கடல் கடந்து, பத்து சிகரம் ஏறி, எட்டு மடு நீந்தி, கரை ஏறினா ஒரு சிவப்பு கிளி தோன்றும், அது பறக்கற திசைல போனா ஒரு பெரிய குகை. அதை..."
"!!!!"





"அந்த ஜோஸியர் பெரிய ஆளு. உங்க பையனுக்கு எல்.கே.ஜி. சீட் கிடைக்குமா? கிடைக்காதாங்கறதைக்கூட கரெக்டா சொல்லிடுவாரு."

பதவி ஏத்துக்கிட்ட உடனே சமாதிகளுக்கு மலர் வளையம் வச்சுடணும்....

சட்டமும் நேர்மையும் போனாலும் தர்மத்தையாவது காப்பாத்துவீங்கன்னு நெனச்சேன்

சட்டம், நேர்மை, தர்மம் இங்கே புதைக்கப் பட்டுள்ளது



2001 மே 27
விஷு வைகாசி 13
மலர் : 59
இதழ் : 43

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஜெயிக்க வைத்த ஜோதி பாசு!

மேற்கு வங்கத் தேர்தலில் தோல்வியைச் சந்தித்திருக்கும் திரிணமுல் காங்கிரஸ் கட்சியின் தலைவி, அத் தோல்விக்குத் தேர்தல் கமிஷனைப் பொறுப்பாக்கியிருப்பது சிரிப்புக்கிடமாகியிருக்கிறது! கமிஷனின் கண்டனத்தைப் பெற்றுள்ள மமதா பானர்ஜி யோசிப்பாரானால், தமது தோல்விக்குத் தாமே காரணம் என்பதை உணர்வார்.

மேற்கு வங்க மக்கள், தேசிய உணர்வும் பிராந்தியப் பற்றும் மிக்கவர்கள்தான் என்றாலும் உணர்ச்சிவசப்பட்டு வாக்களிப்பவர்கள் அல்ல. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை மீண்டும் மீண்டும் ஆட்சியில் அமர்த்தியவர்கள் அவர்கள். சித்தாந்த அடிப்படையிலும் அரசின் செயல்பாடை எடை போட்டும் தங்கள் வாக்குகளை அளித்துப் பழக்கப்பட்டவர்கள்.

அத்தகைய மக்களிடம் நேர்மையாக, கொள்கை அடிப்படையில் வோட்டுக் கேட்பதற்குப் பதிலாக, தேர்தல் களத்தையே நாடக மேடையாக்கியவர் மமதா பானர்ஜி.

காங்கிரஸிலிருந்து பிரிந்து வந்து திரிணமுல் காங்கிரஸ் ஆரம்பித்து; பிறகு




பி.ஜே.பி.க்கு ஆதரவு அளித்து; வெகு விரைவிலேயே வலுவான காரணம் எதுவுமின்றி அவ்வாதரவை வாபஸ் பெற்று, சட்டமன்றத் தேர்தலுக்காக மீண்டும் காங்கிரசுடன் கூட்டணி வைத்துக் கொண்டார். திடமான சிந்தனையற்ற அவரை, சிந்தித்து வோட்டுப் போடும் மேற்கு வங்க மக்கள் நிராகரித்ததில் ஆச்சர்யமில்லை.

கம்யூனிஸ்ட் முன்னணியின் வெற்றிக்கு முக்கியமான காரணம், ஜோதி பாசு பல ஆண்டுகளாக நல்லாட்சி வழங்கியது மட்டும் அல்ல. தமக்குப் பிறகு யார் என்ற கேள்வியைத் தேர்தல்வரை ஒத்திப் போடாமல், முன்கூட்டியே முடிவு செய்து ராஜினாமா சமர்ப்பித்தார் பாசு. அவரில்லாவிட்டாலும் அவர் கட்சியால் நல்லாட்சி வழங்க முடியுமென்பது புத்ததேவ்பட்டாசார்ஜீ முதல்வராயிருந்த காலத்தில் நிரூபணமாயிற்று. ஓய்வு பெற்ற போதும் அரசியலிலிருந்து முற்றிலும் விலகிவிடாமல், தேர்தல் பிரசாரத்தில் முழு மூச்சுடன் ஈடுபட்டு தமது கட்சிக்குத் துணை நின்றார் பாசு. எனவே மக்களும் ஆட்சியின் சிறப்புக்கும் கட்சியின் கட்டுக் கோப்புக்கும் நல்ல மதிப்பெண்கள் போட்டு வாக்களித்து விட்டார்கள்.

மேற்கு வங்கத்தில் திரிணமுல்லுடன் கூட்டணி கொண்ட காங்கிரஸ் சந்தித்த தோல்வி, அஸ்ஸாம், கேரளா தேர்தல்களில் பெற்ற வெற்றியால் ஓரளவு ஈடு செய்யப்பட்டுள்ளது. அஸ்ஸாம் தேர்தல் முடிவுகள் பங்களாதேஷ் முஸ்லிம்களின் ஊடுருவலால் பாதிக்கப்படும் என்கிற எதிர்பார்ப்பு பொய்த்துப் போயிருக்கிறது. அம் மாநிலத்தில் நடந்த அமைதியான தேர்தலில் காங்கிரஸ் வென்று, தருண் கோகோய் முதல்வர் பொறுப்பேற்க விருக்கிறார்.

கேரளாவில், ஆளும் கூட்டணி, ஆட்சியிலிருந்து அகற்றப்பட்டு காங்கிரஸ் கூட்டணி ஆட்சிக்கு வந்திருக்கிறது. எனினும் ஜகத் பிரசித்தமான காங்கிரஸ்







கோஷ்டிப் பூசல் தொடரவே செய்கிறது. வழக்கம் போல் காங்கிரஸ் மேலிடம் தூதர்களை அனுப்பி சமரசம் செய்விக்க முயன்று அதில் ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறது. கேரள காங்கிரஸின் இரு துருவங்களான அந்தோணி, கருணாகரன் இருவருமே திருப்திப்படுத்தப்பட்டுள்ளனர்.

சட்டமன்ற கட்சித் தலைவரைத் தேர்வு செய்யும் பொறுப்பை எம்.எல்.ஏக்.கள் சோனியாவிடமே அளித்துவிட, அவர் அதை மீண்டும் அவர்களுக்கே திருப்பித் தர, அதன் பிறகுதான் அந்தோணி முதல்வர் என்றும் கருணாகரனின் மகன் முரளீதரன், கேரள காங்கிரஸ் தலைவராகப் பதவியேற்பார் என்றும் முடிவாகியிருக்கிறது. தேர்தலுக்கு முன்பிருந்தே கோஷ்டிப் பூசலைச் சமாளிக்க இந்தத் தீர்வு எடுத்துரைக்கப்பட்டது. எனினும் அதை அமுல் நடத்த, தலைமையின் பிரதிநிதிகள் டெல்லியிலிருந்து பறந்து வரவேண்டியிருந்திருக்கிறது.

பாண்டிச்சேரி மாநிலத்தின் இழுபறி நிலை, ஜெயலலிதா ஆதரவு மூலம் தீரக்கூடும் என்று தெரிகிறது. இதைக் காட்டிலும் அபத்தம் இத் தேர்தலில் வேறெதுவும் இருக்க முடியாது. பா.ம.க., அ.தி.மு.க.வினர் 'இரண்டரை வருட முதல்வர்' ஃபார்முலாவை ஏற்றுக் கொண்டுவிட, அதை ஏற்க மறுத்த காங்கிரசும் த.மா.கா.வும் தனிமைப்பட்டுப் போயின. 'இப்படியொரு ஏற்பாடுக்கு ஒப்புக்கொண்டு எங்களைக் கேலிக்கு உள்ளாக்குகிறீர்களே' என்ற கோபத்தில் புதுவை வாக்காளர்கள் ராமதாஸைப் புறக்கணித்துவிட்டார்கள்! இப்போது காங்கிரஸ் - த.மா.கா.வுக்கு ஜெ. ஆதரவுக் கரம் நீட்டுகிறார்!

பாண்டிச்சேரிக்கு ஒரு கூட்டணிக் கொள்கை, தமிழ்நாட்டுக்கு வேறு கூட்டணிக் கொள்கை என்று இயங்கிய த.மா.கா. - காங்கிரஸ் இணை கட்சிகள் இப்போது அதையும் விட்டுவிட்டு அ.தி.மு.க. ஆதரவை ஏற்கப் போவது நல்ல வேடிக்கைதான். ○

● உமரி.பொ. கணேசன்,

மும்பை - 37

? ஜெயலலிதா முதலமைச்சராக, சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று கூறியுள்ளாரே டாக்டர் ராமதாஸ்...?

! சட்டத்தைத் திருத்திவிடலாம்; ஆனால் 'ஜெ'வை...?

● 'தென்றல்' பாலு, சென்னை - 42

? 'காங்கிரஸ் கட்சி மூழ்கிக் கொண்டிருக்கும் ஒரு கப்பல்' என்று வாஜ்பாய் கூறியுள்ளாரே. அது பற்றி...?

! கேரளத்திலும் அஸ்ஸாமிலும் ஓட்டைகள் ஓரளவு செப்பனிடப்பட்டுச் சிறுத்தாலும் தமிழ்நாட்டிலும் வங்கத்திலும் ஓட்டைகள் பெரிதாகிவிட்டனவே!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு.



* அம்மா சமையல்

? பீஹார் மந்திரிகள் ஒன்பது பேரின் டீ, காப்பி செலவு மட்டும் ரூபாய் நாலு கோடியாமே?

! போதாக் குறைக்கு உ.பி. மந்திரிகளுக்குப் 'பாக்கெட் மணி' மாதம் 15000 ரூபாய்! இது உச்சவரம்பு! இதற்கு மேலும் செலவழித்து வந்தார்கள். இவையெல்லாம் தமிழ்நாட்டின் புது மந்திரிகள் கவனத்துக்கு வராமலா போகும்?



* சரஸ்வதி சம்மான்

● பி.எம். வள்ளி, மதுரை.

? எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதிக்குச் சரஸ்வதி சம்மான் விருது வழங்கப் பட்டுள்ளது பற்றி...?

! 'ராமானுஜர்' என்ற அவரது நாடகத்துக்கு வழங்கப்பட்டுள்ளது. அந்த மகானை ஒரு சமயவாதி என்ற கண்ணோட்டத்தில் மட்டுமின்றி சமூக சீர்திருத்தவாதி என்கிற பரிமாணத்தில் உணர்த்தும் படைப்பு. தகுதியான விருது.

● மல்லிகை மன்னன், மதுரை - 17.

? கல்கியின் கடுமையான விமர்சனங்களையும் மீறி புரட்சித் தலைவியின் அ.தி.மு.க. அமோக வெற்றி பெற்றுள்ளதே; கல்கி தனது தவறுகளுக்காக வருத்தி, வாக்காளர்களிடம் பகிரங்கமாக வருத்தம் தெரிவிக்குமா?

! மக்கள் தீர்ப்புக்குத் தலைவணங்குமேயொழிய வருந்தாது. தவறு செய்திருந்தால் அல்லவா வருந்த வேண்டும்! கல்கியின் விமர்சனத்தையும் மீறி ஜெயலலிதாவுக்கு அமோக வெற்றி அளித்த வாக்காளர்கள், ஆதரவு அளித்த கூட்டணிக் கட்சித் தலைவர்கள்- இவர்களெல்லாம் வருந்தும் காலம் விரைவில் வரும்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
வே. ஆறுமுகம்,
த.பெ. வேலாயுதம்,
32/3, விளாந்தாங்கல் ரோடு,
கள்ளக்குறிச்சி - 606 202.

* ரூ. 25 பரிசு பெறுபவர்:
க.நா. இராஜேஸ்வரன்,
தெற்கு வீதி,
மொரட்டுப்பாளையம் அஞ்சல்,
ஈரோடு மாவட்டம் - 638 752

● கே.கே. வேங்கடேசன், சென்னை-58

? ஹாலந்தில் அதிகாரபூர்வமாக்கப்பட்டுள்ள கருணைக் கொலையைப் பற்றி...?

! தவறாக உபயோகிக்க வாய்ப்பு இருப்பதால் சர்ச்சைக்குரியது.

கல்கி

● கே.வி.ராமன், சென்னை - 73.

? 'நீதிமன்றத்தை மதிப்பவன் நான். சட்டத்துக்குக் கீழ்ப்படியும் குடிமகன். நான் வீரப்பன் அல்ல' என்று பீஹார் முன்னாள் முதல்வர் லாலு பிரசாத் யாதவ் கூறியுள்ளாராமே...?

! அது நேற்று; இன்றைக்கு 'ஜெ' முதல்வரான பிறகு பல்லவி மாறிவிட்டது. 'ஜெ'க்கு ஏகப் பட்ட பாராட்டு. 'ஜெ'க்குக் கிடைத்த 'நியாயம்' தமக்கும் கிடைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு!

● நகை. இ. மகராசன், கடமலைக்குண்டு.

? இலங்கை அரசுக்கும் விடுதலைப் புலிகளுக்குமிடையே சமாதான முயற்சி மேற்கொள்ளும் நார்வேயின் நோக்கம் பலிக்குமா...?

! பிரபாகரன்-சந்திரிகா காம்பினேஷனில் அது பலிப்பது துர்லபம்! தப்பித்தவறி பலித்தால் நோபல் பரிசு

* பலிக்காத...



* ...காம்பினேஷன்!



காத்திருக்கிறது.

● வே. ஆறுமுகம்,
கள்ளக்குறிச்சி. ❒

? தமிழக வரலாற்றிலேயே மிகக் குறைந்த வாக்குப்பதிவு இந்தத் தேர்தலில் பதிவாகியிருப்பது எதனைக் காட்டுகிறது?

! ஒரு சோம்பேறி சமுதாயம் தனக்குத் தானே அழிவைத் தேடிக் கொள்வதைத்தான் உணர்த்துகிறது.

● மு. இராமசாமி,
வயலூர்.

? உங்களுக்குப் பிடித்த இசைக் கருவி?

! ம்ருதங்கம். அதுவும் வேலூர் ராமபத்திரன் கையில் அது இருக்கும்போது. அதைத் தடவியும் தட்டியும் அவர் கொஞ்சுகிற கொஞ்சலில் அது அப்படியே நெகிழ்ந்து போய் அவர் இழுத்த இழுப்புக்கு வளைந்து கொடுக்கும். அனுசரணைக்கு ஒப்பீடு சொல்ல வேண்டுமானால், 'அம்மா சமையல்' என்றுதான் சொல்ல வேண்டும். அக்கறை, பக்குவம், சுச்சிதம், கைமணம்!



• பகிரங்க



• எதிலும் எதிர்பார்ப்பு

• இரண்டாம் கட்டம்...

# ஒருத்தும் தெரிவிக்குமா?

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்.

? நடந்து முடிந்த தேர்தல்களின் முடிவு குறித்து தூர்தர்ஷன் நடத்திய கருத்துக் கணிப்பு எப்படி...?

! fiasco!

● எஸ். ராமையா, மதுரை – 10.

? 'ஆம்', 'ஓம்' இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?

! 'ஆம், ஆம்! என்று திரும்பத் திரும்பச் சொன்னால் ஆமாம் சாமியாகி அறிவு அழியும். 'ஓம் ஓம்' என்று மீண்டும் மீண்டும் சொல்லி தியானம் செய்தால், அறிவு கூர்மை பெற்று மனம் தெளிவு பெறும்.

● ஆர். ராஜா சாஹிப், சென்னை – 106.

? ஜெயலலிதாவின் இரண்டாவது கட்ட ஆட்சி (செகன்ட் டெர்ம்) எப்படி இருக்கும்...?

! முதல் priority வழக்குகள் வாபஸ். –இது ஏற்கெனவே தொடங்கிவிட்டது. இரண்டாவது priority தேர்தலில் விட்ட பணத்தை மீட்பது. மூன்றாவது priority அதற்கு மேலும் சேர்ப்பது.

● ஆ. அழகேஷ், பூதப்பாண்டி.

? கேரள இளைஞர்களில் பெரும்பாலோர் தாடி வளர்ப்பது எதனால்...?

! ஒரு பக்கம் அரசியல் தலைவர்களிடம் ஏற்பட்ட ஏமாற்றம். மறுபக்கம் அங்கே தாடி வைத்த கலைஞர்கள், படைப்பாளிகள் மீது மக்கள் அபரிமிதமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். இவற்றின் வெளிப்பாடாக இருக்கலாம்.

● க.நா. இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம். ✱

? பகிரங்கமாக வன்முறையில் ஈடுபடும் ஜான்பாண்டியன் போன்றவர்களை அரசியலில் ஏன் சேர்க்கிறார்கள்.

! சில கட்சித் தலைவர்களே சட்டத்தை மதிக்காததாலும் வன்முறையில் நாட்டம் கொண்டிருப்பதாலும்தான்.

**நீங்கள் கேட்டவை – தராசு**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

நர நாராயணனாக பகவான் அவதரித்ததைத்தான் ஆண்டாள் திருவுளத்திலே கொண்டு பாடினாள் :

*நாமமாயிரம் ஏற்ற நின்ற நாராயணா,*
*நரனே!*
*உன்னை மாமிதன் மகளாகப் பெற்றாள்*
*எமக்கு வாகை தவிருமே...*

'நாமமாயிரம் ஏற்ற நின்ற நாராயணா!' மிக அழகான பதப் பிரயோகம் இது. வியாக்யான சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை இதற்கு வியாக்யானம் பண்ணுகிறார். அந்த மாதிரி துருவித் துருவி வியாக்யானம் பண்ணுவதற்கு மகான்களால் தான் முடியும்.

அவருடைய வியாக்யானம்தான். 'ஸ்தனஞ்சயப் பிரஜை அபத்யம் கொண்டால் அவ்வபத்தியம் நீக்குவதற்காகத் தாயாரானவள் குடிநீர்ப் பருகுமாப்போலே...' என்ற உதாரணம்.

குழந்தைக்குப் பால்புகட்டும் தாயாரின் உதாரணம்!

'நீ என்ன காரியம் செய்வதற்காக இப்படி நரநாராயண அவதாரம் பண்ணி தபஸை மேற்கொண்டாய்?...' என்று கேட்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

இன்னும் விசேஷமாக அவருடைய வியாக்யானம் தொடருகிறது. 'சஹஸ்ர நாமத்தைப் பூலோகத்திலே மட்டுமல்ல, வைகுண்டத்திலேயும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்' என்று வியாக்யானம் பண்ணுகிறார்.

ஆண்டாள், 'நாமமாயிரம் ஏற்ற நின்ற நாராயணா, நரனே!' என்றது இதைத்தான். 'வைகுண்டத்திலே இருக்கும்படியான நாராயணா! நரனே! - பூலோகத்திலே இருக்கும்படியான எம்பெருமானே!'... நித்ய விபூதி, லீலா விபூதி இரண்டையும் சேர்த்தே சொல்கிறாள் ஆண்டாள்.

ஆகவே, அங்கேயும் - வைகுண்டத்திலேயும் பகவான் நாமாவைச் சொல்லி அவனை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள் என்பதை வேதம் நமக்குக் காட்டுகிறது.

அதற்கும் மேலே போய், 'எத்தனையோ வேதங்களைச் சொன்னேன். அவற்றில் இல்லாத ஆனந்தம் உன் திருநாமத்தைச் சொல்கிறபோது ஏற்படுகிறது...' என்று உள் பொருள்.

'பகவானுடைய திருநாமத்தை எல்லோரும் கூடியிருந்து

# குறையொன் 13





குளிர்ந்து சொல்கிறபோது ஏற்படக்கூடிய ஆனந்தம் வேறெங்கும் இல்லை' என்றும் சொல்கிறது. வேதமே சொல்

கிறது! 'விஷ்ணு என்று சொல்கிறபோது ஏற்படக்கூடிய ஆனந்தம் வேறெதிலும் இல்லை' என்கிறது.

அப்படிப்பட்ட விஷ்ணுவை ஆராதிக்கிற விதத்தை அடுத்த திருநாமம் சொல்கிறது :

**வஷட்கார :**

**வ**ஷட் என்கிற திருநாமம் வஜ்ரா யுதம் போன்றது என்கிறது வேதம். 'வஷட்' என்று சொல்லித்தான் யக்ஞத்திலே ஹோமம் பண்ணுவார்கள்.

'ஸ்வாஹா', 'ஸ்வதா' - இந்த இரண்டு சப்தமும் இல்லாமல் யக்ஞம் பண்ண முடியாது. ஸ்வாஹா என்பவள் அக்னியின் தர்மபத்னி. ஸ்வதா என்பவளும் அக்னி யினுடைய தர்மபத்னி. இவர்களை அழைக்காமல் யக்ஞம் பண்ணினால் பலன் கிடைக்குமா?

மங்கள காரியங்கள் 'ஸ்வாஹா' என்ற சப்தமில்லாமல் நடைபெறாது. பித்ரு காரியம் பண்ணினால் ஸ்வதா என்ற சப்தம் இல்லாமல் பண்ண முடியாது.

அதே மாதிரி வஷட்காரம் என்பதும் அக்னிக்கு உகந்ததான திருநாமம்.

இதைச் சொல்லித்தான் திரவியங்களை அக்னியிலே சேர்க்க வேண்டும்.

வஷட்கார : என்பதற்கு என்ன பொருள் என்றால், 'எல்லாவற்றையும் தன்னுடைய வசத்தில் உடையவன் பரமாத்மா' என்று பொருள்.

எல்லாவற்றையும் அவனுடைய அதீனத் திலே உடையவனானதனாலே,

வஷட் என்கிற சப்தத்தால் ஹோமம் பண்ண வேண்டும். 'ஸ்வாஹா' என்கிற சபத்தத்தால் ஹோமம் பண்ண வேண்டும். ஸ்வதா என்கிற சப்தத்தினால் ஹோமம் பண்ண வேண்டும்.

*ஸமஸ்த ஹவ்ய - கவ்ய போக்தா*

*ஹரி ஈச்வர :*

- ஹவ்ய ரூபமான ஹவிஸையும் கவ்ய மான பித்ரு காரியத்தில் சமர்ப்பிக்கக் கூடியதையும் எம் பெருமான் விஷ்ணுவே கவீகரிக்கிறான்.

அதனால்தான் சிரார்த்தன்று நாம் பார்க்கலாம் - விஷ்ணுவை அவாஹனம்

பண்ணுவதைப் பார்க்கலாம்.

எதற்காக இப்படி ஆவாஹனம் பண்ண றோம்?...

சிரார்த்தத்தைச் சம்ரக்ஷிக்கக்கூடியவன் விஷ்ணு. அந்த விஷ்ணுவுக்கே இது போய்ச் சேர்கிறது.

நாம் இங்கே அந்த பித்ரு காரியத்தைப் பண்ணினாலும் விஷ்ணு பாதத்திலே - கயையிலே - இது தத்தம் பண்ணியதாக ஆகட்டும் என்று சொல்லித்தான் இங்கிருந்த படி பித்ரு காரியத்தைப் பண்ணிக் கொண் டிருக்கிறோம்.

ஒரு நாள், ஜீவித காலத்தில் அந்த கயைக்கே சென்று சாக்ஷாத் அந்த விஷ்ணு பாதத்திலே பிண்டப் பிரதானம் பண்ண வேண்டும். ஒரு நாள் மட்டும் பண்ணியே ஆக வேண்டும். மற்ற நாட்கள் வீட்டிலே பண்ணுகிறபோது அந்தப் பாதங்களை மனத்தில் தியானித்துப் பண்ணலாம்.

அப்படி தியானித்துப் பண்ணும்போது, சிரார்த்தின்போது, 'அக்ஷய வட:' என்று வடக்குப் பக்கம் நோக்கி நான்கு அடி நடக்க வேண்டும். வட விருக்ஷத்தைத் தியானம் பண்ண வேண்டும். அதன் கீழே இருக்கும் படியான விஷ்ணு பாதத்தைத் தியானம் பண்ண வேண்டும்.

ஏனென்றால், விஷ்ணுதான் இதை சுவீகரிக்கிறான். நல்ல யக்ஞத்திலேயும் சோபனமான காரியத்திலேயும் அவன்தான் உடனிருந்து நடத்துகிறான். அபர கர்மா விலேயும் அவனைத்தான் தியானம் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிரேதம் வாசலில் இருக்கிறபோதேகூட, அதை ஸ்மசானத்துக்குக் கொண்டு போவ தற்கு முன்பு, கிருஹத்தினுடைய வாசலி லேயே அந்த எம்பெருமானை நினைத்து புருஷ சூக்த ஹோமம் நடக்கிறது.

பித்ரு மேத கர்மா - பிரும்ம மேதம் என் றெல்லாம் சொல்வார்கள். பிரும்ம மேத ஸம்ஸ்காரம் ரொம்ப விசேஷம். அதிலே ஏகப்பட்ட காரிய கலாபங்கள். அவற்றைப் பண்ணினால் அந்த ஆத்மா உத்தம கதியை அடையும்.

ஆகையினால், பெரியவர்கள் பிரேத சம்ஸ்காரத்தில் ஆரம்பித்துப் பண்ணக்கூடிய கர்மாவை ரொம்பச் சிரத்தையாகப் பண்ணு வார்கள். அப்படிப் பண்ணினால் பகவான் அங்கும் பூரணமாய் எழுந்தருளியிருந்து ரக்ஷிக்கிறான்.

## அருள்வாக்கு!

இப்போது நாம் எல்லோரும் நம் நிஜ ஸ்வரூபத்தை விட்டுவிட்டு வேஷத்தில் இருக்கிறோம். நமக்கு வேண்டியவர்களை விட்டு விட்டால் தவிக்கிறோமே, நம்மையே விட்டு விட்டதற்கு எவ்வளவு தவிக்க வேண்டும்? நம் ஆனந்த ஆத்ம ஸ்வரூபத் தோடு, அதுவே நாமாக எப்போது கலக்கப் போகிறோம் என்கிற தவிப்பும், அதைப் பற்றிய நினைப்பும் நமக்கு ஸதா இருக்க வேண்டும். பரமாத்மாவுடன் கலப்பதற்காக இப்படிச் சகிக்க முடியாமல் தவிப்பதுதான் உண்மையான பிரேமை. அந்தப் பிரேமைக் குத்தான் பக்தி என்று பெயர்.

இதற்கு முதல் படியாக வெளிப் பூஜை, கோவில் வழிபாடு எல்லாம் வேண்டி யிருக்கிறது. உலக நினைப்பே ஓயாத காரியமாக இருப்பவர்களுக்கு ஆரம்பத்தில் இவைதான் பரமாத்மாவை நினைக்கச் சாதனங்களாகும். இந்தக் கட்டத்தில் ஸ்வாமி கோவிலில் மட்டுமின்றி எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறார், நாமும்கூட அவரே தான் என்று நாம் உணராவிட்டாலும் பரவாயில்லை. மூலவிக்கிரகத்தில்தான் ஸ்வாமி இருக்கிறார் என்று நினைத்து, கோவில் தூணிலேயே நாம் பிரசாதக்

சுபமான காரியத்திலே பாருங்கள்.

கல்யாணத்தில் சப்தபதிகரணம் என்று பெண்ணினுடைய கால் கட்டை விரலைப் பற்றி ஒவ்வொரு அடியாக எடுத்து வைக் கிறான் மாப்பிள்ளை பையன். ஒவ்வொரு அடிக்கும், கூட விஷ்ணு வந்து ரக்ஷிக்க வேண்டும் என்று மந்திரம் சொல்கிறது.

அந்த விஷ்ணு, சர்வதா ரக்ஷகன். சர்வத்ர ரக்ஷகன்.

அப்படிப்பட்ட விஷ்ணுவை வஷட்காரத் தினால் ஆராதியுங்கள், என்கிறார் பீஷ்மாச் சார்யார்.

அவனுடைய திருநாமங்களைச் சொல் வதே வைபவம்தான். அவற்றால் காட்டப் படும் பொருள் அனேக விதமானது. அவை அனைத்துமே குண ப்ரயுக்தமான நாமாக்கள்.

அந்த எம்பெருமானின் நல்ல குணங்கள் அனைத்தும் இந்த சஹஸ்ர நாமத்திலே அடங்கியிருக்கிறது.



கையைத் துடைத்துவிட்டு வந்தாலும் பாதகமில்லை. மூல விக்கிரகத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயப்பட்டு அங்கே கையைத் துடைக்காத அளவுக்கு வந்திருக்கிறோமல்லவா? ஸ்வாமி இல்லவே இல்லை என்று நினைக்காமல் எங்கேயோ ஓரிடத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயபக்தியுடன் ஆரம்பித்தாலே போதும் - சிரத்தை தளராமல், நம்பிக்கை மாறாமல், அப்பியாசம் செய்து கொண்டேயிருந்தால் நாளா வட்டத்தில் ஸ்வாமி எங்கும் இருக்கிறார், எல்லாமாக இருக்கிறார் என்பது புத்திக்குப் புரியும். புத்திக்குப் புரிவது அநுபவமாக ஆவதற்கு, "என்னையே எனக்குக் கொடு" என்று பிரார்த்தித்துக் கொண்டேயிருக்க வேண்டும். ஞானாம்பிகை கிருபை செய்வாள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

விஷ்ணுவை வஷட்காரத்தினால் ஆராதிக்கும்போது 'இந்தத் திருநாமத்தை உச்சரிப்பதனால் விஷ்ணு நம்மை ரக்ஷிக்கட்டும்; இந்தக் கர்மாவினாலே ரக்ஷிக்கட்டும்; நம்மிடத்திலே அவனுக்கு விசேஷ அனுக்கிரஹ புத்தியானது ஏற்படட்டும்; நம்மை அவன் அனுக்கிரஹிக்கட்டும்' என்று அதற்கு உயர்ந்த பலனைச் சொல்கிறது ஒரு சுலோகம்.

*இந்த்ரா ஆச்ராவாயா அஸ்து*
*ச்ரேஷ்டயஜா*
*ரயஜாவஹே வஷட்காரேண வஜ்ரேணா*

- இதை வசிஷ்ட மஹரிஷி சொல்கிறார். விச்வாமித்ர மஹரிஷி சொல்கிறார். ஜமதக்னி சொல்கிறார். அதற்குப் பிறகு விசேஷமாக பரத்வாஜ மஹரிஷி... கௌதம மஹரிஷி, யாக்ஞவல்கியர், இப்படிப்பட்ட ரிஷிகளெல்லாம் இந்த சப்தத்தின் பெருமையை அவரவர் ஸ்ம்ருதிகளிலே விசேஷமாக எடுத்துக் காட்டுகிறார்கள்.

'இந்த சப்தங்களானது உலகத்திலே ஒலிக்கவில்லை என்று வைத்துக் கொள்ளுங்கள்... உலகமே கெட்டொழியும்' என்கிறார் வசிஷ்டர்.

**ய**க்ஞப் பிரகரணத்திலே உத்கீதம் என்று ஸாமத்தைக் குறிப்பிடுகிறது. உத்கீத ஸாமத்தினாலே தேவதைகளை விசேஷமாக அழைக்க வேண்டும். ஸாம வேதத்தால்தான் அழைக்க வேண்டும்.

யக்ஞத்திலே நான்கு வேதங்களுக்கும் விநியோகம் உண்டு. நான்கும் இல்லாமல் யக்ஞம் பண்ண முடியாது.

ரிக் வேதம் தேவதைகளையெல்லாம் ஸ்தோத்திரம் பண்ணும். அதாவது வந்து உட்கார்ந்து விட்டவர்களை ஸ்தோத்திரம் பண்ண ரிக் வேதம்தான். யஜுர் வேதத்தில் ஸ்தோத்ரம் பண்ணினால் அவர்கள் ஒத்துக் கொள்ள மாட்டார்கள். ஸாம வேதத்தினால் ஸ்தோத்திரம் பண்ணினால் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ரிக் வேதத்தினால் ஸ்தோத்திரம் பண்ணினால் ஆனந்தமாகக் கேட்பார்கள்.

யஜுர் வேதத்தினால் ஹோமம் பண்ண வேண்டும். அப்போதுதான் அந்த ஹவிஸை அவர்கள் ஏற்பார்கள்.

அவ்வாறு ஏற்பதற்கும் துதிப்பதற்கும் முன்னால் ஸாமவேதத்தினால் அவர்களை தேவலோகத்திலேயிருந்து இங்கே வரும்படியாக அழைக்க வேண்டும்.

கூப்பிடுகிறபோது ரொம்ப ரமணீயமாக, காதுக்கு இனிமையாகக் கூப்பிட வேண்டும். கர்ண கடூரமாகக் கூப்பிட்டால் வருபவர்கள் புறப்பட்டுப் போய்விடுவார்கள்.

ரம்மியமான இந்த ஸாம வேதத்தினாலே பரத்வாஜ் மஹரிஷி மட்டபள்ளி க்ஷேத்திரத்திலே விசேஷமாக எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறார். 1299 மந்திர ரிக்குகளை கானமாகச் சொல்லியிருக்கிறார். அழகாக கிருஷ்ணா நதி தீரத்திலே உட்கார்ந்துகொண்டு பரத்வாஜ மஹரிஷி அன்றைய தினம் கானம் பண்ணினார்.

அதனால்தான் இன்றைக்கும் மட்டப்பள்ளியிலே போய் உட்கார்ந்தோமானால் கிருஷ்ணா நதியின் அலையிலே ஸாம வேதம் கேட்கிறது. பரத்வாஜ மஹரிஷி சொன்ன அந்த கீதத்தை, பகவான் நரசிம்ஹன் பரிபூரணமாக அனுபவித்தான்.

(வளரும்)

# அம்மா தங்கிய



நம்பர் பத்து, ஜன்பத் இல்லம் போல பிரபலமாகிவிட்டது இந்த வீடு. இது ஏதோ புதுடெல்லியில் உள்ள இன்னொரு விஐபி வீடு என்று தவறாகப் புரிந்து கொண்டு விடாதீர்கள். கடலூரில் எண் 32/42, பார்சியம் ரெட்டியார் தெருவில் இருக்கிறது அந்த ஆடம்பர பங்களா. கடலூர் மாவட்டத்தில் தேர்தல் பிரசாரம் செய்ய வந்த ஜெயலலிதா இந்த வீட்டில் ஒரே இரவு தமது பரிவாரங்களோடு தங்கிச் சென்றார். இதற்கு இவர்கள் கொடுத்த வாடகை ரூபாய் முப்பத்தையாயிரம். ஓரிரவு தங்கிச் செல்ல முப்பத்தையாயிரம் வாடகை கொடுக்கும் ஜெயலலிதாவால், நல்லாட்சி தரமுடியுமா? என்று கேள்வி எழுப்பியது தி.மு.க. தரப்பு. இப்படியொரு திடீர் விளம்பரம் கிடைத்துவிட்ட இந்த வீட்டில் அப்படி என்னதான் இருக்கிறது? கடலூர் விரைந்தோம்.

கடலூர் அஞ்சல் அலுவலகத்தின் அருகாமையில் இருக்கிறது, பார்சியம் ரெட்டியார் தெரு. இந்தத் தெருவில், காங்கிரஸ் பாரம்பரியமிக்க, பார்சியம் ரெட்டியாரின் பழைமையான பங்களா, ஒரு பாழடைந்த வீடுபோல காட்சி தருகிறது. இந்த வீட்டிலா ஜெயலலிதா தங்கிவிட்டுப் போனார்? இதற்காகவா இவ்வளவு வாடகை? என்று நாம் குழம்பியபடி நிற்க, "நீங்க தேடி வந்த, அம்மா பங்களா அதோ..." என்று கை நீட்டினார் அதே தெருவில் வசிக்கும் பெருமாள். பழைய பங்களாவுக்குப் பின்னால், தன்னை ஒளித்து வைத்துக் கொள்ள முடியாமல், ஐவரி வண்ணம் பூசிக் கொண்டு, ஆடம்பரமாக காட்சி தருகிறது அந்த பங்களா. பெருமாள் தொடர்ந்து பேசினார். "அந்த இடம் பார்சியம் ரெட்டியார் குடும்பத்துக்குச் சொந்தமானது. அதை நடராஜன் என்பவர் வாங்கி இந்தப் பங்களாவைக் கட்டினார். ஆனால் உள் வேலைகள் எதுவும் நடக்காமல் கிடந்தது. கடந்த ஒரு மாசத்துக்கு முன்னால் திடீர்னு வேலையை ஆரம்பிச்சாங்க. அ.தி.மு.க. கரைவேஷ்டி கட்டின ஆளுங்க நிறைய பேர், வந்து வந்து போனாங்க.. என்ன விசேஷம்னு கேட்டப்போ ஜெயலலிதா வந்து தங்கப் போறதாச் சொன்னாங்க... ஏற்கெனவே அடிச்சிருந்த கலரை மாத்திட்டு... புதுசா கலர் அடிச்சாங்க. ஒரு வழியா வீடு ரெடியாயிடுச்சு. ஜெயலலிதா வந்து தங்கிட்டுப் போன பிறகு குறைஞ்சது பத்து பேராவது இப்போ வேடிக்கைப் பார்க்க வர்றாங்க." என்று சொல்லிவிட்டு "போட்டோவா ஆளைவிடுங்க" என்று

திரும்பிப்பார்க்காமல் நடையைக் கட்டினார்.

அடுத்து நம்மிடம் சிக்கியவர் அந்தப் பகுதியின் கேபிள் ஆபரேட்டரிடம் வேலை செய்யும் எலக்ட்ரீஷியன் சேகர். "சார் இந்த பங்களா இப்போதான் புதுசா கட்டினது.

# பங்களா!

ஜெயலலிதாதான் முதல்முதலா தங்கியிருக்காங்க. ஆரம்பத்துல கார்ப்பரேட் கெஸ்ட் ஹவுஸ்னு சொன்னாங்க. கடலூர் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றச் செயலாளர் சுப்ரமணிதான் எல்லா ஏற்பாடும் பண்ணினார். அதுக்குப் பண உதவி செஞ்சது தினகரன்தான் சார். அவர் இங்கே அடிக்கடி வந்துட்டுப் போனார்.

ஜெயலலிதா தங்கியிருந்த ரூமில் டாய்லெட், பாத்ரூம் ரெண்டுலேயும் ஏற்கெனவே போட்டிருந்த செராமிக் பிளேட்டையெல்லாம் பேத்து எடுத்துட்டு, தரையிலே வெள்ளை மார்பில் பதிச்சாங்க. வேகவேகமா வேலை நடந்துச்சி.. அப்புறம் பெயின்டையும் மாத்தி அடிச்சாங்க. இந்த கலருதான் அவங்களுக்குப் புடிக்குமாம்." என்று சொல்லிவிட்டு அவரும் நகர்ந்தார்.

அடுத்து தொலைபேசியில் நம்மிடம் சிக்கியவர், இந்த பங்களாவை ஒரு நாள் வாடகைக்குப் பிடித்துக் கொடுத்த, ரியல் எஸ்டேட் தரகர் சங்கர் ரெட்டியார். "சார் நாங்க கோடம்பாக்கத்திலிருந்து வந்திருக்கோம். படப்பிடிப்பு நடத்த பங்களா வேணுமே" என்றோம். அடுத்த வினாடி "அம்மா தங்கின பங்களா இருக்கு சார். பேப்பர்ல படிச்சிருப்பீங்களே. வந்து பாருங்க அசந்து போயிடுவீங்க" என்றார். "நாங்க பார்த்து பிடிச்சுப் போய்த்தானே பேசுகிறோம். எவ்வளவு வாடகை?'' என்றோம். "அதையெல்லாம் பார்த்துப் பேசிக்கலாம் சார்" என்றவர் எத்தனை அறைகள்... என்னென்ன வசதிகள் என்று தொலைபேசியிலேயே வீட்டின் லேஅவுட்டை விளக்கினார். "குறிப்பா ரொம்ப பார்கிங் வசதி இருக்கு சார். பப்ளிக் தொந்தரவே இருக்காது. இப்போ நீங்க எங்கே தங்கி இருக்கீங்க. நானே நேர்ல வர்றேன்" என்று துடித்தவரிடம் 'அம்மா எவ்வளவு வாடகை கொடுத்தாங்க' என்றோம் நைசாக. வாடகை ஒரு முப்பதருஞ்சு. லோக்கல்லேர்ந்து எல்லாத்துக்கும் ஃபிரிஜ் ஏற்பாடு பண்ணினோம். இதுக்கெல்லாம் சேர்த்து மொத்தம் ஐம்பதாயிரம்

கொடுத்தாங்க. அம்மா தங்கினதாலே இப்போ வீட்டுக்கு ஆஃபர் நிறைய வருது. பட்டுன்னு நீங்க புக் பண்ணிடுங்க" என்று படபடத்தவரிடம் "குட்பை" என்று கட் பண்ணினோம்.

கடைசியாக நாம் சந்தித்தது வீட்டின் உரிமையாளர் ராஜூ என்கிற நடராஜனை. கடலூரில் துவாரகா லாட்ஜ் மற்றும் காவேரி கல்யாண மண்டபத்தை நடத்தி வரும் இவர், தமக்கு எந்த அரசியல் சார்பும் கிடையாது என்கிறார். "கடந்த நான்கு தலைமுறையாக இந்த ஊரில் பிசினஸ், செய்கிறோம். எல்லா கட்சியோடும் எங்களுக்குச் சுமுகமான உறவு இருக்கு... நாகார்ஜுனா தொழில் நிறுவனம் இங்கே ஆயில் ரீபைனரி தொடங்கப் போறதா சொன்னாங்க. அவங்களுக்காகத் தான் இந்த கெஸ்ட் அவுஸை கட்டினோம். ஆனால் தற்காலிகமாக அவங்க இப்போ வரலை. அந்த நேரத்துலதான் அ.தி.மு.க. பிரமுகர்கள் வேணும்ன்னு கேட்டாங்க. ஒரு மாசத்துக்கு முன்னாடியே சாவியைக் கொடுத்துட்டோம். மத்தபடி கிரானைட் போட்டு வீட்டை அவங்க இழைச்சு ஆல்ட்ரேஷன் பண்ணினதாக பத்திரிகைகளில் வந்த செய்திகள் பொய். நீங்களே வந்து பாருங்க." என்றபடி நமக்கு வீட்டைச் சுற்றிக் காட்டினார். மொத்தம் மூன்று வீடுகளை இணைத்தாற்போல் கட்டியிருக்கிறார்கள் நடராசன் சகோதரர்கள். ஒவ்வொரு வீட்டிலும் மாடியிலும், கீழ்தளத்திலுமாக மொத்தம் ஆறு பிரம்மாண்ட அறைகள். ஐந்து நட்சத்திர விடுதியை விட ஆடம்பரமாக இருந்தன வேலைப்பாடுகளும், இண்டீரியர் டெக்கரேஷனும். பாத்ரூம், டாய்லெட்டில் வெள்ளை மார்பிள் போடப்பட்டிருந்ததை நேரடியாகவே பார்த்தோம். ஆனால் வீட்டின் உள்ளே புகைப்படம் எடுக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார் ராஜூ. "ஜன்னல்களுக்கு அவங்க கொண்டு வந்து போட்ட திரைச்சீலைகளைக்கூட இன்னும் வந்து கழட்டிக் கொள்ளவில்லை" என்றவர் ஜெயலலிதா தங்கிவிட்டுப் போனதற்கு ஒரு பைசா கூட வாடகை வாங்கவில்லை என்று மறுத்தார்.

தொழில் மையமாக உருவாகிவரும் கடலூரில் பல நட்சத்திர ஹோட்டல்கள் இருந்தும், ஜெயலலிதா தங்கும் அளவிற்கு ஆடம்பரமாக இல்லாததால் அவர்களே இந்த வீட்டை பல லட்சம் செலவு செய்து நவீன வசதிகளை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் இனி பணப் புழுக்கம் பொங்கிப் பெருகுவதற்குக் கேட்கவா வேண்டும்!

— ஸ்ரீசக்கரம்

படம் : ரிச்சர்ட்

"மெகாசீரியல் பார்த்துப் பார்த்து ரொம்ப வீணாப் போயிட்டேன்னு தோணுது..."

"எப்படி?"

"கனவு வந்தாக்கூட முடியவே மாட்டேங்குது...!"

– சீர்காழி வி. ரேவதி





"அந்த ஆவிக்குப் பிற மாநில ஆவிகளோடு தொடர்பு இருக்கு!"

"எதை வச்சு சொல்ற?"

"கைல செல்போன் வச்சருக்குதே!"

– அம்பை தேவா

அருண் சரண்யா

மாமியின் துடிப்பு அவளது முகத்தில் மட்டுமின்றி வார்த்தைகளிலும், வெளிப்பட்டது.

'என்ன சிவப்ரியா, இது அக்கிரமமாயிருக்கே? எப்படி அந்த ஆனந்த் இப்படிச் செய்யலாம்? அடுக்குமா?'

சிவப்ரியா வெளியில் அமைதியாகத்தான் தென்பட்டாள். 'அவரவருக்கு அவரவர் நியாயம் மாமி.'

'அதுக்காக? ரெண்டு நாள் பழியா இங்கே சுத்திச் சுத்தி உங்க காதலுக்கு என் ஆத்துக்காரரின் சம்மதத்தை வாங்கினவன் அவன். இப்போ வேற எவளையோ கல்யாணம் செய்துக்கப் போறேன்னா எப்படி?'

சிவப்ரியா நடிக்க சம்மதித்ததும் மாமிக்கு உண்டாகியிருந்த வெறுப்புத் திரை இப்போது முற்றிலுமாகத் தகர்ந்து போயிருந்தது. காதலனை இழந்து நிற்கும் அவள் ஆறுதலுக்கு உரியவளாக மாறிப் போனாள்.

"கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கிட்டு வரேன் மாமி." தன் பகுதியை நோக்கி நடந்தாள்.

பக்கத்தில் யாரும் இல்லை என்பதை உணர்ந்ததும், கண்ணீர் சுரப்பிகள் தங்கள் அடக்கத்தைக் கைவிட்டன. வெகுவேகமாக உருண்டு விழுந்த உப்பு நீர் நேரடியாகக் கன்னங்களின் வழியே வெளியேறாமல் உதடுகளின் மீதும் அடிக்கடிப் பயணம் செய்தது. உவர்ப்பு உதடுகளைவிட மனத்தில் மிக அதிகமாக இருந்தது.

'அவரவருக்கு அவரவர் நியாயம். உண்மைதான். மருத்துவ மாணவி சிவப்ரியாவைக் காதலித்த ஆனந்த்துக்கு நடிகை சிவப்ரியா பிடிக்காமல் போகலாம். அவளிடமிருந்து விலக்கு பெறும் முழு உரிமை அவனுக்கு உண்டு.

ஆனால் அதை அவன் வெளிப்படுத்திய விதம்தான் மனத்தில் பெரும் வலியை உண்டாக்கியது. சொல்லப் போனால் வெளிப்படுத்தாத விதம்!

தன்னை அழைத்து ஒரு வார்த்தை இந்த முடிவு குறித்து அவன் பேசவில்லை. யாரோ மூன்றாம் நபரிடமிருந்து அவனது புதிய தீர்மானத்தை அறிந்துகொள்ள வேண்டிய அவலம்.

பத்திரிகையாளர் கூட்டத்தில் ஆனந்த்துக்கும் அவளுக்கும் உள்ள காதல் பற்றி விளக்கம் கேட்ட கேள்விதான் அந்த அவலத்தின் தொடக்கம்.

திணறிப்போன அவள், சில நொடிகள் கழித்து சமாளிக்கும் விதமாக 'ஸ்காட்லாண்ட் யார்டில் இருந்திருக்க வேண்டியவர் நீங்க' என்றாள் கேள்வி கேட்டவரைப் பார்த்து.

# மனம் மணமறிய ஆவல்...

"அவன் பணக்கார பாவி. கார், பங்களா, ஏசி, ப்ரிஜ்..."

"அதவிடு. அவன் ப்ரிஜ்ஜில தண்ணி இருக்கா?"



அவரும் விடாமல் 'ஷெர்லக் ஹோம்ஸ்ன்ற பெயரிலேதான் நான் கட்டுரைகளை எழுதுக்கிட்டிருக்கேன். அதிருக்கட்டும், என் கேள்விக்கு நீங்க இன்னும் பதில் சொல்லல்லியே.'

'உங்கக் கேள்விக்குப் பதிலளிக்கணுமான்னு யோசிக்கிறேன் சார். யாருக்கும் தெரியாமல் அவமானம் ற மாதிரியான விஷயம் இல்லே அது... ஆனால் பர்சனல் விஷயங்கள் சந்திக்கு வரணுமான்ற கேள்வி தோணுது. உங்க கேள்வியை ஸ்கிப் செய்யறேனே...'

'ஓகே. காதலைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?' சுற்றி வளைத்தாவது ஒரு பதிலைப் பெற்றுவிட அந்த நிருபர் முயல்வது-தெளிவாகவே புரிந்தது.

'காதல் உணர்வுபூர்வமானதுன்னு ஒத்துக்கறேன். ஆனால் அறிவுபூர்மாகவும் யோசித்து, சரியான ஜோடி தானான்றதைத் தீர்மானிச்ச பிறகு தொடரும் காதல்தான் நிலைச்சு நிற்கும்.'

'ஓ. அப்போ நடிகையாகி கோடி கோடியாக சம்பாதிக்கப் போற நாம எதுக்கு ஒரு சாதாரண டாக்டரைக் காதலிக்கணும்னு தீவரமாக யோசிச்சுதான் ஆனந்த்தை விட்டுட்டீங்களா? இனி எப்படியும் இந்தக் கோடீஸ்வரி நம்மை ஏத்துக்க மாட்டாங்கிறதைத் தெளிவா யோசிச்சுதான் டாக்டர் ஆனந்த் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்துக்கத் தீர்மானிச்சுட்டாரா?'



சிவப்ரியா மருண்டாள். புதுச்செய்தி! ஆனந்த்... வேறொரு பெண்ணைத் திருமணம்! கட்டுப்பாட்டையும் மீறிக் கண்கள் கலங்கத் தொடங்கின. இயக்குனர் மணிசங்கர்தான் உதவிக்கு வந்தார். 'சிவப்ரியாவின் பேட்டியை அப்புறம் தொடரலாமே. இப்ப இந்தப் படத்தின் சிறப்பு அம்சங்களைப் பார்ப்போமா?'

'மன்னிக்கணும். என்னதான் என் கணவர் நடத்தும் மருத்துவ மனைன்னாலும் நான் அதன் நிர்வாகத்திலே தலையிடுவதில்ல. இன்னும் ரெண்டு நாளிலே அவர் வந்துடுவார். அவரைக் கேளுங்க. இல்லேன்னா மேனேஜர் லோலிடா இருப்பாங்க. அவங்களைக் கேளுங்க.' ரிசீவரை வைத்துவிட்டுத் திரும்பிய மாமியின் கண்களில் அப்போதுதான் வந்து சேர்ந்த சிவப்ரியா பட்டாள். "என்னம்மா உடம்பெல்லாம் நடுங்கறது?"

"மாமி ஒரு ஃபோன் செய்துக்கணும்."

'தொலைபேசியைப் பயன்படுத்த வேண்டும்' அனுமதி மட்டுமல்ல அது. அந்தரங்கமான வேறொரு வேண்டுதலும் அதில் கலந்திருந்ததை மாமி உணர்ந்துகொண்டாள். மௌனமாக உள்ளே போனாள்.



எண்களை அழுத்தி எடுக்க, எதிர் முனையில் ஆனந்த்தின் குரல் கேட்டது.

"ஆனந்த், நான் கேள்விப்பட்டது உண்மையா?"

மௌனம். 'உண்மை, உண்மையைத் தவிர வேறொன்றில்லை' என்பதை உணர்த்திய மௌனம். "டாக்டர் என் கணவர் பிழைச்சிட்டாரா?" என்று மனைவி கேட்க, ஆபரேஷன் தியேட்டரிலிருந்து வரும் டாக்டரின் பொருள் பொதிந்த மௌனம்.

"நியாயமா ஆனந்த்?" இரண்டே

"உன்னைத் தூக்கில போடும் முன், உன் கடைசி ஆசை என்ன சொல்லு!"

"என் வூட்டுக் குழால தண்ணி வரணும் எசமான்!"

— நவீன்

வார்த்தைகளில் ஒரு கோடிக் குமுறல்கள்.

"நான் ஒரு முக்கியமான கேஸை கவனிச்சிக்கிட்டிருக்கேன். வேறெதைப் பற்றியும் டிஸ்கஸ் செய்ய எனக்கு இப்போ நேரமில்லே."

நவீன ஏவுகணை குறி பார்த்துத் தாக்கியது.

"ப்ளீஸ் ஆனந்த்..."

"இனிமேல் உன்னால் குழம்ப நான் தயாரில்லை. விட்டுடு. உனக்கு எது முக்கியம்கிறதை நீ தீர்மானிச்சிட்டே. அது நான் இல்லேன்றபோது, எனக்கும் இனி நீ முக்கியம் இல்லேதான். ஃபோனை வச்சிடறேன். இது சினிமா ஒத்திகை இல்லே தப்பானா இன்னொரு டேக் எடுக்க, தப்பா மருந்தை எழுதிக் கொடுத்துட்டா அதன் விளைவுகளைச் சரி செய்ய முடியாமல் போகலாம்."

டொக்.

தொலைத் தொடர்புதான் முறிந்தது. 'மனம் முறியக் கூடாது. நான் காதலுக்காகப் பிறந்த ஆண்டாள் அல்ல, கண்ணனையே கனவு கண்டு அவனையே உயிர் மூச்சாகக் கொள்ள. மத்தள மேளம் முரசொலிக்க, வரிசங்கம் நின்றாங்கே ஒலியிசைக்க ஆனந்த்தைக் கைத்தலம் பற்றுவது அவளது விருப்பம்தான். ஆனால் அதுவே அவளது லட்சியம் அல்ல. அதைவிட மேம்பட்டவை உண்டு. இனி ஆனந்த்தின் வாழ்வில் அவளுக்கு இடமில்லையென்றால் அதற்குப் பொருள் அவள் வாழ்விலும் ஆனந்த் இருக்கக் கூடாது என்பதுதான். இதைவிடப் பெரிய புண்களையெல்லாம் காலம் ஆற்றியிருக்கிறது. மருத்துவக் கல்லூரியின் இரண்டாம் வருடப் படிப்பின்போது அருகிலுள்ள அரசு மருத்துவமனையில் ஒருவன் இறந்தபோது தாங்களும் இறந்து விடுவோமென வெடித்தழுத அவனது குடும்பத்தினர் அதற்கு அடுத்த மாதமே சிரித்துக்கொண்டு தெருவில் எங்கோ போனதை அவள் பார்த்திருக்கிறாள். 'என் லட்சியம் மருத்துவத் தொண்டு. நோய் தீர்த்து பிறர் உற்சாகத்தில் உவப்பது. இறைவனின் இருவருளாலும் டாக்டர் ராம்ஷேகரின் வழிகாட்டலாலும் அது நிச்சயம் நிறைவேறும். மனத்தை மாற்றிக் கொள்வதே தற்போதைய தேவை. முழுநேர மருத்துவத்துக்கும் தனக்குமிடையே உள்ள தற்காலிக வேகத்தடை இந்தத் திரைப்படம். அதுவும் விரைவில் முடிந்துவிடும். அதில் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும்.

ஆனால் அதிலும் நிலைகுலைய வைக்கும் சம்பவங்கள் தொடங்கின.

ஒப்பனை அறைக்குள் நுழைந்த வேணு கண்டிப்பாகக் கூறினான். "மிஸ் சிவப்ரியா, மணிசங்கர் இயக்குனராக இருந்தவரை நடந்தது வேறே. இனி நான் கதையின் போக்கைக் கொஞ்சம் மாத்தலாம்னு இருக்கேன். அதற்காக நீங்க சில காம்ப்ரமைஸ்களைப் பண்ணிக்கத்தான் வேணும்."

ஆனந்த்தை மனத்திலிருந்து ஒதுக்க முடிந்தால்கூடத் தன் வாழ்வு, தான் நினைத்த அளவுக்குச் சிக்கலின்றி இருக்காது என்பது புரிந்தது சிவப்ரியாவுக்கு. கலக்கத்தை மறைத்துக்கொண்டு "என்ன சொல்றீங்க?" என்றாள்.

(தொடரும்)



# மூளைக்கு வேலை!

திருவள்ளூர் என்.சி. ஸ்ரீதரன்

**வீ**டுகளில், பெற்றோர்களாகிய நாம் குழந்தைகளுக்கு வெறும் பாடங்களை மட்டுமே சொல்லிக் கொடுக்கிறோம். அப்படியில்லாமல், அந்தப் பாடங்களை எப்படி எளிதாக நினைவில் வைத்துக் கொள்வது என்ற யுக்திகளையும் வழி முறைகளையும் சேர்த்துச் சொல்லிக் கொடுத்தால் குழந்தைகள் குறைந்த நேரமே படித்து நிறைய மதிப்பெண்களைப் பெற ஏதுவாக இருக்கும். படிப்பைத் தவிர மற்ற துறைகளில் ஈடுபாடு கொள்ள இந்த அணுகுமுறை வழி செய்யும்.

இப்போது இருக்கும் சில மாணவர்களைப் பார்த்தால் ஒன்று, அவர்கள் படிப்பில் கெட்டிக்காரர்களாக இருப்பார்கள். அல்லது, விளையாட்டில் கெட்டிக்காரர்களாக இருப்பார்கள். இந்த இரண்டு துறைகளிலும், சமமாக முதன்மை பெற அவர்களுக்கு நேரம் இருக்காது.

இதற்குக் காரணம் அவர்களுடைய அணுகுமுறை. இந்த இரண்டு துறைகளிலும் முதன்மையாக இருக்கும் மாணவ மாணவியர்களைச் சற்று உற்று நோக்கி, கூர்ந்து கவனித்துப் பார்த்தால், அவர்களுடைய அணுகுமுறை மற்றவர்களுடைய அணுகுமுறையிலிருந்து மாறுபட்டு இருப்பதைக் காணலாம். சிலருக்கு இந்த அணுகுமுறை இயற்கையாக அமையலாம். இன்னும் சில மாணவர்களுக்கு அவர்களுடைய குடும்பச் சூழல் காரணமாக இந்தப் பயிற்சி அமையப் பெறலாம். ஆனால் எல்லோராலும் இந்த அணுகுமுறையைக் கையாள முடியும்.

அணுகுமுறை என்று சொல்லும் பொழுது முதலில் வருவது கூர்ந்து நோக்கும் பழக்கமும், கவனத்தை ஒரு இடத்தில் செலுத்தும் பழக்கமும். ஆங்கிலத்தில் இதை observation & concentration என்று சொல்வார்கள். ஒரு பொருளை நாம்



எவ்வளவு கூர்ந்து பார்க்கிறோமோ, ஒரு பாடத்தை எவ்வளவு கவனமாகப் படிக்கிறோமோ அவ்வளவு பசுமையாக அது மனத்தில் பதியும். ஒரு பொருளை உன்னிப்பாகக் கூர்ந்து நோக்கினால் அதுவரை நமது கண்ணில் புலப்படாத பல விஷயங்கள் கண்ணில் படும்.

உதாரணமாக படம்-1ஐப் பாருங்கள் (பக்கம் 34). உங்களுடைய கண்ணில் என்ன தெரிகிறது?

இப்போது இன்னும் நன்றாகப் பாருங்கள். படத்தின் வெள்ளைப் பகுதியை உற்று நோக்குங்கள். 'FLY' என்ற ஆங்கில எழுத்துக்கள் இப்பொழுது உங்கள் கண்ணில் தெரிகிறதில்லையா?

இதற்குக் காரணம், கருப்பு மையினால் அச்சிடப்பட்ட எழுத்துக்களைப் பார்த்துப் பழகிப் போன நமது கண்கள் வெள்ளை இடத்தைப் பார்ப்பதில்லை. இதே படத்தை ஒரு குழந்தையிடம் காண்பியுங்கள். 'FLY' என்ற எழுத்துக்களை உடனே கண்டு விடும்.

**படம்-1**



என் மூளைக்குக் கொஞ்சம் வேலை கொடுங்க!

நம்மோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, குழந்தைகள் படிக்கும் அளவு குறைவு என்பதால், நமக்கு இருக்கும் தட்டுப்பாடு அந்தக் குழந்தைக்கு இருக்காது.

படம்-2ஐப் பாருங்கள். இதில் மறைந்திருக்கும் ஆங்கில வார்த்தை என்னவென்று சொல்லுங்கள் பார்க்கலாம்.

முடியவில்லையா? இன்னும் சற்று உற்று நோக்குங்கள். 'Hidden' என்ற ஆங்கில வார்த்தை புதைந்திருப்பதை நீங்கள் பார்க்கலாம்.

இப்போது படம் 3-ஐப் பாருங்கள். இதில் என்ன எழுதியிருக்கிறது? கூர்ந்து உன்னிப்பாகப் பாருங்கள். Triangular என்ற வார்த்தை உங்கள் கண்ணுக்குப் புலப்படும்.

Observation & Concentration -இந்த அணுகுமுறையை ஏற்படுத்திக் கொள்வது எப்படி?

ஒரு அறை வழியாகச் செல்லும்பொழுது நீங்கள் அந்த அறையில் உள்ள பொருட்களை மேல் எழுந்தவாரியாகப்

**படம் - 2.**

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| C | S | K | Y | V | E | N | U | Q | M |
| V | M | N | F | O | L | T | E | I | P |
| A | J | H | I | D | D | E | N | G | R |
| P | Q | S | U | O | T | W | X | B | K |
| N | F | L | Z | R | G | M | J | O | H |

**படம் - 3**

T
R I
A N G
U L A R

பார்க்காமல் உன்னிப்பாகப் பாருங்கள். பிறகு அந்த அறையைக் கடந்து அடுத்த அறைக்கு வந்த பிறகு, நீங்கள் பார்த்த பொருட்களைப் பட்டியல் போட்டு உங்களுடைய நினைவிற்கு எத்தனைப் பொருட்களைக் கொண்டு வர முடிகிறது என்று பாருங்கள். இந்தப் பயிற்சியை விளையாட்டாக மூன்று மாதங்கள் செய்து வாருங்கள். உங்களுடைய முன்னேற்றத்தில் உங்களுக்கே வியப்பு ஏற்படும்.

இது போன்று, ஒரு தெரு வழியாகச் செல்லும் பொழுது நீங்கள் பார்க்கும் பொருட்களையெல்லாம் மனத்தில் பதிவு செய்து வாருங்கள். அடுத்த தெருவில் போகும்பொழுது நீங்கள் ஏற்கெனவே மனத்தில் நிறுத்திய பொருட்களில் எத்தனை நினைவில் வருகின்றன என்று பாருங்கள். இந்தப் பயிற்சியையும் தொடர்ச்சியாகச் செய்து வந்தால் உங்களுடைய முன்னேற்றம் உங்களுக்கு உற்சாகத்தையும் தைரியத்தையும் தரும்.

உங்களுடைய குழந்தைகளுக்கும் இது போன்ற பயிற்சிகளை அன்றாடம் ஒரு விளையாட்டைப் போலச் சொல்லிக் கொடுங்கள்.

அவர்கள் உறங்குவதற்கு முன், காலை முதல் மாலை வரை எங்கெல்லாம் சென்றார்கள், யாரையெல்லாம் சந்தித்தார்கள், எதையெல்லாம் பார்த்தார்கள் போன்ற விவரங்களை ஒன்று விடாமல் நினைவுக்குக் கொண்டு வந்து கோர்வையாகச் சொல்ல பயிற்சி கொடுங்கள். இவ்வாறு செய்வதால் அவர்களுடைய மூளைக்கு ஆக்கபூர்வமான வேலையைக் கொடுக்கிறீர்கள். இது அவர்களுடைய நினைவாற்றலை விருத்தி செய்ய உதவும். நாளடைவில் அவர்களிடம் ஏற்படும் மாற்றத்தைக் கண்டு நீங்களே ஆச்சர்யப்படுவீர்கள்.

இந்தப் பயிற்சியினால் ஏற்படும் முன்னேற்றம் அவர்களுடைய படிப்பிலும் முதன்மையாக வர அடியுரமாக அமையும்.

முயன்று பாருங்களேன்!

(தொடரும்)

## சாம்பலில் சிமெண்ட்!

**தொ**ழிலகக் கழிவுகளை ஆக்கபூர்வமான பணிகளுக்கு பயன்படுத்துவது குறித்தான தொழில்நுட்ப சொற்பொழிவுக் கருத்தரங்கு திருச்சியில் நடைபெற்றது.

தஞ்சை, சண்முகா பொறியியல் கல்லூரியின் சிவில் துறை தலைமை பேராசிரியர் டாக்டர் எம்.ஆர்.ஜெயதீர்த்தராவ் பேசியதிலிருந்து:



• டாக்டர் எம்.ஆர். ஜெயதீர்த்தராவ்

- இந்தியா முழுவதும் உள்ள அனல் மின் நிலையங்கள் மூலமாக ஒரு ஆண்டுக்கு ஏறத்தாழ நூறு மில்லியன் டன் கழிவுப்பொருட்கள் வெளியேற்றப்படுகின்றன.
- நம் நாட்டில் எண்பது சதவீதத்துக்கும் மேலே அனல்மின் நிலைய சாம்பல் பயன்படுத்தாத சூழ்நிலையால் எதிர்காலத்தில் சுற்றுப்புறச் சூழல் கெட்டுப்போய்விடும் வாய்ப்புகள் நிறைய உள்ளன.
- அனல் மின் நிலையங்களில், நிலக்கரியை எரிபொருளாக பயன்படுத்தும் போது நாற்பது சதவீதக் கழிவுகள் சாம்பலாக வெளியே வருகின்றது.
- தமிழகத்தில் தூத்துக்குடி, நெய்வேலி போன்ற அனல்மின் நிலையங்களிலிருந்து மட்டும் ஒரு நாளைக்கு சுமார் ஐந்நூறு டன் அளவிற்கு சாம்பல் வெளியேற்றப்படுகின்றன.
- அனல் மின் நிலைய நாற்பது சதவீதக் கழிவில் எட்டு சதவீதம் பாட்டம் ஆஷ் எனவும், முப்பத்திரண்டு சதவீதம் பாண்ட் ஆஷ் எனவும் இரு வகைகளாகக் கொள்ளலாம்.
- அனல் மின் நிலைய சாம்பலில் பெரும்பகுதியான பாண்ட் ஆஷ் பயன்படுத்தி சிமெண்ட் தயாரிக்கலாம். சுண்ணாம்புக்கல், கிளே (களிமண்) இரண்டையும் சம விகிதத்தில் குறைத்துக் கொண்டு அனல் மின் நிலைய சாம்பலைக் கலந்து சிமெண்ட் தயாரிக்கலாம்.

— திருநாவு



அன்றைய கொடூர உஷ்ணத்தின் புள்ளி விவரத்தை ரிட்டயர்ட் மிலிட்ரி ஆபீஸர் மாத்ருபூதத்தின் மூக்கின் நுனியைக் கூர்ந்து பார்த்து, குறித்துக் கொள்ளலாம். தன் வீட்டின் புழக்கடையில் பொதுச்சுவரோர ஈசானிய மூலையில் நின்றிருந்த முருங்கை மரத்தை, கழுத்து வலிக்க அண்ணாந்து பார்த்து அரற்றிக் கொண்டிருந்தார். "என்னய்யா நினைச்சிட்டு இருக்கீங்க...? நேத்து தான் எண்ணி வெச்சிட்டுப் போனேன். நல்ல நாளும் அதுவுமா... இன்னைக்கித் தானா உங்க கைவரிசையைக் காட்றது? பதினாறு காயைக் காணாம்...!"

பொதுச்சுவருக்கு அந்தப் பக்கமிருந்த ஆடிட்டர் சேஷாத்ரி, சத்தம் கேட்டு நிமிர்ந்தார். உப்பி இருந்த வாயில் உள்ள தண்ணீரைத் துப்பினார். நரைத்த தலைமுடிகள் போர்க் கால வீரர்களாய்ச் சிலிர்த்தன. "எங்களை என்ன திருட்டுப் பசங்கன்னு நினைச்சிட்டீரா...? பத்து நாளாப் பதறிக்கிட்டு இருக்குறீரே...?"

"உங்களைச் சொல்லிக் குத்தமில்லேங் காணும்... பொதுச் சுவரோரமா முருங்கையை நட்டு வெச்ச என்னைச் சொல்லணும் – அடிமரம் இந்தப் பக்கமும் கொப்பும் இளையும் உங்கப் பக்கமுமாவா வளர்ந்து தொலைக்கணும்? உங்களுக்கும் வசதியாப் போச்சு... போன வாரம் திருப்பதி வேண்டுதலை, இந்த மரத்தை வெச்சே முடிச்சுட்டீங்க... மருந்துக்கு ஒரு இலையைக் காணாம்!" சுவரைப் பிடித்து எட்டிப் பார்த்தார் சேஷாத்ரி. "உங்க மரம் இந்தப் பக்கம் சாஞ்சிருந்தா, எங்களை என்ன பண்ணச் சொல்றீர்?"

"ஒய்... உம்ம உசரம் என்னய்யா? தோராயமா நாலடி இருப்பீரா?"

"என் தோராய உசரக் கணக்கு உங்களுக்கு எதுக்கு?"

**விஜயபாரதி**

"நீர் வாமன அவதாரமா இருந்தாக்கூட போதுமே... கஷ்டமில்லாம நின்னுட்டே காயைப் பறிக்கலாமே..."

சத்தம் கேட்டு - ரேஷன் கார்டில் பக்காவாய்ப் பதிந்திருந்த பெயர்களுக்குரிய இரண்டு குடும்பங்களும், புழக்கடைப் பக்கம் ஆஜர் ஆயின.

எதிரெதிர் அணியிலிருந்த ரம்யாவும், சுதாகரும் ஆடிப்போனார்கள்.

நன்றாகப் பழகிக் கொண்டிருந்த இரண்டு குடும்பங்களைப் பற்றிய கவலையில் விழித்தார்கள். அவர்கள் கொடுத்த மசால் வடையில் உப்பு



# முருங்கமர யுத்தம்

அதிகமென்று இவர்களும் - இவர்கள் கொடுத்த ஜாங்கிரியில் இனிப்பு அதிகமென்று, அவர்களும் இனி சொல்ல முடியாதே - மிக மிக முக்கியமாக தங்களின் தெய்வீகக் காதல் - இந்த முருங்கை மரச் சண்டையில், அம்பேல் ஆகிவிடுமோ என்று படபடத்தார்கள். தந்தை மாத்ருபூதத்திடம் கெஞ்சினாள் ரம்யா, "இத்தோடு விடுங்கப்பா... சாதாரண முருங்கக்காய்..."

"அப்படி இல்லம்மா - சிறிசோ பெரிசோ... திருட்டு திருட்டுதான். இன்னிக்குச் சின்ன திருட்டா இருக்கிறது தான், நாளைக்குப் பெரிய திருட்டா மாறும்."

மாத்ருபூதம் சொன்னதை அடுத்து - பல்லை நறநறத்தார் சேஷாத்ரி.

"ரொம்ப ஓவரா பேசுறீர்... சின்ன வயசுல நான் பெரிய ரௌடியாக்கும். தழும்புகளைக் காட்றேன் பாருங்க..."

சட்டையைக் கழற்றப் போன தகப்பனாரை இறுக்கிப் பிடித்துக் கொண்டான் சுதாகர். இல்லையென்றால் அந்த இடத்தில் - குபீர் வெளிச்சத்தில் - ஒரு எலும்புக்கூடு பிரசன்னமாகியிருக்கும்.

மாத்ருபூதத்தின் சகதர்மிணி சாரதாம்பாள் கையைப் பிசைந்தாள்.

"சண்டையை நிறுத்துங்கோ... சமையலுக்கு நேரமாயிருச்சு. இன்னிக்கு அமாவாசை விரத நாள். எல்லாக் காயும் போட்டு அவியல் வெச்சாகணும். மார்க்கெட் போயி முருங்கக்காய் மட்டும் வாங்கிட்டு வாங்கோ - மத்ததெல்லாம் இருக்கு..."

"முருங்கக்காய் வாங்கணுமா.. கிண்டல் பண்றியா? முருங்க மரமே இங்கே இருக்குதே... பாவி."

"காய்தான் வல்லிசா இல்லியே..."

"ஏன் இல்லே... உன் சோடாப் புட்டிக் கண்ணாடியைப் போட்டுப் பார். நாலு காய் தெரியுதா இல்லியா? அதைப் பறிச்சுத் தாரேன்... ஜோரா அவியல் பண்ணு." சொல்லிக் கொண்டே செயல்பட ஆரம்பித்தார் மாத்ருபூதம். பொதுச்சுவரில் சில பல வழுக்கல்களுக்குப் பின், ஏறி நின்று அண்ணாந்து பார்த்ததில் அந்தப் பக்க

''செவ்வாய் கிரகத்தில் எக்கச்சக்க தண்ணி இருக்காமே?''
''யார் சொன்னது?''
''மெட்ரோ வாட்டர்!''
— 'நவீன்'

உச்சிக் கிளையில் - குச்சிக் குச்சியாய் நான்கு காய்கள் தொங்கின. தீவிர யோசனைக்குப் பின், அந்தக் கொப்பைத் தன் பக்கமாய் மெதுவாக இழுத்து வளைத்தார். இழுத்த டென்ஷன் திடீரென்று விடுபட - கொப்பு குபீரென்று அவரை இழுத்து - சேஷாத்ரி வீட்டுப் பக்கமாய் அந்தரத்தில் தொங்க விட்டது.

"அப்பா...! அப்பா...!" ரம்யா பெருங் குரலில் கத்தினாள்.

''என்னங்க... முருங்கக் காயும் வேணாம்- மண்ணாங்கட்டியும் வேணாம். சடக்குன்னு உடைஞ்சிரப் போவுது சனியன். பாத்து இறங்குங்க...''

ஒரு முருங்கை மரம் இழுக்கும் அளவுக்கு - தன் கணவர் மெலிந்து விட்டாரே - என்ற ஆத்திரத்தில் - சாரதாம்பாளும் கத்த - சுதாகர் ஆபத்பாந்தவனாய் ஓடி - மாத்ருபூதத்தின் தொங்கும் கால்களைப் பிடித்துக்கொண்டான்.



அந்தரத்தில் தொங்கிய மாத்ருபூதம் வெலவெலத்துப் போனார். மிலிட்ரியில் தப்பு செய்தவர்களை - இப்படி மரத்தில் தொங்க விட்டு - ஒரு காலத்தில், தாம் தண்டனை கொடுத்ததை நினைக்கையில் - 'முற்பகல் செய்யின் - பிற்பகல் விளையும்' என்ற பழமொழி முண்டி முன்னால் வந்தது. சேஷாத்ரி கைதட்டிப் பழைய வீரப்பா சிரிப்பு சிரித்தார்.

"பேஷ்...! முதல்லே உங்க மரம் இந்தப் பக்கம் வந்திச்சு, இப்ப நீரும் வந்திட்டீரா?" ஒருவழியாக - சுதாகர் புண்ணியத்தால் - மறுபடி சுவரில் கால் பதித்து... மௌனச் சாமியாராய் முறைத்துவிட்டு - மெதுவாகத் தம் வீட்டுப் பக்கம் கீழே இறங்கினார் மாத்ருபூதம். "பையை எடுடீ... மார்க்கெட் போய் முருங்கக்காய் வாங்க..."

ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்வதற்காக சுதாகரைக் கடற்கரைக்கு இழுத்து வந்த ரம்யா, மணலில் அமர்ந்தவாறு சொன்னாள்.

''உங்களுக்கு விஷயம் தெரியுமா? இந்த ஏழெட்டு நாளாய் - எங்க வீட்டுப் புழக்கடைப் பக்கமிருந்து 'ஜல் ஜல் சத்தமும்' ஊளையிடுற சத்தமும் கேக்குது. அதுவும் பேய்கள் நேரப்படி நடு ராத்திரி ஒரு மணிக்கு! உங்களைச் சந்திக்க முடியாததாலே சொல்ல முடியலை.''

கேட்ட சுதாகர் கலவரமானான், "நாசமாப் போச்சு! (ஒரு விரலைக் காட்டி) வழக்கமா அந்த நேரத்துலதான் புழக்கடை போவேன். போன வாரம் ஆபீஸ் விஷயமா வெளியூர் போயிட்டதாலே தெரியலை..."

"அப்பா... ஒரு சுத்து உடம்பு குறைஞ்சுட்டார். பில்லி சூனியம் தெரிஞ்சவங்களைத் தேடிட்டிருக்கார். நான் மூணு போர்வை போர்த்தித் தூங்குறேன்... சுதா"

"ஏற்கெனவே நம்ம காதலுக்கு முருங்க மர வில்லன். இப்ப பேய் வேறயா? உங்கப்பாக்கிட்ட நம்ம விஷயமா நானே பேசிப் பார்க்கட்டுமா?"

"கடல் தண்ணியிலே வாயைக் கழுவுங்க. சொல்லி வெச்ச மாதிரி - ஒரு நாள் ஓய்வு. ஒரு நாள் சண்டைன்னு நம்ம ரெண்டு அப்பாக்களும் முறையாச் சண்டை போடுறாங்க. எங்க முருங்கை மரக்கொப்பு- ஒரு சின்னத் துண்டு காத்துல முறிஞ்சு - உங்க வீட்டுப் பக்கம் விழுந்ததுக்கே, நேத்து உங்கப்பா தாம்தூம்னு குதிச்சார்..."

"சாதாரண முருங்க மரத்தைக் கட்டிட்டு அழுறாரே உங்கப்பா - ஒருவேளை விக்கிரமாதித்தன் காலத்துல வேதாளமா இருந்திருப்பாரோ?"

ரம்யாவின் அந்திவான முகத்தில் - வானவில் ஒன்று சரேலெனத் தோன்றி மறைந்தது.

"நல்லா வாழ்ந்தவர் எங்கப்பா. மூத்த பொண்ணுங்க மூணு பேரையும் தடபுடலாக் கட்டிக் கொடுத்ததுல சரிஞ்சுட்

டார். மிலிட்ரியில் இருந்த பழைய கௌரவப் பிடிவாதத்துக்கு ஏதாச்சும் வேணும். அதான் முருங்கையைப் பிடிச்சுட்டார். ஆண்டவன்தான் நம்ம காதலுக்குக் குழி தோண்டணும்... சாரி, வழி காட்டணும்..."

"குடிநீர் கிடைப்பதற்காக நாங்கள் வகுத்திருக்கும் திட்டங்கள் தொலை நோக்கு உடையவை..."

"அப்படீன்னா...?"

"அடுத்த ஜென்மத்தில தண்ணி கிடைக்கும்னு அர்த்தம்..."



கடந்த ஒரு வார காலமாக ஒரு பொட்டுத் தூக்கமில்லாமல் ஜல் ஜல் சப்த நினைவால், ஒரே அறையில் ஒட்டு மொத்தமாக, முடங்கிக் கிடந்த மாத்ரு பூதமும் அன்னாரின் குடும்பமும் – ஒரு அதிகாலை மூன்று மணிக்கு, குடுகுடுப்பைக்காரன் ஒருவனின் அர்த்தமுள்ள சத்தத்தால் தாறுமாறாக விழித்தனர்.

டிர்ர்ர்... டிர்ர்ர் ...டிர்ர்ர்!

"ஓடியா ஜக்கம்மா! ஓடியா பொட்டக்காடு வேலாயி... கரு வேலங்காடு கருப்பாயி! ஓடியா தாயே ஓடியா... இந்த அய்யாக் குடும்பத்துல குழப்பம் கொண்டாட்டம் போடுது. துயரம் பிரபு தேவாவா ஆடுது! நல்லது நடக்க காலை நீட்டினா... கெட்டது காலை வாருது. புடுச்ச துயரம் பொசுக்குன்னு போறதுக்கு வழி இருக்கு! வழி இருக்கு!"

டிர்ர்ர்...டிர்ர்ர்...டிர்ர்ர்!

கதவைத் திறக்காமல் ஸ்கோப்பாய்க் காதை விரித்தார் மாத்ருபூதம். தொடர்ந்தான் குடுகுடுப்பை –

"மூலையிலே முருங்க மரம் முதலுக்கே மோசம். முத்தான குடும்பத்தை முச்சந்திக்கே கொண்டாந்திரும். வேரோட தூரோட முருங்கையை வெட்டி சாச்சா விட்டுப் போகும் துயரமெல்லாம் – விளஞ்சிடும் நன்மையெல்லாம். ஜக்கம்மா சொல்றா... சடுதியிலே செஞ்சிடுங்கோ..."

டிர்ர்ர்...டிர்ர்ர்... டிர்ர்ர்... குடுகுடுப்பைச் சத்தம் குறைந்து மறைந்தது.

வெள்ளிக்கிழமையான அன்று – சரியான ராகு காலத்தில் வெட்டப்பட்டு விழும் கண்ணான முருங்க மரத்தை கண் கலங்க பார்த்துக் கொண்டிருந்தார் மாத்ருபூதம். வெட்டப்பட்ட முக்கால்வாசி கிளைகள் சேஷாத்ரி வீட்டுப் பக்கம் விழுந்திருந்தன.

"சேஷாத்ரி சார்... மரத்தைக் காய வெச்சு அடுப்பெரிச்சுக்குங்க..."

சொன்ன மாத்ருபூதத்தைப் புன்னகையோடு பார்த்தார் சேஷாத்ரி.

"சரிங்க சார்... ரெண்டு நாளைக்குச் சுடுதண்ணீர் போட இதுதான்..."

புழைக்கடைப் பக்கம் நின்றிருந்த எல்லோரும் போன பிறகு சுதாகரும் ரம்யாவும் மட்டும் மிஞ்சி இருக்க, சுவருக்கு அந்தப் பக்கமிருந்த ரம்யாவைப் பக்கத்தில் வரும்படி சைகை செய்தான் சுதாகர்.

"இனி தடையேதும் இல்லை!" என்று ஏர்செல்ஃபோன் விளம்பர பாணியில் அவன் சொல்ல, "நம்ம காதலுக்கு" என்று ரம்யாவும் கொஞ்ச, அந்த ஜல் ஜல் சத்தத்தையும் – ஊளையையும் சுதாகர் மிமிக்ரி செய்த போது ஆச்சர்யத்தால் வாயைப் பிளந்தான் ரம்யா. ○

# பொன்னியின் செல்வன்



### எண்பதாம் அத்தியாயம்

## நிலமகள் காதலன்



ளவரசிகள் வீற்றிருந்த பல்லக்கைப் பொன்னியின் செல்வரின் குதிரை நெருங்கியது.

சற்றுப் பின்னால் குதிரையை நிறுத்திய வந்தியத்தேவன், "ஜாக்கிரதை! இளவரசிகளின் அந்தப் பொல்லாத பல்லக்கு நம் சாதுக் குதிரையை மோதி விடப் போகிறது!" என்றான்.

கிட்டத்தட்ட அதே இடத்தில் முன்னொரு தடவை நந்தினியின் மூடு பல்லக்கின் மீது அவன் குதிரையைக் கொண்டு போய் மோதி விட்டுக் "குதிரையைப் பல்லக்கு மோதுகிறது!" என்று கூக்குரலிட்டது அவனுக்கு நினைவு வந்தது. அச் சம்பவம் நடந்து ஆறு மாதம் கூட முழுமையாக ஆகவில்லை. ஆனால் இந்தச் சிறிய காலத்துக்குள் எத்தனை எத்தனை முக்கியமான நிகழ்ச்சிகள் நடந்தேறி விட்டன!

குந்தவை வந்தியத்தேவனுடைய வார்த்தைகளினால் ஏற்பட்ட பூரிப்பை அடக்கிக் கொண்டு, "தம்பி! உங்களைப் பார்த்தால் ஏதோ குதூகலமான விஷயத்தைப் பற்றிப் பேசிக்கொண்டு வருவதாகத் தோன்றுகிறதே! உங்களுடைய திருமுகங்கள் அவ்வளவு மலர்ச்சியுடன் விளங்குகின்றனே!" என்றாள்.

"ஆம், அக்கா! குதூகலமான விஷயம் பற்றித்தான் பேசிக் கொண்டு வந்தோம். ஆனால் அது உன் தோழி வானதிக்கு அவ்வளவு குதூகலம் தராது. என்னுடைய திருமண நாள் நெருங்கி வந்து கொண்டிருக்கிறதல்லவா? நான் காதல் கொண்டு மணந்து கொள்ளப் போகும் மங்கையைப் பார்த்து மகிழ்ந்தோம்.

**அமரர் கல்கி**

அவளுடைய ரூபலாவண்யங்களைப் பற்றிப் பேசிக் கொண்டு வருகிறோம்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

சற்று முன் பிரகாசமாக விளங்கிய அந்த இரு பெண்களின் முகங்களும் உடனே வாட்டமுற்றன. வானதி தலையைக் குனிந்துகொண்டாள். குந்தவையின் முகத்தில் கோபம், வியப்பு, ஐயம், ஆத்திரம் முதலிய வெவ்வேறு பாவங்கள் தோன்றி மறைந்தன.

''இது என்ன வெட்கமற்ற பேச்சு? இந்தப் பெண்ணின் மனத்தை வருத்தப்படுத்துவதில் உனக்கு என்ன சந்தோஷம்?'' என்றாள்.

வானதி குனிந்த தலையை நிமிர்த்திக் குந்தவையைப் பார்த்து, ''அக்கா! இது என்ன வார்த்தை? எனக்கு எதற்காக வருத்தம்?'' என்றாள்.

ஒன்றுக்கும் மறுமொழி சொல்லாமல் பொன்னியின் செல்வர் புன்னகை பூத்த முகத்துடன் நிற்பதைக் கண்ட இளைய பிராட்டி ''கொள்ளிடக் கரைக்கல்லவா போய்த் திரும்புகிறீர்கள்? அங்கே எந்தப் பெண்ணைப் பார்த்தீர்கள்? எந்த ஊர்? என்ன பேர்? என்ன குலம்?'' என்று கேட்டுக்கொண்டே போனாள்.



ப்போது வந்தியத்தேவன் குறுக்கிட்டு, ''தேவி! இளவரசர் மணக்கப் போகும் குல மகள் யாரையும் நாங்கள் பார்த்துவிட்டு வரவில்லை. இந்தப் பஞ்சநதி தீரத்தில் பொலிந்து விளங்கும் நில மாமகளைத்தான் நெடுகிலும் பார்த்து வியந்து கொண்டு வந்தோம். சோழவள நாட்டின் இயற்கை அழகுகளைப் பற்றிப் பேசிக் கொண்டு வந்தோம். இளவரசர் இந்த அழகிய நாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்ளும் நாள் நெருங்கி வருகிறதல்லவா? இவர் இந்த இரு நிலமடந்தையின் பேரில் கொண்ட காதலைப் பற்றித்தான் குறிப்பிட்டார்!'' என்றான்.

''ஆகா! என் சகோதரனுக்கு இப்படியெல்லாம் விகசிதமாகப் பேச முன்னெல்லாம் தெரிந்திருக்கவில்லை. அவனுக்குத் தாங்கள் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது!'' என்றாள்.

அருள்மொழிவர்மர் சிரித்துவிட்டு, ''நண்பரே! தங்களுக்கு நன்றாக வேண்டும்! தங்களுடைய சிநேகத்துக்குப் பிறகு எனக்குத் தந்திர மந்திரமெல்லாம் வந்திருக்கிறது என்று முன்னமே நான் சொல்லவில்லையா? என் தமக்கை யாருக்கும் அவ்விதமே தோன்றியிருக்கிறது, பாருங்கள்!'' என்றார்.

''இது என்ன வீண் பழி! தமக்கையும் தம்பியும் ஒத்துப் பேசிக்கொண்டது போல் ஒரே மாதிரி என் பேரில் குற்றம் சுமத்துகிறீர்களே?'' என்றான் வந்தியத்தேவன்.

''இன்னும் தங்கள் பேரில் பல குற்றங்கள் இருக்கின்றன. என் தம்பி சொல்லியிருக்க முடியாத குற்றங்களும் இருக்கின்றன. அவற்றையெல்லாம் நடுச்சாலையில் நின்று சொல்ல முடியாது!'' என்றாள் குந்தவை.

வந்தியத்தேவன், ''நான் சந்தேகித்தது சரியாய்ப் போய்விட்டது!'' என்றான்.

''என்ன சந்தேகித்தீர்கள்?''

''என்னை ஈழநாட்டுப் படைக்குச் சேநாதிபதியாக்கி அனுப்புவது என் குற்றங்களுக்காக எனக்குத் தீவாந்தர சிட்சை விதிப்பதேயாகும் என்று சந்தேகித்தேன்.''

''பார்த்தீர்களா, அக்கா! சோழ குலத்தாரின் நன்றியறிதலில் இவருக்கு எவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்று தெரிகிறது அல்லவா?''

''நமக்கு இவரிடம் நன்றி சிறிதும் இல்லை என்பது உண்மைதான்!''

''இது என்ன, நீங்களும் இப்படிச் சொல்லுகிறீர்களே?''

''அன்னியர்கள் செய்யும் உதவிக்கு நன்றி செலுத்தலாம். நண்பர்களுக்குள் நன்றி எப்படி ஏற்படும்? திருவள்ளுவர் சொல்லியிருப்பது ஞாபகமில்லையா? 'உடுக்கை இழந்தவன் கைபோல் இடுக்கண் களைவதாம் நட்பு!' நழுவிய உடையை எடுத்துக் கட்டி விட்டதற்காக இடது கைக்கு நன்றி செலுத்த வேணுமா?'' என்றாள் குந்தவை.

''தேவி! நன்றி செலுத்த வேண்டியதேயில்லை. தண்டனை விதிக்காமலிருந்

தால், அதுவே பெரிய நன்றியாகும்!''

"தம்பி! நீயும் சரி, இவரும் சரி, ஒன்று நினைவு வைத்துக்கொள்ளுங்கள். இவரை எனக்கு உதவியாயிருக்கும் படியாக நம் தமையன், வீர சொர்க்கம் எய்திய கரிகாலன், அனுப்பி வைத்தான். அந்தக் கடமையிலிருந்து இவரை நான் இன்னும் விடுதலை செய்து விடவில்லை!'' என்றாள் குந்தவை.

''இவருக்கு விடுதலை தரவே வேண்டாம். அக்கா! ஆயுள் தண்டனையாகவே அளித்தாலும் எனக்குச் சம்மதந்தான்!'' என்றார் இளவரசர்.

"இலங்கையில் இவரால் எனக்கு ஆக வேண்டிய காரியங்கள் சில இருக்கின்றன'' என்றாள் குந்தவை.

"போவதற்கு முன்னால் தங்களிடம் விடைபெற்றுச் செல்வேன், தேவி!'' என்றான் வந்தியத்தேவன்.

''அப்படியானால், பழையாறைக்குத் தாங்கள் வந்து என்னிடம் விடை பெறும்படி இருக்கும்'' என்றாள் குந்தவைப்பிராட்டி.

''அக்கா! இப்போது எங்கே புறப்பட்டீர்கள்?'' என்று அருள்மொழிவர்மர் சிறிது வியப்புடன் கேட்டார்.

"திருவையாற்றுக்குப் போகிறோம். இன்று மார்கழித் திருவாதிரைத் திருநாள் அல்லவா? செம்பியன் மாதேவியும் மதுராந்தகரும் பூங்குழலியும் காலையிலேயே சென்றார்கள். நீங்களும் வருகிறீர்களா?'' என்றாள் குந்தவை.

''இல்லை; நாங்கள் இப்போது வரவில்லை. திருவையாறு நகருக்குள் போகக் கூடாதென்றுதான் ஆற்றங்கரையோடு மேற்கே சென்று திரும்பி வந்தோம்.''

"அப்பர் பெருமான் திருவையாற்றில் கைலாசத்தையே கண்டு பரவசமடைந்தார். உங்களுக்கு அங்கே போகவே பிடிக்கவில்லை போலிருக்கிறது. ஒரு வேளை நீங்களும் வீர வைஷ்ணவர்கள் ஆகி விட்டீர்களா, என்ன?''

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. திருவையாறு சென்றால், அப்பர் பெருமானைப் போல் அங்கே போக வேண்டுமென்பது என் எண்ணம்.''

"அப்பர் எப்படிச் சென்றார்?''

''அவருடைய பாடலிலேயே சொல்லியிருக்கிறாரே! 'யாதும் சுவடு படாமல்' சென்றார். ஆடம்பரம் எதுவுமில்லாமல், தாம் திருநாவுக்கரசர் என்பதைக் காட்டிக் கொள்ளாமல், பூஜைக்காகப் புஷ்பமும் நீரும் கொண்டு சென்ற அடியார் கூட்டத்தின் பின்னால் சென்றார். அதனால் திருவையாற்றில் கைலாசத்தையே அவர் காண முடிந்தது. நாம் அங்கே இந்த இராஜரீக ஆடம்பரங்களுடன் சென்றால், நாமும் இறைவனைத் தரிசிக்க முடியாது; ஜனங்களும் சுவாமி தரிசனத்தை மறந்துவிட்டு நம்மைச் சுற்றிச் சூழ்ந்து கொண்டு நிற்பார்கள்...!''

''ஆமாம், ஆமாம்! உன்னுடைய ஜாதக விசேஷம் அப்படி! உன்னைக் கண்டதும் மக்கள் சூழ்ந்து கொண்டு 'மன்னர் மன்னருக்கு ஜே! பொன்னியின் செல்வருக்கு ஜே!' என்று கோஷமிடத் தொடங்குவார்கள். ஆனால் எங்களுக்கு அவ்வளவு அபாயம் இல்லை. மேலும் நாங்கள் ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் போகவும் மாட்டோம். திருவாதிரைத் திருநாளுக்காகச் சுவாமி எழுந்தருளல் நடக்கும்போது, திருவையாற்றிலுள்ள நம் அரண்மனை மேல் மாடத்திலிருந்தே ஐயாறுடை இறைவனைத் தரிசித்துக் கொள்வோம்.''

"அக்கா! ஒரு பழம் பாடல் நினைவு இருக்கிறதா? அண்ட சராசரங்களையும், அகில புவனங்களையும், ஆகாச வெளியிலுள்ள எல்லா நட்சத்திரங்களையும் படைத்தவர் இறைவன். அவரை 'ஆதிரையான்' என்றும், 'திருவாதிரை நட்சத்திரத்துக்கு மட்டும் உரியவன்' என்றும் மக்கள் கருதுவது என்ன பேதைமை? - இப்படிப்பட்ட கருத்துள்ள அந்தப் பாடல் தங்களுக்கு நினைவு இருக்கிறதா?''

"நினைவிருக்கிறது, தம்பி! ஆனால் எல்லா நட்சத்திரங்களுக்கும் உரியவன் திருவாதிரைக்கும் உரியவன்தானே?''

"சரி, நீங்கள் போய் வாருங்கள்! எப்போது தஞ்சைக்குத் திரும்பி வருவீர்கள்?''



''தஞ்சைக்கு இப்போது நாங்கள் திரும்பப் போவதில்லை. திருவையாற்றிலிருந்து பழையாறை போகிறோம்.''
''என்ன, என்ன? என்னுடைய மகுடாபிஷேகத்துக்கு இல்லாமலா போகிறீர்கள்?'' என்றார் இளவரசர்.

"ஆம், ஆம்! உன்னுடைய மகுடாபிஷேக வைபவத்தில் எனக்கும் வானதிக்கும் என்ன வேலை?"

"அக்கா! தாங்கள் இல்லாமல் என்னுடைய பட்டாபிஷேகம் நடைபெறாது!"

"எல்லாம் நடைபெறும். ஏன் நடைபெறாது? பட்டாபிஷேகத்துக்கு நாள் வைத்துக் கொடுத்தவர் யார்? இராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்த்துச் சொன்னவரின் சந்ததியில் வந்தவர் அல்லவே?"

"எனக்கு நாள் நட்சத்திரம், சோதிடம்- ஆருடம் எதிலும் நம்பிக்கை இல்லை, அக்கா! நம் கடமையைச் செய்யும் எல்லா நாளும் நல்ல நாள்தான்; சோம்பியிருக்கும் நாட்களே கெட்ட நாட்கள்!" என்றார் பொன்னியின் செல்வர்.

"உன்னுடைய வாழ் நாட்கள் எல்லாம் அத்தகைய நல்ல நாட்களாகவே இருக்கட்டும், தம்பி! நாங்கள் சென்று ஐயாறப்பரிடமும் அறம் வளர்த்த நாயகியிடமும் உனக்காகப் பிரார்த்தனை செய்கிறோம்!" என்றாள் குந்தவை.

"எனக்காக என்ன பிரார்த்தனை செய்யப் போகிறீர்கள்?"

"நிலமகள் மேல் நீ கொண்டிருக்கும் காதல் பூர்த்தியாகட்டும்; உன் மகுடாபிஷேகம் விக்கினமின்றி நடைபெறட்டும் என்று ஐயாறுடைய இறைவரிடம் பிரார்த்திக்கிறோம். உன் உள்ளம் சோழர் தொல்குடிக்கு உரிய அறவழியிலிருந்து விலகாமலிருக்கட்டும் என்று அறம் வளர்த்த நாயகியின் சந்நிதியில் பிரார்த்தித்துக் கொள்கிறோம்."

"அப்படியானால், நீங்கள் எனது பட்டாபிஷேகத்துக்கு நிச்சயமாக இருக்கப் போவதில்லையா?"

"பழையாறையிலிருந்து அகக் கண்ணால் கண்டு மகிழ்கிறோம்."

"அக்கா! தாங்கள் இந்தக் கொடும்பாளூர்க் கோமகளின் பிடிவாதத்துக்குச் சப்பைக் கட்டுக் கட்டுகிறீர்கள். இவள் என்னுடன் சோழ சிங்காதனம் ஏறுவதற்கு மறுத்தால், உலகமே அஸ்தமித்து விடும் என்று எண்ணுகிறாள். இவளுடைய வீண்பிடிவாதம் விபரீதத்தில் முடியப் போகிறது. இவளுக்குப் பதிலாகச் சோழரின் சிங்காதனத்தில் வேறொரு பெண் அமர்ந்து விடப் போகிறாள்! அப்புறம் என் பேரில் குற்றம் சொல்லிப் பயன் ஒன்றுமில்லை" என்றார் இளவரசர் பொன்னியின் செல்வர்.

"நான் இவர் மீது என்றும் குற்றம் சொன்னதில்லை; இனிமேலும் குற்றம் சொல்லப் போவதில்லை, அக்கா!" என்றாள் கொடும்பாளூர் இளவரசி.

"நீ சொன்னாலும் பயனில்லை. வானதி! மண்ணாசை கொண்டவர்களின் காதில் வேறு எதுவும் ஏறாது!" என்றாள் இளையபிராட்டி குந்தவை.

"இந்த மண்ணாசையை என் மனத்தில் உண்டாக்கியவர் தாங்கள்தான் என்பதை மறந்துவிட வேண்டாம். பெண்ணாய்ப் பிறந்த தாங்களே இந்த அழகிய சோழ நாட்டை விட்டுப் போக மனம் வரவில்லையென்றும், அதற்காகவே கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லையென்றும் பலமுறை என்னிடம் சொன்னதில்லையா!" என்றார் அருள்மொழி.

"அப்போதெல்லாம் என் வார்த்தைகள் உன் காதில் ஏறவே இல்லை. உலகத்தில் இன்னும் எத்தனையோ அழகிய நாடுகள் இருக்கின்றன என்று சொல்லி வந்தாய்! இந்த வாணர் குலத்து வீரரின் போதனைதான் உன்னை இப்படி நிலமடந்தையின் காதலன் ஆக்கிவிட்டது!" என்றாள் குந்தவைப் பிராட்டி.

"தெய்வமே! அந்தப் பழியும் என் பேரிலேதானா வந்து விழ வேண்டும்?" என்றான் வந்தியத்தேவன்.

"எவ்வளவோ பெரிய பயங்கரமான பழியைச் சுமந்தீர்களே? இந்தச் சிறிய பழிகளுக்கா பயந்துவிடப் போகிறீர்கள்? தம்பி! வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டோம்! சுவாமி எழுந்தருளும் நேரம் நெருங்கிவிட்டது! போகிறோம்!" என்று கூறிக் குந்தவை தேவி சிவிகையாளருக்குச் சமிக்ஞை செய்தாள்.

பல்லக்கு மேலே சென்றது.

சிறிது நேரம் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்துவிட்டுப் பொன்னியின் செல்வரும் தஞ்சையை நோக்கிக் குதிரையைச் செலுத்தினார்.

சற்றுத் தூரம் சென்றதும் பக்கத்தில் நெருங்கி வந்து கொண்டிருந்த வந்தியத்தேவனை நோக்கி, "நண்பரே! இந்தப் பெண்மணிகள் உண்மையில் சுவாமி தரிசனத்துக்குப் போகிறதாக எனக்குத் தோன்றவில்லை. குடந்தை சோதிடர் இப்போது திருவையாற்றுக்கு அருகில் குடி வந்து விட்டாராம்! அவரைப் பார்த்துச் சோதிடம் கேட்பதற்காகவே போகிறார்கள்!" என்றார்.

"ஐயா! குடந்தை சோதிடரை விடத் தாங்களே பெரிய சோதிடராயிருக்கிறீர்களே!" என்றான் வந்தியத்தேவன்.

## எண்பத்து ஒன்றாம் அத்தியாயம்

# பூனையும் கிளியும்

பொன்னியின் செல்வர் ஊகித்து ஆருடம் கூறிய வண்ணமே நடந்தது.

குந்தவை தேவியும் வானதியும் திருவையாற்றிலிருந்த சோழ மாளிகை போய்ச் சேர்ந்ததும், அங்கேயே பல்லக்கையும் பரிவாரங்களையும் நிறுத்தினார்கள். செம்பியன்மாதேவியும் அவருடைய மகனும் மருமகளும் கோயிலுக்குச் சென்றிருப்பதைத் தெரிந்துகொண்டார்கள். தாங்களும் காவலர்களிடம் சொல்லிவிட்டு, ஒரே ஒரு வீரனை மட்டும் துணைக்கு அழைத்துக்கொண்டு சோதிடர் வீட்டைத் தேடிச் சென்றார்கள்.

ஆம்; குடந்தை சோதிடர் அங்கே வெள்ளத்தில் தமது வீடு அடித்துக் கொண்டு போகப்பட்ட பிறகு திருவையாற்றுக்கு வந்துவிட்டார். நகரின் கிழக்கு ஓரத்தில் காவேரிக் கரையில் சிறிய வீடு ஒன்று கட்டிக் கொண்டு அங்கே குடியிருக்கத் தொடங்கினார்.

இனிமேல் பழையாறை நகரைக் காட்டிலும் தஞ்சாவூர் அதிக முக்கியத்துவம் பெறலாம் என்று அவர் ஜோசியத்தின் மூலம் அறிந்துகொண்டதும், ஒருவேளை அவர் திருவையாற்றுக்கு வந்து குடியேறியதற்குக் காரணமாயிருக்கலாம்.

ஜோசியர் வீட்டின் வாசற்படியில் அவர்கள் பிரவேசிக்கும்போது, உள்ளேயிருந்து மிக இனிய மழலைக் குரலில், "வாருங்கள், ஆடலரசிகளே வாருங்கள்! நடன ராணிகளே, வாருங்கள்!" என்று யாரோ வரவேற்றதைக் கேட்டுத் தேவிமார்கள் இருவரும் வியப்படைந்தார்கள். முன்னே ஒரு முரட்டுச் சீடனைக் காவற்காரனாக வைத்திருந்தவர் இப்போது இப்படிப் பரிந்து உபசரித்து அழைப்பதற்கு யாரை அமர்த்தியிருக்கிறார் என்ற எண்ணத்துடன் உள்ளே பிரவேசித்தார்கள்.

கூரையிலிருந்து தொங்கிய கூண்டில் அழகிய பச்சைக் கிளி ஒன்றைக் கண்டதும் அவர்களுடைய வியப்பு நீங்கியது. அந்தப் பச்சைக் கிளியும் தலையை இப்படியும் அப்படியும் அசைத்து, குன்றுமணி போன்ற அதன் சிறிய கண்களால் அவர்களை உற்றுப் பார்த்துவிட்டு, மறுபடியும், "வாருங்கள், ஆடல் அரசிகளே, வாருங்கள்!" என்றது.

கிளியின் குரலையும் பெண்மணிகளின் பாதச் சிலம்பின் ஒலியையும் கேட்டு விட்டுச் சோதிடரும் உள்ளேயிருந்து கூடத்துக்கு வந்தார்.

தேவிமார்களைப் பார்த்துத் திடுக்கிட்டவராய், "வாருங்கள்! தேவிமார்களே! வாருங்கள்! இந்தக் குடிசை இன்றைக்குத்தான் பாக்கியம் செய்தது!" என்றார்.

பச்சைக் கிளியும் தன் பவள வாயைத் திறந்து, "இந்தக் குடிசை இன்றைக்குத் தான் பாக்கியம் செய்தது!" என்றது.

சோதிடர் அதைப் பார்த்து "சீச்சீ! சற்று நேரம் சும்மா இரு! வாயை மூடிக் கொள்!" என்றார்.

"ஐயா! அதை ஏன் கோபித்துக் கொள்கிறீர்கள்? வருகிறவர்களுக்கு நல்ல முறையில்தான் வரவேற்பு அளிக்கிறது! தினந்தினம் இங்கு பலர் வந்து இந்தக் குடிசையை 'இன்றைக்குத்தான் பாக்கியம் செய்த குடிசை'யாகச் செய்வார்கள் போலிருக்கிறது!" என்றாள் இளைய பிராட்டி குந்தவை.

"வாருங்கள்! நடன ராணிகளே! வாருங்கள்!" என்றது கிளி.

"ஜோசியர் மறுபடியும் அதை அதட்டிவிட்டு, "தேவிமார்களே!



மன்னிக்க வேண்டும்! திருஞான சம்பந்தப் பெருமான் இந்தத் திருவையாற்றுக்கு வந்திருந்தபோது வீதிதோறும் ஆடல் அரங்குகளைக் கண்டார். அவற்றில் மங்கைமார்கள் நடனம் பயிலும்போது பாதச் சலங்கைகள் கலீர் கலீர் என்று ஒலிப்பதையும் கேட்டார். அவருடைய தெய்வீகப் பாசுரங்களிலும் பாடியிருக்கிறார். அந்த நாளில் போலவே இன்றைக்கும் இந்தத் திருவையாற்றில் நடனக் கலை பயிலும் நங்கைமார்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்கள் அடிக்கடி ஜோதிடம் கேட்க இந்தக் குடிசையைத் தேடி வருகிறார்கள்! அவர்களுக்கு உகப்பாக இருக்கட்டும் என்று இந்தக் கிளிக்கு இவ்வாறு சொல்லப் பழக்கி வைத்தேன்! தயவு செய்து மன்னிக்க வேண்டும்!" என்றார்.

"இன்றைக்கு அந்த ஆடல் அரசிகள், நடன ராணிகள் யாரையும் இங்கே காணவில்லையே?'' என்றாள் குந்தவை.

"தேவி! இன்றைக்குத் திருவாதிரைத் திருநாள். ஆகையால் ஆடலரசிகளும் நடனராணிகளும் ஐயாற்று இறைவன் சந்நிதியில் சேவை செய்யப் போயிருப்பார்கள். ஆனால் உண்மை அரசிகளாகிய நீங்களே வந்து விட்டீர்கள். இந்தக் குடிசை பாக்கியம் செய்தது; நான் பாக்கியம் செய்தவன்!" என்று பரவசமாகக் கூறினார் சோதிடர்.

பிறகு, ''தயவு செய்து அமருங்கள்! இந்த ஏழையிடம் என்ன கேட்க வந்தீர்களோ, அதைக் கேளுங்கள்! தெரிந்த வரையில் சொல்லுகிறேன்!'' என்றார்.



ளவரசிகள் இருவரும் உட்கார்ந்தார்கள். குந்தவை ஒருமுறை பெருமூச்சு விட்டு, "சோதிடரே! என்னத்தைக் கேட்பது? இந்தச் சோதிட சாஸ்திரத்தில் ஏதேனும் உண்மை இருக்கிறதா? - என்ற கேள்வியைத் தான் முதலில் கேட்கத் தோன்றுகிறது!" என்றாள்.

"தேவி! தாங்கள் இப்படிக் கேட்டால், நான் என்ன சொல்லட்டும்? நம்பிக்கை உள்ளவர்களுக்குச் சோதிட சாஸ்திரம் உண்மை; நம்பிக்கை இல்லாதவர்களுக்கு அது பொய்தான்!" என்று சொன்னார் சோதிடர்.

"நான் ஜோதிட சாஸ்திரத்தில் பூரண நம்பிக்கை வைத்துத்தான் இருந்தேன். ஆனால் அந்த சாஸ்திரம்தான் என்னைக் கைவிட்டு விட்டதே!"

"எந்த விதத்தில் தங்களைக் கைவிட்டு விட்டது, அம்மணி?"

''தாங்கள் சோதிடம் பார்த்துச் சொன்னபடி எது நடந்திருக்கிறது? என் தமையன் இப்படி அகால மரணம் அடைவான் என்று நீர் எப்போதாவது என்னிடம் சொன்னீரா?"

"நான் சொல்லலாமா, தேவி! தெரிந்திருந்தாலும் என் வாயைத் திறந்து சொல்லலாமா? சொல்லியிருந்தால், என்னையும் பாண்டிய நாட்டு ஆபத்து உதவிகளுடனே சேர்த்திருக்க மாட்டார்களா? இராஜ குடும்பங்களையும், இராஜாங்கக் காரியங்களையும் பற்றி ஏதோ பொதுப் படையாகத்தான் சொல்லலாம். 'கண்டம் இருக்கிறது' 'இடையூறு இருக்கிறது' 'கெட்டக்கிரஹம் பார்க்கிறது' என்று சொல்வதே ஆபத்தானது. மேலும் ஆதித்த கரிகாலரின் ஜாதகம் என்னிடம் இல்லவும் இல்லை; அதை நான் பார்த்ததும் இல்லை!" என்றார் சோதிடர்.

"நீங்கள் பார்த்திருந்தாலும் சொல்லியிருக்க மாட்டீர்கள்; சொல்லியிருந்தாலும் அந்த விபத்தைத் தடுத்திருக்க முடியாது அல்லவா?"

"அது எப்படி முடியும், தாயே! நான் என்ன பிரம்மாவா? எழுதின எழுத்தைப் பிரம்மாவினாலேதான் அழித்து எழுத முடியுமா?"

''அப்படியென்றால், சோதிடம் பார்ப்பதில் என்ன பயன், சோதிடரே!"

"தாயே! இது என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? தங்களைப் போன்றவர்கள் சோதிடம் பார்க்காவிட்டால், என்னைப் போன்றவர்கள் பிழைப்பது எப்படி? இந்த ஏழையின் குடிசையில் இராஜ குமாரிகளின் பாதங்கள் படுவதுதான் எப்படி?" என்றார் சோதிடர்.

தைக் கேட்டுக் குந்தவை கலகலவென்று சிரித்துவிட்டாள். வானதியின் முகத்திலும் புன்னகை அரும்பியது.

''சோதிடரே! இங்கே சோதிடம் கேட்க வருகிறவர்கள் எல்லாரிடமும் இப்படித்தான் சொல்லுவீர்களா?'' என்று இளையபிராட்டி கேட்டாள்.

''எல்லாரிடமும் இப்படிச் சொல்லுவேனா? கலைமகளும் திருமகளும் ஓர் உருக்கொண்டு அவதரித்திருப்பதாகத் தங்களைப் பற்றி உலக

மெல்லாம் புகழ் பரவியிருக்கிறது. அத்தகைய தங்களிடம் விவாதம் செய்து என்னால் சமாளிக்க முடியுமா? அதனாலே அவ்வாறு சொன்னேன். ஆனாலும், தாயே! நான் சோதிடம் பார்த்துச் சொல்லாததை வைத்துக் கொண்டு சோதிட சாஸ்திரத்தின் உண்மையைத் தாங்கள் முடிவு கட்டலாமா? சொன்னதை வைத்துக்கொண்டு அல்லவா முடிவு கட்ட வேண்டும்? பொன்னியின் செல்வரின் அதிர்ஷ்ட ஜாதகத்தைப் பற்றிச் சொன்னேன். இடையில் என்னென்னமோ நேர்ந்து, கடைசியில் அவர் இந்தப் பூ மண்டலத்தின் சக்கரவர்த்தியாகும் கட்டம் நெருங்கி விட்டதல்லவா? பட்டாபிஷேகத்துக்குக்கூட நாள் வைத்தாகி விட்டதாமே?'' என்றார் சோதிடர்.

"ஐயா! பொன்னியின் செல்வரின் பட்டாபிஷேகத்துக்கு நாள் பார்ப்பதற்குத் தங்களிடம் யாரும் வரவில்லையா?''

"இல்லை, தேவி! அதற்கு அரண்மனைப் புரோகிதர்கள் இருக்கிறார்களே! முதன்மந்திரி அநிருத்தரே சோதிட சாஸ்திரத்தில் வல்லவர் ஆயிற்றே!''

"ஆமாம்; தை மாதம் ஏழாம் தேதி நாள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அது நல்ல நாள்தானா, ஜோசியரே!''

"ரொம்ப நல்ல நாள், அம்மா! மிக நன்றாக ஆலோசித்துப் பார்த்துத்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள்.''

"பட்டாபிஷேகத்துக்கு உகந்த நல்ல நாளாக இருக்கலாம். ஆனால் பட்டாபிஷேகம் அன்று நிச்சயம் நடக்குமா என்று பார்த்துச் சொல்லுங்கள்!''

"இது என்ன கேள்வி, தேவி! ஏன் நடக்காமற் போக வேண்டும்?''

"ஸ்ரீ ராமருடைய பட்டாபிஷேகத்துக்கு நல்ல நாளாகத்தான் பார்த்துக் குறிப்பிட்டார்கள். ஆனால் அன்று அவருக்குப் பட்டாபிஷேகம் நடக்காமற் போய்விடவில்லையா?''

"தேவி! வெறும் பட்டாபிஷேகம் செய்து கொள்வதைக் காட்டிலும் கோடி மடங்கு பெருமை அன்று ஸ்ரீ ராமருக்கு ஏற்பட்டது. அதனாலேயே இராமாயணம் பிறந்தது! அது போகட்டும்! அம்மாதிரி சந்தேகம் தங்களுக்கு ஏன் இப்போது ஏற்பட வேண்டும்? தாங்களே பட்டாபிஷேகம் அன்று நடைபெறக்கூடாது என்று விரும்புவதாகக் காண்கிறதே!''

"தங்கள் ஊகம் உண்மைதான்!''

"பொன்னியின் செல்வர் சிங்காதனம் ஏறுவதில் தங்களைக் காட்டிலும் ஆனந்தமடையக் கூடியவர் வேறு யாருமில்லை என்று அல்லவா உலகம் கருதுகிறது?''

"நியாயமாக நான் அத்தகைய ஆனந்தம் அடைய வேண்டியவள்தான். ஆனால் இந்தக் கொடும்பாளூர்ப் பெண்ணின் மூடப் பிடிவாதம் எனக்கு அதில் சந்தோஷம் இல்லாமற் செய்து விட்டது. குடந்தையில் தங்கள் வீட்டில் இவள் செய்த சபதம் நினைவிருக்கிறதா?''

"சபதமா? அன்று பல விபரீத சம்பவங்கள் நிகழ்ந்தன. ஒன்றும் சரியாக நினைவில் இல்லை!'' என்றார் சோதிடர்.

"இவளிடம் அசூயை கொண்ட ஓடக்காரப் பெண் பூங்குழலி ஏதோ சொன்னாள் என்பதற்காக இவள் ஒரு சபதம் செய்தாள். தன் உயிர் உள்ள வரையில் சிங்காதனம் ஏறுவதில்லை யென்று கூறினாள்! உயிர் போன பிறகு சிங்காதனம் ஏற முடியுமா, சோதிடரே!''

"முடியாதுதான்!''

"அத்தகைய விபரீதமான சபதத்தைக் கேட்டு விட்டுத்தான் காவேரித் தாய் கோபங் கொண்டு பொங்கி வந்து இவளை வெள்ளத்தோடு அடித்துக் கொண்டு போகப் பார்த்தாள்!''

"ஆமாம்; எனக்குக் கூட நினைவு வருகிறது. அந்தச் சபதம் ஏதோ விளையாட்டு என்றல்லவா நினைத்தேன்?''

"அதுதான் இப்போது வினையாக முடிந்திருக்கிறது! இவள் சிங்காதனம் ஏற மாட்டாளாம் என் சகோதரனுடன் சிங்காதனம் ஏறிப் பட்டமகிஷியாக விளங்குவதற்கு வேறு யாரையாவது

கலியாணம் செய்து கொள்ள வேண்டுமாம். இவள் அவனுடைய அரண்மனையில் தாதிகளோடு தாதியாக இருந்து தொண்டு செய்து வருவாளாம்! இதையெல்லாம் கேட்பதற்கே எனக்குச் சகிக்கவில்லை. சோதிடரே! தாங்கள் இந்தப் பெண்ணைப் பற்றிக் கூறியதெல்லாம் நினைவிருக்கிறதா?''

சோதிடர் முகமலர்ச்சியுடன் "நன்றாக நினைவிருக்கிறது. தேவி! நான் சேர்த்து வைத்திருந்த சோதிட நூல்களுடன் பற்பல தேசங்களின் இராஜகுமாரர்கள் - ராஜகுமாரிகளின் ஜாதகங்களையும் காவேரித் தாய் கொண்டு போய்விட்டாள். ஆனால் இந்தப் பெண்ணரசியின் ஜாதகம் மட்டும் என் மனச் சுவடியில் படிந்திருக்கிறது. இவருடைய கையில் உள்ள ரேகைகள் என் கண் முன்னாலேயே நிற்கின்றன. அம்மணி! நான் கூறிய சோதிடத்தில் வேறு எது பலித்தாலும் பலிக்காவிட்டாலும் இவரைப் பற்றி நான் கூறியது பலிக்காமற் போகாது!''

"இந்தப் பெண்ணைப் பற்றி என்ன சொன்னீர்கள் என்பது தங்களுக்கு இப்போது நினைவிருக்கிறதா?''

"நன்றாக நினைவிருக்கிறது. இவரை மணந்து கொள்ளும் பாக்கியசாலி திருமடந்தையையும் நிலமடந்தையையும் ஒருருவத்தில் மணந்து கொண்டவனவான் என்று சொன்னேன். இந்த மாதரசியைப் பார்க்கும் பாக்கியத்துக்காகத் தேச தேசாந்தரங்களில் உள்ள பேரரசிமார்கள் தவங் கிடப்பார்கள் என்று கூறினேன். இவருடைய திருவயிற்றில் உதிக்கப் போகும் புதல்வன் பிறக்கும்போதே ஜயக் கொடி நாட்டிக் கொண்டு பிறப்பான். அவன் போகுமிடமெல்லாம், அவன் பார்க்குமிடமெல்லாம் வெற்றி என்று சொன்னேன்...''

"ஐயா! நீங்கள் இப்படியெல்லாம் சொல்லச் சொல்ல என்னுடைய கவலைதான் அதிகமாகிறது!''

சோதிடர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, "தேவி! கவலையா? எதற்குக் கவலை? சோழ சாம்ராஜ்யத்துக்கும் சோழர் குலத்துக்கும் கவலைப்பட வேண்டிய காலமெல்லாம் போய்விட்டது. இன்றைக்கு ஒரு விசேஷ நாள் என்பது நினைவிருக்கிறதா?''

''ஆம்; இன்றைக்கு மார்கழித் திருவாதிரை நாள்! சிவனுக்கு உகந்த திருநாள்!''

"இது சோழர் குலத்துக்கும் உகந்த நாள்; தெய்வத் தமிழகத்துக்கும் உகந்த நாள், தேவி! கேளுங்கள்! இதே மார்கழித் திருவாதிரையில் வருகிற ஆண்டுகளிலே ஒன்றில் ஓர் அற்புதம் நடக்கப் போகிறது! சங்கு சக்கரம் கையில் ஏந்தாமலே திருமாலின் பூரண அம்சமான குழந்தை ஒன்று உதிக்கப் போகிறது! அந்தக் குழந்தையின் மூலம் இந்தச் சோழ நாடு இதற்கு முன் என்றும் கண்டிராத மகோந்நதத்தை அடையப்போகிறது! ஆகா! என்னென்ன அதிசயங்கள் நடக்கப் போகின்றன? அவற்றைப் பார்க்க நான் ஒருவேளை உயிரோடு இருக்க மாட்டேன்; தாங்கள் பார்த்து மகிழ்வதற்கு நீண்ட காலம் வாழ்வீர்கள்!''

இப்படிச் சோதிடர் ஆவேசம் வந்தவர் போல் பேசி வருகையில் குந்தவையும் மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ஏதோ சப்தம் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கூண்டிலிருந்த கிளி சடசடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டிருந்தது. அதன் மேல் தாவ முயன்று கொண்டிருந்த பூனையின் மீது வானதி ஓர் ஓலைச் சுவடியை எடுத்து எறிந்தாள்!

எறிந்துவிட்டு, ''அக்கா! சோதிட சாஸ்திரம் பயனுள்ளதுதான். சோதிடச் சுவடியைக் கொண்டுதான் இந்த அழகான இனிய வார்த்தை பேசும் கிளியைக் காப்பாற்ற முடிந்தது! இல்லாவிட்டால் அதன் சிறகுகளைப் பூனை இத்தனை நேரம் பிய்த்துப் போட்டிருக்கும்!'' என்றாள்.

(தொடரும்)

# காதல் தேவதைக்கு ஒரு புத்தாயிரப் பரிசு!

புதிய நூற்றாண்டில் ஒரு மிகப் பெரிய சாதனை நிகழ்த்தப்பட்டிருக்கிறது. 'ஈராஸ்' குறுங்கோளின் மீது அமெரிக்க விண்கலம் 'NEAR' தரையிறக்கப்பட்டிருப்பதுதான் அந்தச் சாதனை. 'பூமிக்கு அருகிலுள்ள குறுங்கோள் சந்திப்பு' என்று பொருள் தருகிறது இந்த 'நியர்' என்ற பெயர்.

கிரேக்கர்களின் காதல் தேவதையான ஈராஸின் பெயர் கொண்ட இந்தக் குறுங்கோள் செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடைப்பட்ட தனிப்பாதையில் சுற்றி வருகிற கோடிக் கணக்கான கற்குவியல்களுள் ஒன்று. இவற்றை ஆஸ்ட்டிராய்டுகள் என்று வழங்குகிறார்கள்.

சில குறுங்கோள்கள் செவ்வாயின் சுற்றுப் பாதைக்குள்ளும் நுழைந்து சமயங்களில் பூமிக்கு அருகில் கூட வந்து விடுகின்றன. இப்போது அமெரிக்க விண்கலம் சென்று இறங்கியுள்ள ஈராஸ், போன நூற்றாண்டில், 1975ல், பூமிக்கு 'அருகில்' 13.5 மில்லியன் மைல் தொலைவில் வந்து எட்டிப்பார்த்தது. மறுபடியும் இந்த நூற்றாண்டில் 2012ல் பூமியை எட்டிப் பார்க்கப் போகிறது என்கிறார்கள். எவ்வளவு 'அருகில்' என்பது தெரியவில்லை.

இந்தக் குறுங்கோள்கள் அதிகபட்சமாக 1000கி.மீ. குறுக்களவு உடையவையாகச் சுற்றிவருகின்றன. மிகப்பெரியது 'செரஸ்' என்கிற குறுங்கோள்தான் (1000கி.மீ.) அடுத்தது 'பல்லாஸ்' (600கி.மீ.), ஜூனோ, வெஸ்ட்டா ஆகியவை அடுத்த நிலையிலுள்ளவை.

ஜோஹன்னஸ் கெப்ளர் என்பவர் 1596ஆம் ஆண்டில் இந்தக் குறுங்கோள் வட்டத்தைக் கண்டறிய அடிகோலினார். ஒரு வானியல் விதியின்படி (BODES LAN) செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையில் ஒரு கிரகம் இருந்தே தீர வேண்டும் என்று ஆராய்ந்தார். ஆனால் அப்படி ஒன்றையும் அவரால் காண முடியவில்லை.

1801 புத்தாண்டு தினத்தன்று கியாசெப்வே பியாஸ்ஸி என்கிற இத்தாலிய வானியலார்தான் முதல் குறுங்கோளை அந்த இடைவெளியில் கண்டறிந்தார். சிசிலியின் காவல் தேவதையான செரஸ் என்கிற பெயரை அதற்குச் சூட்டினார். அவருக்குப் பிறகு வந்த மற்ற வானியலார்கள் கண்டறிந்தவை தாம் பல்லாஸ், ஜூனோ, வெஸ்ட்டா என்ற குறுங்கோள்கள். முதலில் பெண் தெய்வங்களின் பெயர்களையே சூட்டினார்கள். அப்புறம் இவற்றின் எண்ணிக்கை பெருகப் பெருக, அவற்றைக்



• 'நியர்' விண்கலம்



• குறுங்கோள்களின் அணிவகுப்பு




கண்டறிந்தவர்கள் தம்முடைய மனைவி, காதலிகள், நண்பர்கள், வளர்ப்புப் பிராணிகளின் பெயர்களைக் கூட இவற்றுக்குச் சூட்டி மகிழ்ந்தார்கள். 1880ஆம் ஆண்டுக்குள் முந்நூறு குறுங்கோள்களைக் கண்டறிந்தார்கள். இப்போது மூவாயிரத்துக்கு மேற்பட்ட குறுங்கோள்களை அடையாளம் கண்டு பட்டியலிட்டு விட்டார்கள்.

இன்றைக்குப் பேசப்படுகிற ஈராஸ் குறுங்கோளின் குறுக்களவு வெறும் 40 கிலோ மீட்டர்கள் தான்.

இந்தக் குறுங்கோள்கள், செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையே சுழன்று கொண்டிருந்த ஒரு பெரிய கிரகத்தின் சிதைவுகள்தான் என்று ஒரு கருத்து உண்டு. 'இல்லை' பிரபஞ்சம் உருவானபோதே சிதறிச் சுழல்கிற துணுக்குள் என்றும் சொல்கிறார்கள்.

இவை ஒழுங்கான பாதையில் சுற்றி வருகிறவை அல்ல. ஒன்றுக்கொன்று முட்டி மோதிக் கொண்டு தறிகெட்டு அலைகிற ஜன்மங்கள். அதனால்தான் ஈராஸ் போன்ற சிறிய குறுங்கோளில், மனித முயற்சியால் ஒரு விண்கலத்தைக் கொண்டு போய் இறக்குவது என்பது பிரமிப்பூட்டக் கூடிய சாதனையாக உள்ளது.

மற்ற தொலைதூரகிரகங்களைத் தொலைநோக்கியில் பார்க்க முடிவது போல் இந்தக் குறுங்கோள்களை அவ்வளவு சுலபமாகப் பார்த்து விடவும் முடியாது. ஏற்கெனவே பட்டியலிட்ட படி, மிகச் சரியாக அவை உள்ள இடம் எது என்பதை ஊகித்து அதன்படி துருவிப் பார்க்க வேண்டும்.

பூமியிலிருந்து 31.36 கோடி கி.மீ. தொலைவில் உள்ள இந்தச் சின்னக் கருங்கல் பாறைத் துண்டுக்கு ஒரு பொருளை அனுப்பி இறக்குவது எவ்வளவு பெரிய செயல்!

ஈராஸ் மோதலில் கிடைக்கும் படங்கள், சேகரிக்கப்படுகிற தகவல்கள் எல்லாம் இந்த பூமியும், சூரிய மண்டலமும் உருவான கதையைப் புரிந்து கொள்ள உதவக் கூடும்.

— சுப்ர. பாலன்

• நியர் எடுத்த புகைப்படம்



# திடீர்ப் பரிசுப் போட்டி – 8

வெளியில் தலை காட்ட முடியாமல் வாட்டி எடுக்கிறது வெயில். ஒரு சேஞ்சுக்காக 'ஜில்' படங்களைப் போட்டு புண்ணியம் தேடி கொண்டோம். இந்தப் படங்களில் ஒரே ஒரு படம் மட்டும் தமிழகப் பகுதியைச் சேர்ந்தது. அது எந்தப் படம் என்பதைச் சரியாகத் தெரிவித்தால் ரூ. 100/- பரிசு. படத்தின் மேல் கொடுக்கப்பட்டுள்ள எண்ணை மட்டும் அஞ்சலட்டையில் எழுதி ஜூன் 4-க்குள் அனுப்பினால் போதும்.

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.








### கொள்ளைக்காரன்

'சர்ஜனும் கொள்ளைக்காரன் ஒருவகையில் ஒரே மாதிரிதான்! இருவரும் முகமூடி அணிந்து கொள்கிறார்கள். இருவரும் தங்கள் வேலைக்குக் கத்தியைப் பயன்படுத்துகிறார்கள். இருவரும் பணத்தைப் பறித்துக் கொள்கிறார்கள். இருவரிடமும் சிக்கியவர்கள் வேதனையோடுதான் வீடு திரும்புகிறார்கள்.

(மருத்துவக் கல்லூரிப் பேராசிரியர் ஒருவர் வேடிக்கையாகக் குறிப்பிட்டது)

— எல். கோபாலகிருஷ்ணன்

# தேன்கூடு

### நூதன கடிகாரம்

மகாராஷ்டிரா மாநிலத்தில் பிரேம்சந்த்ராய் என்பவரால் தன் தாயின் நினைவாக ஐந்து மாடிகள் கொண்ட பல்கலைக் கழக நூல் நிலையம் 1880ம் ஆண்டு கட்டப்பட்டது. இந்நூலக மாடியின் உச்சியில் பொருத்தப் பட்டுள்ள "ராஜாபாய்" என்று பெயர் பெற்றுள்ள ஒரு கடிகாரம் பதினாறு விதமான ஓசைகளை எழுப்பும். இவ்வித ஓசைகளைத் தினமும் நான்கு முறைகள் மணி அடிக்கும்போது கேட்கலாம்.



### தனித்தன்மை வாய்ந்த கோயில்

இங்கிலாந்தில் உள்ள சிலிங்பரி கதீட்ரல் என்ற கோயிலுக்கு ஒரு தனித்தன்மை உண்டு. இந்தக் கோயிலில் ஒரு ஆண்டுக்கு எத்தனை மாதங்கள் உண்டோ அத்தனை கதவுகள் உண்டு. ஒரு மாதத்துக்கு எத்தனை நாட்கள் உண்டோ அத்தனை ஜன்னல்கள் உண்டு. ஒரு நாளைக்கு எத்தனை மணிகள் உண்டோ அத்தனை தூண்கள் உண்டு. ஒரு மணிக்கு எத்தனை நிமிடங்கள் உண்டோ அத்தனை சொருபங்கள் உண்டு. ஒரு நிமிடத்திற்கு எத்தனை விநாடிகள் உண்டோ அத்தனை சிலைகள் உண்டு.

— பி. ருக்மணி









## கன்னிமாரா

பொள்ளாச்சியை அடுத்த இந்திரா காந்தி தேசியப் பூங்காவை ஒட்டியுள்ள பரம்பிக்குளம் காட்டுப் பகுதியில் உள்ள ஒரு தேக்கு மரத்திற்கு 1994–95க்கான இந்திய அரசின் 'மகா விருக்ஷ புரஸ்கார்' (பெரிய மரத்திற்கான பரிசு) கிடைத்துள்ளது. இது உலகிலுள்ள பெரும் தேக்கு மரங்களில் ஒன்றாகும். இதற்கு 'கன்னிமாரா தேக்கு' எனப் பெயரிடப்பட்டுள்ளது.

5.6.1999 தேதியில் இதன் சுற்றளவு – 6. 48 மீட்டர்.

உயரம் – 48. 25 மீட்டர்

வயதை நம் யூகத்திற்கே விட்டுள்ளனர்.

அப்பகுதி வாழ் மலை சாதியைச் சேர்ந்த நடராசன் (இந்திரா காந்தி தேசிய பூங்காவின் காட்டிலாகா ஊழியர்) மூலம் அறிந்த தகவல் மிகவும் வியப்பூட்டுவதாகும்.

அவர்களின் மூதாதையர்கள் தேக்கு மரங்களை வெட்டி வரும் பொழுது இம்மரத்தையும் வெட்ட முனைகையில், அதனின்று இரத்தம் போன்று ஏதோ கசியக் கண்டு வெட்டுவதை நிறுத்தி விட்டனர். அன்று இரவு அவர்களது கனவில் கன்னிமாரா என்னும் தெய்வம் தோன்றி அம்மரத்தை வெட்டக் கூடாது என கட்டளை இட, அம் மரம் இயற்கையின் விசுவரூப தரிசனமாக இன்று நமக்குக் காட்சி அளிக்கிறது. இந்த விசுவரூப காட்சியை நேரில்தான் பார்க்க வேண்டுமே ஒழிய வார்த்தைகளில் வர்ணிக்க இயலாது.

– லலிதா, உதகமண்டலம்.

## கார் ப்ரியர்!

குஜராத்தைச் சேர்ந்த பிரன்லால் போகிலால் என்பவர் இதுவரை சுமார் 75 விதமான வெவ்வேறு கார்களைச் சேகரித்து வைத்துள்ளார்.

இவர் சேகரித்துள்ள கார்களில் சில முக்கிய மாடல்கள்

*1906* மாடல் – மினர்வா

*1912* மாடல் – பியட்

*1958* மாடல் – கேடிலாக்

*1939* மாடல் – ரோட் மாஸ்டர் (Rewa)

மற்றும் ரோல்ஸ் ராய்ஸ், ஹாலிவுட் நடிகர்கள் உபயோகித்த Packard 120, சவர்லெட், VII2 Auburn ஆகியனவும் இதில் அடங்கியுள்ளன. – அகமதாபாத் பாண்டு.



இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் தன்னுடைய புன்னகையின் பரப்பளவைப் பெரிதாக்கிக் கொண்டே வருணின் தோள் மேல் தன் எஃகு போன்ற வலது கையை வைத்தார்.

"இதோ பார்....! உன்னோட ரிஷிமூலம் நதி மூலம் எல்லாமே எனக்குத் தெரியும். போலீஸ்காரன் ஒருத்தனைத் தேடிக்கிட்டு வர்றான்னா அவன் காரணம் இல்லாமே வர மாட்டான். மும்பையில் நீ ஒருத்தனைக் கொலை பண்ணினதும் அதுக்காக ரெண்டு வருஷம் தண்டனையடைஞ்சதும் என்னிக்குமே போலீஸ் ரிக்கார்ட்ஸ்ல இருக்கும். அதை நீயே மறந்துட்டாலும் போலீஸ் மறக்காது."

"ஸார்...! மும்பையில் அந்தக் கொலை எப்படி நடந்ததுன்னா..."

"அந்தக் கதையெல்லாம் எனக்கு வேண்டாம். கோர்ட் தண்டனை வழங்கிட்டா நீ குற்றவாளிதான். உன்னோட ஃப்ரண்ட் லீலாகிருஷ்ணன் சந்தேகத்துக்கிடமான முறையில் இறந்து போயிருக்கான். அவன் கொலை செய்யப்பட்டானா... இல்லை தற்கொலை பண்ணிக்கிட்டானான்னு உன்னை மாதிரியான க்ளோஸ் ஃப்ரண்ட்ஸ்களுக்குத்தான் தெரியும்..."

"ஸார்...! லீலாகிருஷ்ணனோட மரணத்தைப் பத்தி எனக்கு எதுவும் தெரியாது. நான் அவனைப் பார்த்தே ரொம்ப நாளாச்சு. வீணா என் மேல சந்தேகப்படாதீங்க ஸார்."

வருண் எதிர்ப்புக் காட்டாமல் நடந்தான். சிந்தாதிரிப்பேட்டையின் நிசப்தமான சந்து



# ஒருபனி ஜலை

பால்பாண்டியன் வருணின் தோளைத் தட்டினார். "சரி... நட...! உன்னோட ரூமைக் கொஞ்சம் அலசிப் பார்த்தா நீ எந்த அளவுக்கு உண்மை பேசியிருக்கேன்னு தெரிஞ்சுடும்..."

வருணின் இருதயத்தைக் கிடுக்குப்பிடி போட்டாற்போல் ஒரு பயம் பிடித்துக் கொண்டு நெருக்கியது.

"பத்து லட்ச ரூபாயைக் கர்ப்பம் தாங்கிய ப்ரீப்கேஸ் இந்த இன்ஸ்பெக்டரின் கையில் கிடைத்தால் வேறு வினையே வேண்டாம்...! கைக்கு விலங்கை மாட்டி..."

"என்ன யோசனை... நட...!"

"ஸார்.. வந்து..."

"இனி எதைப் பேசினாலும் உன்னோட ரூமுக்குப் போய்ப் பேசிக்கலாம்... நட....."

களில் ஒரு வார்த்தை கூட பேசிக் கொள்ளாமல் இருவரும் பத்து நிமிஷம் நடை போட்டார்கள்.

வருணின் அறை வந்தது. வியர்த்து வழிகிற முகத்தோடு சாவியைக் கையில் எடுத்தான் வருண்.

"ம்...திற..."

பூட்டின வாய்க்குள் சாவி நுழைந்தது.

"ப்ளச்..."

பூட்டு நெகிழ்ந்து கதவு

# 20 ராஜேஷ் குமார்

வோல்ட்ஸ் மின்சாரம் பாய்ந்த மாதிரியான உணர்வு.

ப்ரீப்கேஸ் இருந்த இடம் வெறுமையாய் இருந்தது.

'ப்ரீப்கேஸ் எங்கே...?'

சுற்றும் முற்றும் பார்த்தான் வருண். அந்த பத்துக்குப் பத்து அளவுள்ள அறையில் ப்ரீப்கேஸைத் தவிர எல்லாம் இருந்தன.

பால்பாண்டியன் அவனை வியப்பாய்ப் பார்த்தார்.

"என்ன.... தேடறே...?"

"ஒண்ணுமில்லே...ஸார்..."

"இந்த வீட்ல எத்தனை மாசமா குடியிருக்கிறே?"

"கடந்த ஆறுமாசமா ஸார்..."

"இதுக்கு முந்தி...?"

"ட்ரிப்ளிகேன்ல பேச்சிலர்ஸ் மேன்ஷன்ல ரூம் எடுத்து தங்கியிருந்தேன் ஸார். வாடகை அதிகமாயிருந்ததால வந்துட்டேன்..."

'பூட்டியிருக்கிற இந்த அறைக்குள் யார் வந்து ப்ரீப்கேஸை எடுத்துக் கொண்டு போயிருப்பார்



விரிந்தது.

அறைக்குள்ளே இருட்டு.

"உள்ளே போய் லைட்டைப் போடு..." பால்பாண்டியன் சொல்ல- வருண் நடையைச் சிரமமாய்ப் பெயர்த்து உள்ளே போய் ட்யூப்லைட்டின் ஸ்விட்ச்சைத் தேய்த்தான்.

அறைக்குள் வெளிச்சம் பற்றிக் கொண்டது.

வருணின் பார்வை முதலில் ப்ரீப்கேஸ் இருந்த திசை நோக்கிப் பாய, உடம்பு முழுக்க 440

கள்?'

வருண் கலக்கமாய் யோசித்துக் கொண்டிருக்கும்போதே இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் சுவரோரமாய் வைக்கப்பட்டிருந்த மரப்பீரோவுக்குப் போனார்.

"இதுக்கு சாவி...?"

"சாவி இல்லை ஸார்... பீரோ திறந்துதான் இருக்கும்."

பால்பாண்டியன் பீரோவை நெருங்கினார். கைப்பிடியைப் பிடித்து இழுக்க அது நாப்தலின் வாசனையோடு திறந்து கொண்டது. இரண்டே இரண்டு அறைகள். மேல் அறையில் அடைசலாய்த் துணிகள். கீழே உள்ள அறையில் குவியலாய்ப் புத்தகங்கள். புத்தகங்களைக் கிளறிப் பார்த்தார். பெரும்பாலானவை கவிதைத் தொகுப்புகள். கறுப்பு தாஜ்மஹால், ஒரு கிணற்றுத் தவளையும் இந்து மகா சமுத்திரமும், உடைந்த இரவு, இரும்புக் கனவுகள்.

பதினைந்து நிமிஷ அலசலுக்குப்பின் ஒரு கவிதைப் புத்தகத்திலிருந்து அந்த இன்லேண்ட் கடிதம் உதிர்ந்தது. பால்பாண்டியன் அதை எடுத்தார். ஓரங்கள் அழுக்காகித் தெரிந்த அந்த இன்லேண்ட் லெட்டரின் To பகுதியில் வருணின் முகவரியும் From பகுதியில் லீலாகிருஷ்ணனின் முகவரியும் பளிச்சென்று தெரிந்தது.

கடிதத்தைப் பிரித்தார் பால்பாண்டியன். மூன்று மாதங்களுக்கு முன்பு எழுதப்பட்ட கடிதம் என்பது தேதியைப் பார்த்தபோது புரிந்தது.

பால்பாண்டியனின் பார்வை கடித வரிகளுக்குப் போயிற்று.

*அன்புள்ள வருண்...!*

*நான் லீலா! உன்னை நேரில் சந்தித்துப் பேச நேற்று முழுவதும் முயன்றேன். முடியவில்லை. நான் அவசரமாய்க் கொச்சி செல்ல வேண்டியிருந்ததால் இந்தக் கடிதத்தை ரயில்வே ஸ்டேஷனிலேயே எழுதி போஸ்ட் செய்துவிட்டுப் புறப்படுகிறேன். நான் கொச்சியிலிருந்து திரும்ப எப்படியும் ஒரு வாரமாகும். இந்த ஒரு வார காலத்தில் நீ எனக்காக செய்ய வேண்டிய ஒரு முக்கியமான காரியம் உள்ளது. யமுனாவிடம் சிவப்பு பனித்துளியைக் கொடுத்து வைத்துள்ளேன். அதை வாங்கி அமானுல்லாவிடம் கொடுத்துவிடு. அமானுல்லாவிடம் பேரம் பேசியாயிற்று. அவன் கொடுக்கிற பணத்தை வாங்கி பத்திரமாக வைத்து இருக்கவும். என்னோடு டெலிபோனில் பேச வேண்டும் என்று நீ விரும்பினால் இரண்டு நாட்கள் கழித்து யமுனாவைத் தொடர்பு கொள்ளவும். அவள் கொச்சியில் என்னைத் தொடர்பு கொள்ள வேண்டிய டெலிபோன் நெம்பரைக் கொடுப்பாள். ராத்திரி பதினோரு மணிக்கு மேல் பேசவும்.*

*இப்படிக்கு,*
*உன் லீலா.*

பால்பாண்டியன் அந்த இன்லேண்ட் கடிதத்தை வருணின் முகத்துக்கு நேரே பிடித்தார்.

"இந்த லெட்டர்ல எழுதப்பட்டிருக்கிற 'சிவப்பு பனித்துளி' என்கிற வார்த்தைக்கு என்ன அர்த்தம்...?"

**போ**ர்டிகோவில் நின்றிருந்த காரையும் டிரைவர் மாணிக்கத்தையும் பார்த்த யமுனா அடிவயிறு கலங்கிப் போனவளாய்த் தயக்கநடை போட்டுக் கொண்டு உள்ளே வந்தாள். ஹாலில் பேச்சுக் குரல் கேட்டது. கூடவே பெண்களின் சிரிப்பு.

போர்டிகோ தூணுக்குப் பின்னால் நின்றபடி பீடியையோ சிகரெட்டையோ புகைத்துக் கொண்டிருந்த மாணிக்கம் யமுனாவைப் பார்த்ததும் கையில் இருந்ததை எறிந்துவிட்டு யமுனாவிடம் வந்தான்.

"கோயிலுக்குப் போயிருந்திங்களாம்மா?"

"ம்..." என்று சொல்லி தலையாட்டியவள் கலக்கக் குரலில் கேட்டாள்.

"அத்தையும், மாமாவும் இப்பத்தான் வந்தாங்களா இல்ல... வந்து நேரமாச்சா... மாணிக்கம்...?"

"அத்தையும் மாமாவும் வரலையேம்மா. அவங்க ரெண்டு பேரும் சம்பந்தி கார்லயே கல்யாண அழைப்புக்குப் போய்ட்டாங்க. நான் 'மட்டும் காரை எடுத்துக்கிட்டு வந்துட்டேன்."

யமுனாவுக்கு வியர்வை சுரப்பது நின்றது.

**"கழுதை அசைபோடுமா? போடாதா?ன்னு அந்த எழுத்தாளர்கிட்ட கேட்டது தப்பாப் போச்சு."**

**"என்னாச்சு?"**

**"அசைபோடறதும் போடாததும் அது சாப்பிடற கதைகளைப் பொறுத்ததுன்னு சொல்றாரு!"**

**– சீர்காழி வி. ரேவதி**



மனசுக்குள் சந்தோஷக்காற்று மோதியது.

"ஹாலல பேச்சுக்குரல் கேட்குது..."

"அது சௌம்யாம்மாவைப் பார்க்க வந்திருக்கிற ஃப்ரண்ட்ஸ். எல்லாரும் இப்பத்தான் வந்தாங்க..."

யமுனா ஹாலுக்குள் நுழைந்தாள்.

சௌம்யாவைச் சுற்றிலும் கடிதார் கும்பல். பேச்சு, சிரிப்பு, பேச்சு, சிரிப்பு.

"ஏய்! என்னடி... இவ இப்படிப் பச்சை பச்சையா பேசறா...?"

"எப்பவுமே இவ அப்படித்தானே...? இவ கிட்ட பேசிட்டு வீட்டுக்குப் போனாலே டெட்டால் சோப் போட்டுத்தான் குளிக்கணும்..."

"நீ மட்டும் பெரிய ஒழுங்கோ...?"

"ஏய்... சண்டை வேண்டாம். எங்க அண்ணி வர்றாங்க..."

சிரிப்பும் பேச்சும் சட்டென்று அணைந்து போக எல்லோர் பார்வையும் யமுனா மேல் திரும்பியது.

யமுனா புன்னகை செய்தாள்.

"ஹலோ...! எல்லோரும் எப்ப வந்தீங்க?"

"இப்பத்தான்..."

"கல்யாணப் பொண்ணு என்ன சொல்றா?"

"முகூர்த்த தேதி ரொம்பவும் தள்ளிப் போயிடுச்சாம். சௌ ரொம்பவும் ஃபீல் பண்றா..."

"ஏய் கழுதை..." சௌம்யா அந்தத் தோழியை அடிக்க முயல, சிரிப்பலைகள் பீறிட்டன.

யமுனா சமையலறையை நோக்கிப் போனாள்.

"பேசிட்டிருங்க... சாப்பிட ஏதாவது கொண்டு வர்றேன்."

சௌம்யா பின்னாலேயே வந்தாள்.

"அண்ணி...!"

"ம்..."

"டிரைவர் மாணிக்கத்தைப் பார்த்தீங்களா?"

"ம்... பார்த்தேன்..."

"நீங்க இப்படிக் கோயிலுக்குப் போனதுமே அம்மா ஃபோன் பண்ணியிருந்தாங்க... சம்பந்தி வீட்டுக் காரிலேயே கல்யாண அழைப்புக்குப் போறோம்னு சொன்னாங்க."

"என்னைக் கேட்டாங்களா?"

"ம்...கேட்டாங்க... விஷயத்தை உங்ககிட்ட சொல்லத்தான் ஃபோன் பண்ணினாங்க."

"நீ என்ன சொன்னே...?"

"நீங்க தூங்கிட்டிருக்கிறதாச் சொல்லிட்டேன்..."

"நான் கோயிலுக்குப் போய்ட்டு வந்ததை டிரைவர் மாணிக்கம் பார்த்துட்டார்..."

சௌம்யா சிரித்தாள். "மாணிக்கம்! நம்ம ஆள். சொல்லிக்கலாம்...! அண்ணி....! என்னோட ஃப்ரண்ட்ஸ் மத்தியானத்துக்கு இங்கேயே சாப்பிடுவாங்க போலிருக்கு. அவங்களுக்கு லஞ்ச் ப்ரிப்பேர் பண்ணணும்..."

"கவலைப்படாதே...! பிரமாதமா ப்ரிப்பேர் பண்ணிடலாம். நீ போய் அவங்களோடு பேசிட்டிரு."

"அண்ணி...! உங்களாலே முடியுமா?"

"முடியுமாவாவது...! என்னென்ன அயிட்டம் வேணும்...சொல்லு... மத்தியானம் ஒரு மணிக்குள்ளே டைனிங்டேபிள் மேல எல்லாம் ரெடியா இருக்கும்..."

"சிம்பிளா இருந்தா போதும் அண்ணி."

"நான் பார்த்துக்கிறேன்... நீ போ..."

சௌம்யாவை அனுப்பிவிட்டு சின்னதாகப் பட்டியல் போட்டுக் கொண்டு சமையல் வேலையை ஆரம்பித்தாள். அரைமணி நேரம் கரைந்து இருந்தபோது சௌம்யா மறுபடியும் உள்ளே வந்தாள்.

"அண்ணி! வாசனை தூக்குது. வெஜிடபிள் பிரியாணியா...?"

"ம்.... ப்ளஸ் பால் பாயாசம்..." சொல்லிக் கொண்டே திரும்பியவள் சௌம்யாவின் கையில் இருந்த கடிதக் கவரைப் பார்த்ததும் புருவங்களை உயர்த்தினாள்.

"அது என்ன லெட்டர்...."

"லெட்டர் உங்களுக்குத்தாண்ணி! போஸ்ட்மேன் இப்பத்தான் கொடுத்துட்டுப் போனார்..."

"எனக்கு லெட்டரா... ஆச்சர்யமாயிருக்கு! யார் எழுதியிருக்காங்க..."

"ஃப்ரம் அட்ரஸைப் பார்த்தேன் அண்ணி. 'லீலா'ன்னு போட்டிருக்கு..."

(தொடரும்)

எதிர்க்கட்சி வேட்பாளரின் பெயரைக்கூட குறிப்பிடாமல் எதிர்க்கட்சிகளைத் தாக்காமல், தங்கள் கூட்டணியின் சாதனைகளை மட்டுமே விளக்கிக் கூறி தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடும் புதிய முறையைக் காரைக்குடியில் கையாண்டார் எச். ராஜா. வெற்றியும் பெற்றார். ஆனால் பா.ஜ.க துணைப் பொதுச் செயலாளரான அவர் வெறும் 1651 வாக்குகள் வித்தியாசத்தில்தான் ஜெயித்திருக்கிறார். காரணம் என்ன என்று கேட்டோம்.



# சிதம்பரம் எனக்கு எதிராக வேலை செய்தார்!

"தமிழ் மாநில காங்கிரஸ் ஜனநாயகப் பேரவையின் தலைவரும், முன்னாள் அமைச்சருமான ப. சிதம்பரத்தை மூன்று முறை தொலைபேசியில் தொடர்பு கொண்டு பேசினேன். வேட்பு மனு தாக்கல் செய்யப் போகும்போது உடன் இருக்கும்படி கேட்டுக் கொண்டேன். பிரசாரத்திற்கு வரும்படி கேட்டுக் கொண்டேன். இங்குள்ள த.மா.க சட்டமன்ற உறுப்பினர் சுந்தரத்தை நேரில் சென்று பொன்னாடை போர்த்தி ஆதரவு கேட்டேன். என் தரப்பில் உள்ள மரியாதைகள் அனைத்தையும் செய்த பின்பும், எங்களோடு கூட்டணியில் இருந்து கொண்டு அவர்கள் ஆதரவு தெரிவிக்காமல் பிரசாரத்திற்கும் வராமல் த.மா.க வேட்பாளர் உடையப்பனுக்கு ஆதரவாக செயல்பட்டது இதற்கு ஒரு காரணம். காரைக்குடி நகர்ப்பகுதியில்தான் பா.ஜ.க.வுக்கு வாக்குகள் அதிகம். அந்தப் பகுதியில் சுமார் 20,000 வாக்காளர்கள் பெயர் பட்டியலிலிருந்து விடுபட்டுப் போனது மற்றொரு காரணம். இதற்குத் தேர்தல் கமிஷன் பெயர், பட்டியலிலிருந்து ஏதாவது சாக்கு போக்குச் சொல்லி பொறுப்புகளைத் தட்டிக் கழிக்க முடியாது. தேர்தல் கமிஷன் முழுமையாகப் பொறுப்பு ஏற்க வேண்டும். அதை உடனடியாகச் சரி செய்ய வேண்டும் என்று டென்ஷனாகியவரிடம்,

தமிழ்நாட்டில் தி.மு.க பெருமளவில் தோல்வியைத் தழுவியதற்கான காரணத்தைக் கேட்டோம்.

"தேர்தல்களில் உணர்வுகளைத் தூண்டுவதன் மூலமாக வெற்றி தேடிக் கொள்வது வழக்கமாகிவிட்டது. தி.மு.க அது போன்று உணர்ச்சியைத் தூண்டுகின்ற பிரச்னையை முன்

பா.ஜ.க. எம்.எல்.ஏ. டென்ஷன்!

## அனுபவம்

கண்கள் மூட
மனம்
அதிகம் காணும்.
செவிகள் மூட
சூனியத்தின் பேரொலி.

மலையின் மடியில்
ஓசையாய் மௌனம்.
அருவி ஆர்ப்பரிப்பில்
அமைதியாய் வானவில்.

இரண்டு துருவங்களையும்
இணைக்கிறது பூமி.

முழுதும் நனைந்த பின்தான்
குடைவிலக்கி
மழையை ரசிக்கும் மனம்.

– எஸ்.கே.பிரபாகர்

வைக்கவில்லை, ஒரு பெண்ணைப் பழி வாங்குவது போன்ற பிரச்னையை அ.தி.மு.க முன் வைத்ததால்தான் வெற்றி பெற்றார்கள். அறிவுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்தால் வாக்காளர்கள் சரியான முடிவுகள் எடுக்க மாட்டார்கள். அந்தவிதமான வாக்காளர்களின் உணர்வுகளை அ.தி.மு.க.வினர் தூண்டியுள்ளனர்.''

காரைக்குடியில் மருத்துவக் கல்லூரி, சிக்ரியின் மூலம் மென்பொருள் தொழில் நுட்ப பூங்கா, கிராமங்களில் அடிப்படை வசதிகள் - இவற்றைத் எதிர்காலத் திட்டமாக முன்வைத்துள்ளார் ஹெச். ராஜா.

ஏற்கெனவே எம்.எல்.ஏ.க்கு ஒரு முறையும், எம்.பி.க்கு ஒருமுறையுமாக இருமுறை போட்டியிட்டுத் தோல்வியைத் தழுவியவர்.

''தி.மு.க.வின் முன்னாள் எம்.எல்.ஏ. சித. சிதம்பரம் மறைவுக்குப் பின் கட்சிகளுக்கு அப்பாற்பட்ட 'அரசியல் பொது மனிதராக' காரைக்குடி பகுதியில் ஹெச். ராஜாவை எதிர்பார்க்கிறோம். அதை நிறைவேற்றுவார் என்ற நம்பிக்கை இருக்கிறது'' என்கின்றனர் காரைக்குடி தொகுதி பொதுமக்கள்.

— கி. சிங்காரவடிவேல்



• ஆர்.கே. நாராயண்

# நம்ம ஊர், நம்ம தெரு, நம்ம வீடு

**ரா.கி. ரங்கராஜன்**

ஆர்.கே. நாராயணின் படைப்புகளை நான் முதன் முதல் படித்தது ஆங்கிலத்தில் அல்ல. தமிழில் - ஐம்பது அறுபது வருடங்களுக்கு முன்பு.

ஒன்று, 'சுவாமியும் சினேகிதர்களும்' இரண்டாவது, 'இருட்டு அறை.' இரண்டுமே ஆனந்தவிகடனில் வெளி வந்தவை. ரொம்பக் காலம் வரை, அவை ஆர்.கே. நாராயண் தமிழிலேயே எழுதியவை என்று நினைத்திருந் தேன். யார் மொழி பெயர்த் தார்கள் என்று போடவில்லையோ, அல்லது எனக்கு மறந்துவிட்டதோ, அற்புதமாக, சரளமாக மொழி பெயர்த் திருந்தார்கள். அவை தமிழில் எழுதப்பட்டவை என்று என்னை நினைக்க வைத்த தற்குக் காரணம் ஆர்.கே.என். னின் நடையில் இருந்த தனிச் சிறப்பு. தமிழில் நினைத்துக் கொண்டு ஆங்கிலத்தில் எழுதிய மாதிரி, இங்கிலிஷ்த்தனம் அதிகம் கலவாத நடை அவருடையது. நம்ம ஊர், நம்ம தெரு, நம்ம ஜனங்கள், நம்ம பாஷை, நம்ம அம்மா, நம்ம பாட்டி, நம்ம சூழ்நிலை என்கின்ற சகஜபாவம் அவருடைய கதைகளில் இருந்ததால், தமிழில்தான் அவர் எழுதியிருக்கிறார் என்ற பிரமை ஏற்பட்டது.

'சுவாமியும் சினேகிதர்களும்' ஆனந்த விகடனில் வெளியானபோது நான் பள்ளி மாணவன் என்று ஞாபகம். சிறப்பாகத் தெரியும்படி தனியான கலர் காகிதத்தில் அச்சிட்டு வந்தார்கள். உயிருள்ள சூழ்நிலையையும் உயிருள்ள பாத்திரங்களையும் சித்திரத்தில் வடித்துத் தந்தார் ஓவியர் மாலி. பள்ளி மாணவனான சுவாமி என்ற சுவாமி நாதனும், அவனுடைய சினேகிதர்கள் மணியும், ராஜமும், சங்கரும் சாமுவேலும் அவர்கள் படித்த உயர் நிலைப் பள்ளிகளும், கிரிக்கெட் டீம் அமைத்துக்கொண்டு ஸ்டாம்புகளுக்காக அவர்கள் அலைந்த அலைச்சலும், மெட்ராஸ் கம்பெனிக்குக் கடிதம் எழுதிப் போட்ட குழந்தைத்தனமும், எதிரணியைத் தோற்கடித்தே தீருவது என்ற வெறியில் இருக்கும் சுவாமி, ஹெட் மாஸ்டரின் ஓங்கிய பிரம்பைப் பிடுங்கி எறிந்து விட்டுப் பள்ளியை விட்டே வெகுதூரம் ஓடி வழி தெரியாமல் காட்டில் மயங்கி விழுந்த விறுவிறுப்பும் - அற்புதமாய் என்னை மடக்கிப் போட்டன. சிந்தனையுடன் கூட ஒரு யதார்த்தமான மெல்லிய ஹாஸ்யம் இருந்தது கதையில். இப்படியெல்லாம் நாமும் எழுத வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது கூட ஆர்.கே. நாராயணனால்தான் என்று இப்போது நினைத்துப் பார்க்கும்போது தோன்றுகிறது. கடைசி அத்தியாயத்தில் சுவாமிக்கும் அவனுடைய சினேகிதன் ராஜத்துக்கும் 'பிணக்கு' ஏற்பட்டிருந்த சமயம், ராஜத்தின் அப்பாவுக்கு வேலை மாற்றம் கிடைத்து ராஜத்தின் குடும்பம் வெளியூர் கிளம்ப, ரயில் கிளம்பும் சமயம் சுவாமி அவனுடன் 'சமரசம்' செய்து கொள்ள முயன்றும், பேச முடியாமல் போகிறது. இருவரும் கையசைத்தபடி பிரிகிறார்கள். நெருடும் சோகமான முடிவு நெஞ்சிலேயே நிற்கிறது.

புரசைவாக்கம் வெள்ளாளத் தெருவின் முனையில், இப்போது பிரபலமான ஓட்டல் உள்ள இடத்தில், இரண்டு மூன்று பழைய சின்ன வீடுகள் இருந்தன. அவற்றுள் ஒன்றில் ஆர்.கே. நாராயணன் முன்னொரு காலத்தில் வசித்து வந்ததாகச் சொன்னார்கள். சர்வதேசப் புகழ் பெற்றவராக அவர் மைசூர் பக்கம் குடியேறி விட்டதால் அவரைச் சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லை. அந்த வீட்டை இடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டு ஆர்.கே.என்.னின் பரம பக்தரும் நண்பருமான ஹிந்து என். ராம் உடனே வந்து பார்த்து, அந்த வீட்டின் வாசல் கதவை மட்டும் விலை கொடுத்து வாங்கிக் கொண்டு சென்றார்.

போலீஸ் ஸ்டேஷனில் நிறைய ஆட்கள் நிற்பதைப் பார்த்து உள்ளே போனான். அங்கே ஒவ்வொருத்தரின் உயரத்தையும் எடையையும் அளந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். எல்லோரிடமும் வீட்டு விலாசம் கேட்டார்கள். அதற்கு அவன் பதில் சொல்ல வேண்டியதில்லாமலிருந்தது. அப்படி அன்று நூற்றிஐம்பது பேரைத் தேர்வு செய்தார்கள். அந்தக் கூட்டத்தில் அவனும் தேர்வு செய்யப்பட்டிருந்தான்.



அன்றே அவர்களைக் கூட்டிக் கொண்டு போனார்கள். உற்சாகமான ஒரு பிரயாணமாக அது இருந்தது. மூன்று வேளையும் நல்ல சாப்பாடு. சொந்தச் செலவுகளுக்கென்று கொஞ்சம் பணம் இருந்தது. கூட்டாளிகளும் பரவாயில்லை.

டிரெயின் புதிய புதிய பல ஊர்களைக் கடந்து போனது. பிரம்மாண்டமான பல நகரங்களையும் அவன் பார்த்தான். எட்டு நாட்கள் கழிந்தபிறகு அவர்களை ஒரு ஊரில் கொண்டு வந்து இறக்கினார்கள்.

பயிற்சிக்காலம் கொஞ்சம் கஷ்டமாக இருந்தது. ஆனாலும் மூன்று நேரமும் சாப்பாடு கிடைத்தது என்பது மட்டுமில்லை, வாழ்க்கையும் ஒரு நாளைக்கொரு நாள் விசாலமாகிக் கொண்டே வந்தது. புதிய புதிய அநுபவங்கள் அதில் நிறைந்து கொண்டே வந்தன. வெட்டிப்பயல் என்ற எண்ணம் மறையத் தொடங்கியது. விரித்துப்படுத்த உடனேயே உறக்கம் வருகிறது. தலையைத் தூக்கிக் கொண்டு நடக்க முடிந்தது. நாக்கிற்கும் ருசி பேதம் தெரிந்தது.

செய்வதற்கு ஏதோ ஒரு காரியம் இருக்கிறது என்ற எண்ணம் வந்ததால் வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் கனவும் வந்தது. அவனுக்கும் சில கடமைகளிருந்தன. அதற்கு நேரங்களும் இருந்தன.

அந்தப் படைப்பிரிவை இரண்டாயிரம் மைல் தொலைவிலுள்ள ஓரிடத்திற்கு மாற்றினார்கள். பின்பு வேறோர் இடத்திற்குப் போனார்கள். கொஞ்ச நாள் கழித்து மூன்றாவது இடத்திற்குப் போனார்கள். இப்போது அவனுக்கு இந்தியாவைப் பற்றி நன்றாகத் தெரியும். இந்தியாவில் உள்ள எல்லா முக்கிய நகரங்களையும் பார்த்துவிட்டான். அங்கேயெல்லாம் வாழ்வதற்குக்கூட அறிந்து கொண்டான். கையிலும் பணமிருந்தது. அரசாங்கத்திடமிருந்தும் கிடைத்தது.

ஒரு நாள் மேலதிகாரி, தேவையுள்ளவர்கள் ஒரு மாசம் விடுப்பு எடுத்துக் கொண்டு வீட்டிற்குப் போய் வேண்டியவர்களைப் பார்த்துவிட்டு வரலாம் என்று அறிவித்தார். தேவைப்படுபவர்கள் உடனே விண்ணப்பிக்க வேண்டும். அந்தப் படைப் பிரிவில் அன்று உண்டான உற்சாகத்தை வார்த்தைகளில் சொல்ல முடியாது. அவனும் அதில் பங்கு கொண்டான். ஆனால் அவனுடைய உற்சாகத்தில், அடிப்படையில் ஏதோ ஒரு குறை இருந்தது. அது ஒரு நடிப்பு தான் என்று தெரிந்து போகும்.

அவனும் ஒரு பாரத்தைப் பூர்த்தி செய்து அனுப்பினான். அன்று இரவில் பலகாரம் சாப்பிட்ட பின்னர் நாலைந்து பேராகக் கூடிக்கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு மைசூர்க்காரன் திருநெல்வேலிக்காரனிடம் கேட்டான்.

"நாம திரும்பி வரும்போது சேர்ந்து வரலாமா?"

"ஆனால் நான் நாளை அதிகாலையிலேயே போக வேண்டும்."

மலையாள மூலம் : தகழி சிவசங்கரப் பிள்ளை
தமிழில் : உதயசங்கர்

"நானும் அப்படித்தான் நெனச்சிருக்கேன்... பார்க்கலாம் என் மகளைப் பார்த்து எத்தனை நாளாகிவிட்டது?"

அந்த மைசூர்க்காரன் அப்படியே நினைவிலாழ்ந்துவிட்டான். மகளை மானசீகமாகக் கண் முன்னால் பார்த்ததுபோல அவனுடைய முகம் பிரகாசமடைந்தது.

திருநெல்வேலிக்காரன் சொன்னான்,

"என்னுடைய வயதான அம்மாவுக்கு நான் இங்கே வந்ததே தெரியாது... அவளுக்கு நான் ஒரே மகன்..."

அவனும் நினைவுகளிலாழ்ந்தான். தன்னையறியாமலே அவன்,

"பாவம், அந்தச் சின்னக் குடிசையில் மகளின் வரவை எதிர்பார்த்து, எதிர்பார்த்து தனியே இருப்பாள்..." என்று சொன்னான்.

பாலக்காட்டுக்காரன் ஒருத்தன் அப்போது ராமனிடம் கேட்டான்,

"நீங்க... என்னிக்குப் போறீங்க.. நாம சேர்ந்து போகலாமா?" ராமன்நாயர் யந்திரம்போல பதில் சொன்னான்,

"ஓ... போலாமே..." மெதுவாக சென்னைக்காரன் ஒருத்தன், எல்லோரிடமும் ஒரு யோசனை கேட்டான்.

"முப்பது நாட்களுக்கு மேல தங்கறதுக்கு ஏதாவது வழியிருக்கா?"

பாலக்காட்டுக்காரன் பதில் சொன்னான்.

"உடம்பு சரியில்லைன்னு தந்தி கொடுக்க வேண்டும். நானும் யோசித்துக் கொண்டிருக்கிற விஷயம்தான். வீட்டிற்குப் போய் ஆயிரம் வேலைகள் செய்ய வேண்டியிருக்கும்..."

இன்னொருத்தன் சொன்னான்,

"அதெல்லாம் நடக்கும்னு தோணலை...

# பட்டாளத்துக்காரன்

எதுக்கு இந்த லீவு தர்றாங்க தெரியுமா? வீட்டைப் பார்ப்பதற்காக இல்லை... எல்லாத்தையும் பாத்துட்டு வந்திரணும்... இனி அதிர்ஷ்டம் இருந்தால்தான் அம்மாவையோ மகளையோ பார்க்க முடியும்... நம்மைச் சண்டைக்கு அனுப்பப் போறாங்க..." ஒருவருக்கொருவர் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. அந்த இடம் சட்டென அமைதியாகிவிட்டது. ஒரு நீண்ட பெருமூச்சோடு மைசூர்க்காரன் சொன்னான்,

"என்னுடைய மகளுக்கு ஆயிரம் ரூபாய் கிடைக்கும் ஓ... அது போதும்..." திருநெல்வேலிக்காரன் தொடர்ந்தான்,

"ஆயிரம் ரூபாயை வைத்து என்னுடைய அம்மா கடைசிக் காலத்தில் தன்னைக் கவனித்துக் கொள்ள யாராவது ஆள் வைத்துக் கொள்வாள்..."

நீண்ட பெருமூச்சுகள் நிறைந்த அந்த இரவில் யாருக்கும் சட்டென்று உறக்கம் வரவில்லை. அந்த முப்பது நாட்களுக்குள் செய்ய வேண்டியதையெல்லாம் செய்து முடிக்க வேண்டும்.

ராமன் நாயரும் விடுமுறை நாட்களில் செய்ய வேண்டிய திட்டங்களைக் குறித்து யோசித்தான். ஆனால் செய்வதற்கு அவனுக்கு எதுவும் இல்லையென்பதால் எந்தத் திட்டமும் தெளிவாகவில்லை. தனித்தனியே முப்பது நாட்களும் நீண்டு நிமிர்ந்து முன்னால் கிடந்தன.

பக்கத்தில் படுத்திருந்த பாலக்காட்டுக்காரன், ராமன் நாயரிடம் கேட்டான்.

"உங்களுக்கு வீட்டில் யாரெல்லாம் இருக்கிறார்கள்?"

"யாருமில்லை..."

"விடுமுறையில் எங்கே போகிறீர்கள்?"

அதற்கு ராமன் நாயரால் பதில் சொல்ல முடியவில்லை. அந்தக் கூட்டாளி மறுபடியும் கேட்டான்.

"ஊர் திருவனந்தபுரம்தானே...?"

ராமன் நாயர் குழம்பிப் போனான். அதற்கும் முதலில் பதில் சொல்லவில்லை. பின்னர், "என்னை திருவனந்தபுரத்தில் கண்டெடுத்ததாகச் சொல்லுவார்கள்."

"அப்படின்னா... உன்னோட ஊரு...?"

"நான் வரல்ல.. எனக்கு விடுப்பு வேண்டாம்..." ராமன் நாயர் பயந்து கொண்டு சொல்வது போலிருந்தது.

கூட்டாளி கேட்டான், "நீ ஏன் கோவிச்சுக்கிறே... வீட்டில நீ சண்டை போட்டுட்டு வந்தா அதுக்கு நான் என்ன செய்வேன்?"

அந்த இடத்தில் பேச்சு நின்றுவிட்டது. இரவின் மூன்றாம் சாமத்தின் முடிவில் அங்கே உறங்காத ஆள் ஒருவன் இருந்தான். அவன் ராமன்நாயர். இந்தப் பெயரை அவனுக்கு யார் வைத்தார்கள் என்று அவன் ஆச்சரியப்பட்டான். நாயரென்ற தகுதி எப்படிக் கிடைத்தது? தெருக்களில் வெட்டியாய் அலைந்த பாலிய காலத்தில் அந்தப் பெயரைச் சொல்லி யாரும் கூப்பிட்டதில்லை. வாழ்க்கையில், எந்த இடத்திலிருந்து இந்தப் பெயர் தொடங்குகிறது?

"நான் வரவில்லை... எனக்கு விடுப்பு வேண்டாம்..." இந்த வாசகங்கள் ஒரு அசரீரி போல அவனுடைய காதுகளுக்குள் முழங்கிக் கொண்டிருந்தன. அப்படியும் முடிவாகச் சொல்ல முடியவில்லை. கேரளத்தில் எங்கேயோ அந்த அதிர்ஷ்டம் கெட்ட பெண் இருப்பாள். அம்மா! இல்லையென்றால் அந்த ஆண். அப்பா! அவர்களும் இல்லையென்றால் நான் இருந்த வயிற்றிலிருந்து எனக்கு முன்போ பின்போ பிறந்த யாராவது ஒருத்தர் இருக்கலாம். இப்படித் தன்னைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிற ஒருவன், தனக்கு உலகத்தில் யாருமேயில்லை என்று சொல்லமுடியுமா? ஒரு வேளை விசாரித்தால் கண்டு பிடிக்கலாம்.

அவன் பல ஊர்களைப் பார்த்தான். பல்வேறு இன மக்களுடன் உறவாடினான். பல பாஷைகளும் பேசினான். ஆனால் கேரளத்தில் சும்மா திரிந்தாலும் மோசம் ஒன்றும் இல்லை. அங்கேயுள்ள பச்சைத் தண்ணீரிலும் ஒரு ருசியுண்டு. அங்கே உச்சி வெயிலும் வாட்டி வதைப்பதில்லை. மலையாளிகளின் சிரிப்பு இதயம் கவரக் கூடியது. அந்தப் பாஷைக்குச் சிநேகிதத்தை வெளிப்படுத்தவே முடியும்.

பிறந்த ஊரும் பெற்ற அம்மாவைப்போல அவனைக் கைவிட்டுவிட்டது. கேரளத்தில் குளிர்ச்சியான தென்னை மர நிழலில் படுத்துறங்க வேண்டும். வீட்டு வேலிப் புறங்களின் வழியே அலைய வேண்டும். கேரளத்தில் ஒரு பிடி சோறு அதிகமாய்ச் சாப்பிட வேண்டும். அதிகாலையில் எல்லோருக்கும் முன்பே அவன் எழுந்து விட்டான். மற்றவர்கள் விழித்தபோது அவன் பிரயாணத்துக்குத் தயாராகிவிட்டான்.

---

**"ஐந்து ரூபாய் நோட்டு புதுசா அச்சடிக்கப் போவதாக அரசு அறிவித்ததை எதிர்த்து யார் போராட்டம் நடத்தறாங்க?"**

**"செலோ டேப் தயாரிப்பாளர் - விற்பனையாளர் சங்கத்தினர்தான்."**

*- மங்கை*



ஆலப்புழை நகரத்தின் எல்லா ரோடுகளிலும், மூலைமுடுக்குகளிலும் ஒரு பட்டாளத்துக்காரனை மூன்று நான்கு நாட்களாகப் பார்க்க முடிந்தது. நகரத்தின் எல்லாப் பகுதிகளிலும் மூன்று நான்கு தடவை அவன் தோன்றினான். இரவிலும் கூட அப்படி நடந்தது. ஓர் இரவில் போட் ஜெட்டியிலிருந்த ஒரு கான்ஸ்டபிளிடம் ஒரு வயதான சுமை தூக்கி, அவனைச் சுட்டிக் காட்டி யாரோ ஒரு முஸ்லீம் என்று சொல்லிக் கொண்டிருந்தான். அவன் எங்கே தங்கியிருக்கிறான் என்றோ எங்கேயுள்ளவன் என்றோ யாராலும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

ஒரு நாள் அவனைக் காணவில்லை. மறுநாள் காலையில், கொல்லத்திலுள்ள அனந்தவல்லீஸ்வரம் கோவிலுக்கு அருகில் பூட்டியிருந்த ஒரு வீட்டின் படிகளுக்குக் கீழே அவன் ஒரு இரும்புப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு நிற்பதைப் பார்க்க முடிந்தது. ரோட்டில் போய்க் கொண்டிருந்த ஓர் இளைஞன் அவனிடம், அந்த வீட்டில் யாரும் இல்லை என்று சொன்னான்.

அந்த சமயத்தில் கோவிலிலிருந்து வந்த ஒரு ஆளின் பின்னால் அவன் நடந்தான். கொஞ்ச தூரம் சென்ற பிறகு அந்த ஆள் ஒரு வாசற்படியில் ஏறினார்.

"நான் ராமன்..."

இந்தச் சத்தத்தைக் கேட்டு அந்த ஆள் திரும்பிப் பார்த்தார். பெட்டியைக் கையில் பிடித்துக் கொண்டு கற்சிலை போல் அந்தப் பட்டாளத்துக்காரன் நின்று கொண்டிருந் தான்.

"ராமனா... எந்த ராமன்...?" என்று அந்த ஆள் கேட்டார். ஒன்றும் பேசமுடியாமல் அவன் சடக்கென்று அங்கேயிருந்து நடந் தான். தொலைவில் ரோட்டின் மூலையில் அவன் சென்று மறையும் வரை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். ராமன்! அப்படி ஒரு மனிதன் அவர் ஞாபகத்திலேயே இல்லை.

சின்னக் கடை வீதியில் ஒரு ஹோட்ட லின் வாசற்படி பலகையில் 'ராமன்' என்ற எழுத்துக்கள் சிறிய கத்திமுனையில் எழுதப் பட்டிருந்தது. அந்தப் பட்டாளத்துக்காரன் ஹோட்டல் உரிமையாளரான போத்தியிடம் சொன்னான். "அதை நான்தான் எழுதி னேன்." போத்தி எதுவும் சொல்லவில்லை.

ஒரு புதிய முகத்தைத் தேடி திரு



"இந்தத் தேர்தல்ல வோட்டு கேட்டு வீடு வீடா போறது சுலபமா இருக்காதுன்னு நினைக்கிறேன்..."

"ஏன் அப்படி?"

" 'மெகா சீரியல் இல்லாத நேரம் வோட்டு கேட்டு வரவும்'னு அந்த வீட்டு வாசல்ல போர்டு எழுதி மாட்டியிருக்கு பாருங்க!"

- அம்பை தேவா

வனந்தபுரத்தில் அலைந்து திரிந்தான் அவன். அப்படியேதும் கிடைக்கவில்லை. அப்படி பதினேழு நாட்கள் கழிந்தன. பரிச்சயமான ஒரு புன்சிரிப்பு அவனுக்கு எங்கேயிருந்தும் கிடைக்கவில்லை. எப்போ வந்தே என்ற கேள்விக்காக அவன் கேரளத்திலுள்ள எல்லா நகரங்களிலும் அலைந்து திரிந்தான். ஒரு உறவைத் தேடிக் கொள்ள அரும்பாடு பட்டான். ஐந்து, ஆறு, ஏழு, இப்படி நாட்கள் கழிந்தன. பார்க்கிறவர்களிடமெல்லாம் பேசிப் பார்த்தான். நிறையப் பேரைத் தம்பி என்று கூப்பிட்டான். எதிர்ப்படுகிறவர்களைப் பார்த்து நேருக்கு நேர் முகம் பார்த்துச் சிரித்தான். அவனை ஒருத்தர்கூட ஞாபகம் வைத்திருக்கவில்லை என்பது மட்டுமில்லை. அவன் கோழிக்கோடு முதல் நாகர்கோவில் வரை அவன் பறவையின் வேகத்தில் பயணம் செய்தான். அப்படியே இருபத்தி யெட்டு நாட்கள் முடிந்துவிட்டன. இன்ன மும் இரண்டு நாட்கள் மட்டுமே இருந்தன. இப்போதும் சாப்பிட்டு முடிந்ததும் கை நீட்டிப் பணத்தைக் கொடுக்கிறான். யாரும் அவனைப் பெயர் சொல்லிக் கூப்பிட வில்லை. எப்படி இந்தப் பெயர் வந்தது?

பைத்தியம் பிடித்த நகரத்திலிருந்து வெகுதூரம் தள்ளி, அமைதியும், சமாதான மும் நிறைந்த கிராமப் புறத்தில், குன்றின் அருகில், வயற்காட்டின் ஓரம் பச்சைப் பசேலென்ற தோட்டத்திற்கு நடுவில் ஒரு சிறியவீடு. அதன் திண்ணையில், ஒரு கைவிளக்கின் முன்னால் அமர்ந்து அமைதி யாக அந்தப் பட்டாளத்துக்காரன் சாப்பிட் டுக் கொண்டிருந்தான். சாப்பிட உட்கார்ந்து ரொம்ப நேரமாயிற்று. ஒரு கிழவி சோறும்

கறியும் பக்கத்தில் கொண்டு வந்து வைத்துக் கொண்டு, பேசிக் கொண்டே பரிமாறி அவனைச் சாப்பிட வைத்தாள்.

அவன் அவளை 'அம்மா' என்று கூப்பிட்டான். அம்மா! அவளும் அவனை 'மகனே!' என்று அழைத்தாள். அவர்கள் வீட்டு விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள்.

அந்த அம்மா சொன்னாள், "மகனே! ஆறு பேருக்குக் கலியாணம் முடிக்கணும்... எல்லாரும் சாப்பிடணும்... உடுத்தணும்... எல்லாம் செய்யணும்... இந்தச் சிறிய இடம் தான் இருக்கிறது. போன வருஷம் மட்டும் தான் அஞ்சுராத்தல் கப்பக் கிழங்கு கிடைச்சது. கடைசியில மோர் ஊத்திச் சாப்பிடலாம். மகனே! அப்புறம் மோர் குடிக்கலாம்."

கிழவி கொஞ்சம் புளிக்குழம்பை ஊற்றினாள்.

"சோறு வேண்டாம்மா... இன்னிக்கு நான் நிறையச் சாப்பிட்டுட்டேன். உங்களுக்குக் கொஞ்சம் சோறு கூட மிச்சம் வைக்காம சாப்பிட்டுட்டேன் இல்லையாம்மா?"

"இந்தா குழந்தை... மொத்தமே நாழிச் சோறுதான் வைச்சிருக்கேன்..'' என்று சொல்லிவிட்டு மீண்டும் கிழவி பேச்சைத் தொடர்ந்தாள்.

ராமன்நாயர் கேட்டான், "அப்படின்னா... உங்களுக்கு ஆம்பிளைப் பிள்ளைகளே இல்லையா?"

ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு கிழவி சொன்னாள், "ஒரு தடவை தெய்வம் கொடுத்தது. அப்புறம் அதைக் கொண்டு போகவும் செய்தது. இப்போது அவன் இருந்தால் இருபத்தி மூன்று வயசாகியிருக்கும்... என்னுடைய நாணிக்கு ரெண்டு வயசு மூத்தவன் அவன்..."

கிழவி இன்னுங்கொஞ்சம் சோறு வைத்தாள். வேண்டாமென்று அவன் கையைப் பிடித்து விலக்கினான்.

"நீ... என் கையை விடு மகனே!"

"போதும்மா... எனக்கு மூச்சு முட்டுது..''

அந்த மாதிரி ஒரு சாப்பாடு அவன் வாழ்நாளில் நடந்த முதல் சம்பவமாயிருந்தது. அநாதையாக அலைந்து கொண்டிருந்தவனுக்கு, இந்தக் கிராமத்து மூலையில்தான் அவனுடைய வாழ்க்கையில் இன்னதென்று விவரித்துச் சொல்ல முடியாத ஒரு உறவு உண்டானது. இப்போது இதயம் அமைதியாகத் துடிக்கிறதென்று அவனுக்குத் தோன்றியது. சிந்தனைகள் தெளிவாயின. அவனுக்கும் ஒரு தாய் கிடைத்துவிட்டாள்.

"அம்மா... அம்மா... ஒரு உருண்டைச் சோறு வைச்சு புளிக்குழம்பு ஊற்றிச் சாப்பிடம்மா...''

அந்தக் கிழவியின் சிரிப்பை ஒரு நாளும் மறக்க முடியாது. நான் நிறையச் சாப்பிட வேண்டுமென்று அவள் ஆசைப்பட்டாள். அப்படி நான் சாப்பிடவில்லையென்றால் அதற்காக ராத்திரியில் உறக்கம் வராமல் அது அவரை வருத்தவும் போவதில்லை. நாழிச் சோறு வைத்துக் கொண்டு விளக்கையணைக்காமல் காத்திருக்க வேண்டியதில்லை. எதனால் பிரசவத்தின் அந்தப் பெரிய வேதனை அவளுக்கு ஏற்படவில்லை.

இல்லையில்லை, யாரும் யாருக்காகவும் காத்திருக்கவில்லை. எங்கோ சமுத்திரங்களுக்கப்பால் யுத்த களத்தில் இந்த உடல் சிதறி வீழ்வதால், யாருக்கும் எந்த நஷ்டமும் ஏற்படப் போவதுமில்லை. அப்படி எந்த நஷ்டமும் ஏற்படாமலிருக்க யாரும் பிரார்த்தனை செய்யப் போவதுமில்லை.

மறு நாள் காலையில் அந்தக் கிழவியிடம் அவன், "அம்மா... நான் ஒரு விஷயம் சொல்லட்டா.." என்றான். அதற்கு அவள், "என்ன மகனே! சொல்லு...''

"நான்... நான் ஒரு நாயர் சாதிக்காரன்..."

"அதைத்தான் நீ நேத்தே சொன்னியே...''

"எனக்கு ஊரோ... வீடோ, உறவோ எதுவும் இல்லை...''

''நேத்து ராத்திரி சாப்பிடும்போது சொன்னியே...''

"எனக்குன்னு... யாருமே இல்லையம்மா?" அவன் கதறியழுதான். அந்தக் கிழவி திகைத்துப் போய் நின்றாள்.

அன்று மத்தியானம் ஒரு சிறிய கலியாணம் அந்த வீட்டில் நடந்தது. இப்படி நாணியின் இருபத்தி ஐந்தாம் வயதில்

---

**"பூகம்ப நிவாரண நிதிக்கு எங்க ஆபீஸ்ல ஒரு மாத சம்பளத்தைக் கொடுத்திருக்கோம்."**

**"ப்பூ... இவ்வளவுதானா...! எங்க ஆபீஸ்ல ஒரு நாள் லஞ்சத்தையே கொடுத்திருக்கோம்!"**

***- சீர்காழி வி. ரேவதி***



அவளுக்கு ஒரு கணவன் கிடைத்தான்.

அழகிய ஒரு சாயங்காலம் அது. அறுவடை முடிந்த அந்த வயல் அஸ்தமன ஒளியில் பொன்மயமாய் ஒளிர்ந்தது. அந்தக் காட்சியின் பெருமூச்சு போல குளிர்ந்த தென்றல் வீசிக் கொண்டிருந்தது. காளை மாடுகளை அடித்து விரட்டிக் கொண்டு, ஏரைத் தோளில் தூக்கிக் கொண்டு மெலிந்த ஒரு விவசாயி நடந்து போனான். போய்க் கொண்டே அவனிடம் குசலம் விசாரித்தான்.

"என்ன இங்கே நிக்கிறே..."

"சும்மாதான்..." என்று ராமன்நாயர் பதில் சொன்னான். அவனுக்கும்கூட சொந்தங்கள் ஏற்பட்டுவிட்டன.

"இன்னிக்கு எப்போ போகணும்?" என்ற கேள்வியைக் கேட்டு அவன் திரும்பிப் பார்த்தான். அவள் பின்னால் நின்று கொண்டிருந்தாள். அவளை அவன் உற்றுப் பார்த்தான். அவளுக்கு நிலை கொள்ளவில்லை.

"நான்... கிளம்ப வேண்டியதுதான்... நான்... நான் திரும்ப....ம்... விதியிருந்தால் பார்க்கலாம்... நீ கன்னியாகவே... இரு..."

அவனுடைய தொண்டையில் ஏதோ இடறியது.

"நான்... இருக்கேன்... ஆனால்... நாளைக்கி..." அவள் கோபத்தோடு வேகமாகத் தலையை ஆட்டினாள்.

பத்து நாழிகைப் பொழுது கழிந்தது. பூரணச் சந்திரன் உதித்து மேலே வந்தது. அந்த வயற்காட்டினூடே பெட்டியைத் தூக்கிக் கொண்டு போகிற அந்த உருவத்தையே அவள் பார்த்துக் கொண்டு நின்றாள். அருவி அதன் வாழ்வின் கானத்தைப் பாடிக் கொண்டிருந்தது.

அந்த வீட்டிற்கு ஒரு பட்டாளத்துக்காரனுடைய பேமிலி அலாட்மெண்ட் வந்தது. மாதம் நாற்பது ரூபாய். ஒரு உருளி, ரெண்டு செப்புப்பானை, மூன்று நான்கு கட்டில்களை அவள் வாங்கினாள். அவற்றில் எல்லாம் அவன் பெயரைப் பொறித்து வைத்தாள். அந்த வீட்டைக் கொஞ்சம் புதுப்பித்தாள். நிலத்தைச் சுற்றி வேலி வைத்தாள். வயல் முழுவதும் ஏத்தங்காய் வாழை நட்டாள். அவள் இன்று அங்கே முக்கியமான ஆளாகிவிட்டாள். அம்மாகூட அவள் சொன்னதைக் கேட்டாள்.

தினமும் கோயிலுக்குப் போய் எதையோ பிரார்த்தனை செய்துவிட்டு வருவாள். அங்கே எப்போதும் ஒரு ஆள் சாப்பிடுமளவு சோறு இருந்து கொண்டேயிருக்கும். ராத்திரியில் ஏதாவது ஒரு சத்தம் கேட்டால் அம்மா சத்தமாய்க் கேட்பாள், "யாரது?" அதைக் கேட்டதும் அவள் விழுந்தடித்துக் கொண்டு எழுந்திருப்பாள். உன்னுடைய நாயர் என்னிக்கு வருவார் என்று சிநேகிதிகள் கேட்கும்போது மாத்திரம் அவள் பதிலே சொல்ல மாட்டாள்.

ஒரு நாள் போஸ்ட்மேன் ஒரு பெரிய கவரைக் கொண்டு வந்து கொடுத்தான். அதில் அந்தப் பட்டாளத்துக்காரனுடைய போட்டோ இருந்தது. அன்றிலிருந்து அந்த வீட்டின் மண் சுவரை ஒரு படம் அலங்கரித்தது.

மூன்று மாதங்கள் கழிந்தபிறகு ஒவ்வொரு மாதமும் நூறு ரூபாய் அவளுடைய பெயருக்கு வரத் தொடங்கியது. ஆறுமாதம் கழிந்தபிறகு அது மறுபடியும் கூடியது.

ஒரு நாள் அந்த ஊரிலுள்ள போலீஸ் ஸ்டேஷனிலிருந்து மூன்று பெரிய இரும்புப் பெட்டிகளை வாங்கிக் கொள்ளச் சொல்லி நோட்டீஸ் வந்தது. அதில் முழுவதும் பட்டாளத்துக்காரனின் உயர்ந்த ரக உடுப்புகள் இருந்தன. ஒரு பெட்டியில் அவள் அவனுடைய கழுத்தில் அணிவித்த கலியாண மாலை காய்ந்து கருகிப் போயிருந்தது.

நாணி காரணமில்லாமல் நடுங்கினாள். ஒரு நாளுக்குப்பின் பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் அவளுக்கு வந்தது. அதற்குப் பின்பு மாதா மாதம் வரும் மணியார்டர்கள் வரவில்லை. ●

*(இந்தக் கதை தகழியின் மறைவுக்குப் பிறகு வெளியான கதை)*

*நன்றி :*
*மாத்ருபூமி 'தகழி' சிறப்பிதழ்.*



**மேஷம் :** புதிய அரசிடம் என்னென்னவோ எதிர்பார்க்கும் அப்பாவி வாக்காளன் போல, நீங்களும் கிரக சஞ்சாரத்திடம் நிறைய எதிர்பார்க்கிறீர்கள். கவலை வேண்டாம். 2-ல் வாக்கிங் போய்க் கொண்டிருக்கும். சூரியன் நல்ல மூடில் இருக்கிறார். உங்கள் எண்ணங்கள் நிறைவேறும். பணம் வசூலாகும். உல்லாசம் டபுளாகும். வாரத்தின் பிற்பகுதியில் செவ்வாய் வக்கிரமடைவதால், பயம், சோர்வு, மனசஞ்சலம் உண்டாகும். தொப்பையப்பனை நாடுங்கள். நல்லதே நடக்கும்.



**ரிஷபம் :** போயஸ் தோட்டத்து வாசலில் மூட்டை மூட்டையாகத் தேங்காய் உடைத்து மகிழ்ந்த ரசிகர்களின் சந்தோஷம் இந்த வாரம் உங்களுக்கும் ஏற்படப் போகுது. ராசிநாதன் சுக்கிரன் உச்சத்துல உல்லாசமாய் இருக்காரே! பெண்கள் நோக்கம் நிறைவேறும். கலைத்துறை ஆட்களுக்கு ஏற்றம். அதிர்ஷ்ட வாய்ப்புகள் அட்ரஸ் கேட்டுக் கொண்டு வந்து சேரும். கணவன் - மனைவி உறவு சீராக இருக்கும். ஒரே ஒரு எச்சரிக்கை. வழக்கு விவகாரங்களில் ஒரு கிலோ மீட்டர் தள்ளியே இருங்க. சங்கடங்கள் வரலாம்.



**மிதுனம் :** அடுத்தப்பட அறிவிப்பு வராமல் காய்ந்து கிடக்கும் ரஜினி ரசிகர்கள் போல, உங்கள் வாழ்க்கையும் வறட்சியின் பிடியில் உள்ளது. வீண் அபவாதம், மனசஞ்சலம், உறவினர்களால் தொல்லை, உடல் நலக் குறைவு என ஏதோ வகையில் சிரம தசைதான். சனி, குரு இருவரும் 12ல் சஞ்சரிக்கும் வரை முழுமையான நன்மை எதிர்பார்க்காதீங்க. சிக்கனம் தேவை இக்கணம். பெரியவங்க சொல்படி நடங்க. தெய்வப் பிரார்த்தனை மூலம் மன அமைதி பெறலாம்.



**கடகம் :** அட்மிஷன் சமயத்தில் திடீரென்று மவுசு கூடி விடும். பிரின்ஸிபல் போல உங்கள் முக்கியத்துவம் வீட்டிலும் ஆபிஸிலும் அதிகரிக்கும். பண நடமாட்டம் விசிலடிக்கத் தோன்றும். வருமானம் எட்டுத் திசைகளிலும் எட்டிப் பார்க்கும். வெளிநாட்டுத் தொடர்பு பயன் தரும். விவசாயிகள், தொழிலதிபர்களுக்கு காலண்டர் நல்ல நேரம் காட்டும். 12ல் ராகு இருப்பதால் ராகு ப்ரீதி செய்வது நல்லது.



**சிம்மம் :** கோக் குடித்து, ராப் வுட்டு கானாவில் கலக்கும் விஜய் அண்ட் கோ போல, உங்கள் குடும்பத்திலும் உறவு வட்டத்திலும் மகிழ்ச்சி, குதூகலம் நிறைந்து இருக்கும். புதிய ஆடை, அணிமணி, அலங்காரப் பொருட்கள், ஆடம்பர தினுசுகள் என கொழிப்பீர்கள். கணிதம், எழுத்துத் துறையில் இருப்பவர்களுக்கு வளர்ச்சி நிச்சயம். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை நிலவுகிறது. 5ல் செவ்வாய். சின்ன பிரச்னைகள் வரும். சத்ய சாயிபாபாவைப்

# நடக்குமென்பார்,

பிரார்த்தியுங்கள். திருவாளர் சந்தோஷம், பந்து மித்திரர்களுடன் 'டேரா' போடுவார்.



**கன்னி :** 'அணு ஆயுதங்களைக் குறைத்துக் கொள்வோம்' என்று அறிவித்திருக்கும் ஜார்ஜ் புஷ் போல 'நல்லதே செய்வேன்' என குருபகவானும் உங்கள் விஷயத்தில் கருணைக் காட்டியிருக்கிறார். இதனால் என்னென்ன பயன் என்று பெரிய பட்டியலே போடலாம். புனிதப் பயணம் வரும். அறிவாற்றல் அதிகரிக்கும். அதிர்ஷ்டம் அழைக்கும். தொழிலில் லாபம் வரும். புகழ், பெயர் கூடும். 4-ல் கேது, செவ்வாய் என்பதால்; வீண் அலைச்சலைத் தவிர்த்திடுங்க. சாமி கும்பிடுங்க. பிரச்னைகள் பறந்து விடும்.



**துலாம் :** இலங்கைப் பிரச்னைக்கு ரஜினி சொன்ன குட்டிக் கதைதான் காரணமோ என்னவோ தெரியவில்லை. ஆனால் உங்கள் பிரச்னைக்குச் சனி, குரு 8ல் இருப்பதுதான் காரணம் என்று சர்வ நிச்சயமாகத் தெரிகிறது. குடும்பத்தில்

குழப்பம், பொருளாதார சிக்கல், ஸ்பெகு லேஷன் துறையில் ஏமாற்றம், உடல் நலம் பாதிப்பு என்று, பல விஷயங்கள் அண்டர் கிரவுண்டில் வேலை பார்க்கின்றன. ஆனால் புதன் சஞ்சாரம், அனுகூலமாக இருப்பதால், எதையும் தனி ஆளாகச் சமாளித்து விடு வீர்கள். நல்லவங்க சகவாசம் நன்மையைத் தரும். மறந்துடாதீங்க.



**விருச்சிகம் :** மாருதி கார்களில் சமீபத்திய விலை ஏற்றம் போல உங்கள் செல்வாக்கும், அந்தஸ்தும் உயரும். நேரம் பராக்.. பராக்... மனகல உற்சாகம் தாண்டியா ஆட்டம் போடும். சுபகாரியங்கள் நடக்கும்.. கூட்டுத் தொழில் லாபம் தரும். ஆனால் 2ல் செவ்வாய், கேது உலவுவது அவ்வளவு ரசிக்கக்கூடிய விஷயமில்லையே. வீண் வாக்குவாதம் தவிர்த்திடுங்க. நிதானமா பேசுங்க. எதிலும் அவசரம் காட்டாதீங்க. அனுபவஸ் தங்களோட அட்வைஸ் படி நடந்துக்கிட்டா, அழகா சமாளிச்சுடலாம்.

# நடக்கும்!



**ரிஷப ராசிக்காரரான பா. வளர்மதி எம்.எல்.ஏ.வின் நோக்கம் நிறைவேறப் போகுதாம்.**



**தனுசு :** திருப்பதி லட்டு விற்பனையில் உள்ள கட்டுப்பாடு நீங்கும் என்ற இனிப்பான செய்தி போலவே, உங்களுக்கு ஸ்வீட் நியூஸ்தான் இந்த வாரம். கணவன் - மனைவி உறவு நிலை திருப்தி தரும். விவசாயிகளுக்கு வளர்ச்சி. அரசு காரியங்களில் அனுகூலம். வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை. அதிர்ஷ்ட வாய்ப்புகள் அடையாள அட்டையோடு வந்து அப்பாயின்மெண்ட் கேட்கும். கூட்டிக் கழிச்சுப் பார்த்தா சுகமான வாரம். என்ஜாய்.



**மகரம் :** 'ஜிம்பாப்வேயில் தூள் கிளப்புவேன்' என்று சொல்லி யிருக்கும் கேப்டன் கங்கூலியின் நம்பிக்கை போல, உங்களுக்கும் குருபகவான் நம்பிக்கை சிக்னல் காட்டு கிறான். இதனால் தேக ஆரோக்கியம் சீராகும். மதிப்பு, கௌரவம் உயரும். வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை கிடைக்கும். பொருளாதாரம் 'பக்கா'வாக இருக்கும். வாரப் பிற்பகுதியில் அலைச்சலும், சிறு சிறு சங்கடங்களும் பீக் அவர் பயணி போல ஃபுட் போர்டில் ஏறிக் கொள்ளும். அன்னை அபிராமியைத் துதியுங்கள். அபயம் கிடைக்கும்.



**கும்பம் :** ஏதோ பொறந்தோமா, வாழ்ந்தோமான்னு அல்சர் பேஷண்ட்டு டயட்டு கணக்கா உப்பு சப்பு இல்லாம வாழ்ந்துக்கிட்டிருந்தீங்க இல்லையா? இனிமே 'கமகம'ன்னு சுவையான நிகழ்ச்சிகள் நிறைய நடக்கப் போகுது. சந்தோஷமா இருக்கப் போறீங்க. செழிப்பான பாதை, தார் போட்டுத் தயாரா இருக்கு. மனை, நிலம், வாகனம்னு ஆதாயம் கூடும். உல்லாசங்களில் நாட்டம் ஏற்படும். ஆனால் எதிலும் குறுக்கு வழி வேண்டாம். நேரா போங்க. ஜோரா வருவீங்க.



**மீனம் :** எடுத்த எடுப்பிலேயே ரொம்ப நல்ல பலன்தான். கண்ணுக்கு எட்டிய தூரம் வரைக்கும், மகிழ்ச்சி, முன்னேற்றம்னு சாதகமான சூழ்நிலைதான் தெரியுது. தைரியமா நடை போடுங்க. சிலருக்கு பக்தி மார்க்கத்திலும் வேதாந்த விசாரங்களிலும் ஈடுபாடு ஏற்படும். கணவன்-மனைவி உறவுத் தொகுதியில் அன்பு ஜெயித்ததாக அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்படும். பயணத்தில் எச்சரிக்கை தேவை. கொடுக்கல் வாங்கல்னு முந்திரிக் கொட்டை மாதிரி ஏதாவது செஞ்சு வைச்சா, மூக்கு உடையும் எச்சரிக்கை.

**அக்னிசர்மா பக்கம்**

**மே 23 முதல் 29 வரை**

# கோலிவுட் கவனத்துக்கு...

கோலிவுட்டில், புதுமுகம் தேவை என்றால், உடனே மும்பைக்குப் பறப்பது தான் வாடிக்கை. அவர்களுக்கு உதவுகிற புண்ணியம் நமக்குக் கிடைக்கட்டும் என்று இப்போது பாலிவுட்டில் 'ஹாட்' ஆக கருதப்படும் சில புது முகங்களை இங்கே அறிமுகப் படுத்துகிறோம். இவர்களில் சிலர், சினிமா வுக்குத்தான் புதுசேயொழிய, மாடலிங்கிலும், அழகிப் போட்டிகளிலும் ஜெயித்தவர்கள்.

**ஆர்த்தி அகர்வால்:** நியூஜெர்சியிலிருந்து பாலிவுட்டுக்கு இறக்குமதி யான முகம். 'பாகல்பான்' என்ற இந்திப் படம் மூலம் அறிமுகம். "யார் வீட்டுக் கதவையும் நான் தட்டாம லேயே, சினிமா வாய்ப்பு என் வீட்டுக் கதவைத் தட்டியது. நடிப்பு பொழுது போக்குதான்;" என்கிறார். ஆர்த்தி. அயல்நாட்டு இறக்குமதிகள் ஹிட் ஆன தில்லை; ஆர்த்தி இதற்கு விதிவிலக்கு ஆவாரா?

**அம்ருதா அரோரா:** "ரொம்ப நாட் களாகவே சினிமாவுக்கு அழைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். நான்தான் தள்ளிப் போட்டுக் கொண்டே இருந்தேன்" என்று கூறும் அம்ருதா வின் அக்கா, மணிரத்னத்தின் 'உயிரே'வில் தையதையா என்று ரயில் மீது டான்ஸ் பண்ணிய மலைகா அரோரா. 'ஜனரஞ்சகமான முகம்' என்று மும்பைத் திரையுலகம் இவருக்குச் சிவப்புக் கம்பளம் விரித்துள்ளது.

**பிபிஷா பாசு:** ஏகப்பட்ட மியூஸிக் வீடியோக்களில் தோன்றியுள்ள இந்தியாவின் மாடல்களுள் ஒருவர். நிறைய விளம்பரப் படங்களில் தோன்றியுள்ளவர். இவர் கைவசம் இரண்டு படங்கள். இவரது பெரிய பிளஸ் பாயிண்ட் இவரது கவர்ச்சிகரமான காந்தக் கண்களாம்!

**தியா மிர்ஸா:** 2000 வருடத்து மிஸ் ஆசியா பசிபிக் அழகி இவர். 'ஓம் ஜய் ஜக் தீஷ்' படத்தில் அபிஷேக்பச்சனுக்குத் தியாதான் ஜோடி. இவரது பிளஸ் பாயிண்ட் ஈர்க்கும் புன்னகை. ஐஸ்வர்யாராய்க்குப் போட்டியாக இவர் வருவார் என்கிறார்கள். "பெரிய ஸ்டாருடன் நடிப்பதனால் நிறைய பலன். சீக்கிரம் பாபுலாரிடி கிடைக்கும்; அதே சமயம், படம் தோல்வி கண்டால், பழி நம் மீது விழாது!" என்று புத்திசாலித்தனமாகக் கணக்குப் போடுகிறது இந்த மும்பைக் கிளி.

**ஈஷா தியோல்:** தர்மேந்திரா, ஹேமமாலினியின் நட்சத்திர வாரிசு. அம்மாவுடன் என்னை ஒப்பிடுவது எனக்கு அனுகூலமான



• ஈஷா தியோல்

• ஆர்த்தி அகர்வால்

விஷயமில்லை; ஆனால் அதைப் பற்றியெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா? என்று கேட்கிறார் ஈஷா. ஹிர்த்திக் ரோஷன் உட்பட டாப் ஹீரோக்களுடன் நடிக்க வாய்ப்பு கிடைத்தது இவருக்குப் பெரிய அதிர்ஷ்டம். 'அம்மா போலவே, இவரும் கனவுக் கன்னியாக, இளைஞர்களின் தூக்கத்தைக் கெடுக்கப் போகிறார்' என்று கமெண்ட் அடிக்கிறார்கள் மும்பையில்.

**கிரேஸி சிங்** : ஏற்கெனவே சீரியல்களில் நடித்த அனுபவம் உண்டு. அமீர்கானுடன் ஜோடியாய் நடிக்கிறார். 'கேமரா பயம் என்பதே எனக்குத் துளியும் இல்லை; கேஷுவலாய் நடிக்க வருகிறது' என்கிறார் கிரேஸி.



• யுக்தா முகி • தியா மிர்ஸா

• அம்ரிதா அரோரா

**ஹிரிஷிதா பட்** : 'நானாக வாய்ப்பு தேடி அலைய மாட்டேன். எனக்கு என்ன கிடைக்க வேண்டுமோ அது எனக்குக் கிடைத்தே தீரும். அதை யாராலும் தடுக்க முடியாது'' என்று தத்துவம் பேசும் இவர், விரில் சோப் விளம்பர அழகி. பாப் வீடியோக்களிலும் தோன்றியுள்ளார். 'கஹோனா பியார்ஹை' அமிஷாபட்டேலுக்கும், கரினாகபூருக்கும் சரியான போட்டி என்று சொல்கிறார்கள். இவருடைய இரண்டு படங்களுல் ஒன்றில் அபிஷேக் பச்சன் ஹீரோ. இன்னொன்றில் ஷாருக் கான்!

**யுக்தாமுகி** : ''மரங்களைச் சுற்றி வந்து, ஹீரோவின் கைகளில் விழுந்து, கண்ணை மூடிக் கொண்டு கிறங்க நான் தயாரில்லை. கேரக்டர்தான் எனக்கு முக்கியம்'' என்கிறார் இந்த உலக அழகி.

''இவரை ஹீரோயினாகப் போடுவதில் பிரச்னை இல்லை; இவர் உயரத்துக்கு ஈடான ஹீரோ கிடைப்பதுதானே பிரச்னை!'' என்கிறது பாலிவுட்.

தொகுப்பு : **சி.எம்.**

சோற்றுக்கு மட்டுமல்ல

வியாபாரச் சிறப்பியல்புகளும் நிர்வாக நீதி நெறிகளும்

Panasonic

கொனோசுகே மாட்சுசித்தா

கண்ணதாசன் பதிப்பகம்

# மாட்சுசித்தா சொல்லும் 'மஞ்சு' ரொட்டிக் கதை!

உலகப் புகழ்பெற்ற 'பானசானிக்' எலெக்டிரானிக் பொருட்கள் உற்பத்தி செய்கிற மாட்சுசித்தா நிறுவனத்தை உருவாக்கியவர் கொனோசுகே மாட்சுசித்தா. 1894ல் சாதாரணமான ஒரு குடியானவர் குடும்பத்தில் எட்டாவது பிள்ளையாகப் பிறந்த மாட்சுசித்தா, தமது ஒன்பதாவது வயதில் ஒரு சிப்பந்தியாக வாழ்க்கையைத் துவக்கியவர். அவரது வாழ்க்கை வரலாறு வெகு சுவாரசியமானது. அந்த அனுபவங்களின் தொகுப்பு, 'சோற்றுக்கு மட்டுமல்ல' என்ற புத்தகமாக தமிழில் வெளிவந்துள்ளது. அதிலிருந்து :

சில ஆண்டுகளுக்கு முன்பு நான் தலைமைப் பொறுப்பில் இருந்த நிறுவனத்தின் தலைமை அலுவலகம், மண்டல மற்றும் கிளை அலுவலகங்களிலிருந்து விற்பனை குறித்த தினசரி மற்றும் மாதாந்திர அறிக்கைகள் சமர்ப்பிக்கும் வழக்கம் இருந்தது. அதை ஆராய்ந்தபோது, மொத்தம் 240 அறிக்கைகள் தலைமை அலுவலகத்துக்குச் சமர்ப்பிக்கப்படுவது தெரியவந்தது.

'இத்தனை அதிகமான அறிக்கைகள் தேவைதானா? இவற்றைத் தயாரிக்க ஆகும் நேரம் எவ்வளவு? இவற்றை யார் படிக்கிறார்கள்? என்று விசாரித்த போது, எனக்குத் திருப்திகரமான பதில் கிடைக்கவில்லை. தேவையில்லாத அறிக்கைகளை நிறுத்திவிடச் சொன்னேன். கடைசியில் முக்கியமான 42 அறிக்கைகள் மட்டுமே வரத் தொடங்கின.

எங்கள் நிறுவனத்தைப் பொறுத்தவரை, பாராட்டுக் கடிதங்களை விட, புகார் கடிதங்களுக்குத்தான் அதிக முக்கியத்துவம் தரப்படும். ஒருமுறை, ஒரு பேராசிரியர் தமது பல்கலைக்கழகத்திற்கு அனுப்பி வைக்கப்பட்ட கருவி, சரியாக இயங்கவில்லை என்று புகார் அனுப்பியிருந்தார். நான் உடனே, அந்தக் கருவி சம்பந்தப்பட்ட பொறுப்பாளரைப் பல்கலைக்கழகத்துக்கு அனுப்பி வைத்தேன். அந்தப் பேராசிரியர் மிகவும் கோபத்தில் இருந்தார். எங்கள் ஊழியர், பொறுமையுடன் நாங்கள் விற்பனை செய்த கருவியில் என்ன தவறு என்று விளக்கிச் சொல்லி, சரிசெய்து கொடுத்தவுடன் பேராசிரியரின் கோபம் மறைந்து விட்டது. பல்கலைக்கழகத்தின் மற்ற துறைகளும் அதே கருவியை வாங்குவதற்குச் சிபாரிசு செய்தார். புகாருக்கு மதிப்பளித்து அதை சரிசெய்த எங்கள் அணுகுமுறை, எங்களுக்குப் புதிய பிசினஸைப் பெற்றுத் தந்தது.

இளம்வயதில் நான் கேட்ட கதையொன்றை என் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாது. ஜப்பான் செழிப்படையாத காலகட்டம் அது. ஒரு பிற்பகல் நேரம், பிச்சைக்காரர் ஒருவர், ஒரு மிட்டாய்க் கடைக்கு வந்து, பிரபலமான 'மஞ்சு' என்ற பெயருடைய ரொட்டியை வாங்கக் காசு கொடுத்தார். அந்தக் கடையின் ஊழியர், ஒரு ரொட்டியை, காகிதத்தில் சுற்றி, அந்தப் பிச்சைக்காரரிடம் தர முற்பட்டபோது, கடையின் உரிமையாளர், அந்த ரொட்டியை ஊழியர்களிடமிருந்து வாங்கி, தாமே, மிகப்

பணிவுடன் ரொட்டியைப் பிச்சைக்காரி டம் கொடுத்துவிட்டு, 'உங்களுடைய ஆதரவுக்கு எங்கள் நன்றி' என்றார். ஊழியருக்கு முதலாளியின் செய்கை வியப்பளித்தது. முதலாளி விளக்கம் அளித்தார் : நமது வாடிக்கையாளர்களான பணக்காரர்கள் நம் கடையில் ரொட்டி வாங்கிச் செல்வது வழக்கமான ஒன்றுதான். ஆனால், வசதியில்லாத இந்தப் பிச்சைக்காரன், தன் கைக் காக முழுவதையும் செலவழித்து, நம் தயாரிப்பான 'மஞ்க' ரொட்டியை வாங்குவதற்கு வந்தார். அவருக்கு ரொட்டி மிக உயர்ந்த ஒரு விஷயம். அதனை மதித்து கடை உரிமையாளரான நானே அவருக்கு ரொட்டியைக் கொடுக்க முன்வந்தேன்.

ஒரு உண்மையான வியாபாரி அனைத்து தரப்பட்ட வாடிக்கையாளர்களையும் மதித்து நடக்கும் செயல் மூலம் மகிழ்ச்சி அடைகிறான் என்பதே இந்தக் கதை உணர்த்தும் செய்தி.

என் வாழ்க்கையில் மாபெரும் முன்னேற்றம் கண்டதற்கு, என் தந்தையார் கூறிய அறிவுரை மிக முக்கியமான காரணம். நான் அப்போது, ஒரு சைக்கிள் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். சைக்கிள் கடை வேலையிலிருந்து விலகி, ஒஸாகா அஞ்சல் சேமிப்பு நிலையத்தில் இளநிலை உதவியாளராகச் சேர வேண்டும் என்று ஒருவர் யோசனை கூறினார். நானும் எனது தாயாரும், இந்த யோசனையால் கவரப் பட்டோம். ஆனால், என் தந்தை இதற்கு எதிர்ப்பு தெரிவித்தார். "சொந்தத்தில் ஒரு வியாபாரம் தொடங்கு. அதுவே சிறந்தது. அதில் நீ வெற்றி பெற்று விட் டால், உன்னிடம் நன்கு படித்த பலர், வேலைக்கு வருவார்கள்" என்று கூறி னார். பின்னர் நான் சைக்கிள் கடையிலிருந்து விலகி, நானே விரும்பிய மின் பொருள் நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்து விட்டேன். நான் சைக்கிள் கடையை விட்டு விலகியபோது, என்னுடைய தந்தையார் உயிரோடு இல்லை. ஆனால், அவர் சொன்னது மிகச் சரியான ஆலோசனை என்பது எனக்கு விரைவில் புரிந்தது.

மாட்சு சித்தா மின் நிறுவனம், 1930ல், வானொலிப் பெட்டிகளை வாங்கி, விற்பனை செய்யத் துவங்கியது. ஜப்பானில் நாங்கள் விற்பனை செய்த வானொலிப் பெட்டிகளுக்கு நல்ல வரவேற்பு இருந்தாலும், விற் பனைக்குப் பின் ரிப்பேர் என்று திரும்பி வந்தன. இதனால், பலரும் எங்களை வானொலிப் பெட்டி தயாரிப்பில் இறங்கச் சொன்னார்கள். எங்களுக்கோ அதில் முன் அனுபவம் இல்லை. எனவே, 'கே' என்ற நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, அவர்கள் எங்களுக்காக வானொலிப் பெட்டிகள் உற்பத்தி செய்து கொடுக்க, நாங்கள் அவற்றை விற்பனை செய்ய ஆரம்பித்தோம்.

ஆனாலும் பிரச்னை தீரவில்லை. முழுக்க முழுக்க பழுதில்லாத வானொலிப் பெட்டிகளை, 'கே' நிறுவனத்தால் தயாரித்துக் கொடுக்க முடியவில்லை. இதனால் ஏகப்பட்ட புகார்கள். இதன் காரணமாக, நாங்களே வானொலிப் பெட்டிகள் தயாரிப்பது என முடிவு செய்தோம். எங்கள் கம்பெனியின் ஆராய்ச்சிப் பிரிவினர் அனுபவமில்லை என்று காரணம் சொல்லி, தயங்கினார்கள்.

வானொலிப் பெட்டிகள் தயாரிக்கத் தேவையான பொருட் கள் வாங்கியாகிவிட்டது. அவை வீணாகக் கூடாது. நம்மிடம் உள்ள வசதியான ஆராய்ச்சிக்கூடமும், விசுவாசமான ஊழியர் களுமே நமது பலம். முயற்சி செய்யுங்கள்; வெற்றி பெறுவீர்கள் என உற்சாகமூட்டினேன். ஆய்வுக்கூடத்தில் தலைமைப் பொறியாளர் உடனடியாக வேலையை ஆரம்பித்தார். மூன்று மாதங்கள் இரவு, பகலாக வேலை செய்தார்கள். புது வடி வத்தில் அருமையானதொரு வானொலிப் பெட்டித் தயார். இன்று தேஷனல் வானொலிப் பெட்டிதான் ஜப்பானில் நெம்பர் ஒன்.

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

வெளியீடு : கண்ணதாசன் பதிப்பகம், சென்னை - 17. விலை ரூ. 72.00



# சிஹாமணி ரமாமணி

வெட்டிப் படுக்கை, கையில் ஒரு கார்டுலெஸ் மைக் சகிதம் ஊர் ஊராக அலைந்து கொண்டிருந்த விசு, தமது பாணியிலிருந்து சென்டிமீட்டர் கூட விலகி விடாமல் ஒரு சூப்பர் ஃபேமிலி டிராமாவைக் கொடுத்திருக்கிறார்.

ஒரு ஆண்மகனுக்கு வாய்க்கப் பெறும் தாய், சகோதரி, மனைவி, மகள் ஆகிய நான்கு பெண்மணிகளும், பரஸ்பரம் அவரவர் பாத்திரத்தைப் புரிந்து கொண்டு, தேவையான தருணத்தில் விட்டுக் கொடுத்துப் போகாவிட்டால், இடையிலே சிக்கிக் கொள்ளும் அந்த ஆணின் நிலை என்ன? என்கிற ஆராய்ச்சியில் இறங்கியிருக்கிறார் விசு. இதைக் கச்சிதமான திரைக்கதையில் பொருத்தி, நொடிக்கொரு காமெடியோடு சொன்னதற்காக, டாக்டர் பட்டங்களை வீணடிக்கும் பல்கலைக் கழகங்கள் அதில் ஒன்றை, கண்ணை மூடிக் கொண்டு விசுவுக்குக் கொடுக்கலாம்.

அம்மா, அக்கா, மனைவி, ஆகிய மூன்று பேரின் ஈகோ போரில் சிக்கி, தொண்டை விக்கும் சிஹாமணியாக எஸ்.வி. சேகர். ரேசில் எல்லோரையும் முந்திவிடுவது இவர்தான். ஆவது பெண்ணாலே – இது விசு. இல்லை அழிவது பெண்ணாலே – இது எஸ்.வி. சேகர். இந்தக் குட்டி பட்டிமன்றத்தை இருவரும் அருமையாக அரங்கேற்றும் போது தியேட்டரில் அமைதி.

சிஹாமணியின் மனைவி ரமாமணியாக ஊர்வசி வாழ்ந்திருக்கிறார். வெங்காய சாம்பாரால் கூட வீட்டில் கலவரம் வெடிக்க காரணமாகிவிடும், இவரின் படபட பட்டாக பாணி டயலாக் டெலிவரி, கொளுத்தும் வெயிலுக்குக் குளிர்ச்சி.

ஆச்சி மனோரமாவுக்கும்-கிரேஸி மோகனுக்கும் ஜோடிப் பொருத்தம் சகிக்கவில்லை என்றாலும் சமாளித்து விடுகிறார்கள். வீட்டுக்குள்ளேயே படத்தை முடித்து நேரடி டிராமாவை ஃபிலிமுக்குள் சுருட்டுகிறார் என்ற குற்றச்சாட்டிலிருந்து தப்பிக்க, ஏற்காடு, ஊட்டி என்று பசுமையான இடங்களில் படம் பிடித்திருக்கிறார்கள். அதற்கு பேபி பிலிப்ஸின் குளுகுளு ஒளிப்பதிவு உதவியிருக்கிறது.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு சாந்தமாக இசை அமைத்திருக்கிறார் சந்திரபோஸ். ஆனால் இவரின் பின்னணி இசைக்குப் படத்தில் வேலையே இல்லாமல் செய்து விடுகின்றன கூர்மையான வசனங்கள். இவைதான் படத்தின் பலம், பலவீனம் இரண்டும்.

எப்பேர்பட்ட குடும்பச் சிக்கல் என்றாலும் அதை லாஜிக்கோடு, தீர்த்து வைத்துவிடும் விசு, இந்தப் படத்திலும் அதைத் திறம்பட செய்திருப்பதால், ஜெ.வுக்குக் கிடைத்ததைப் போல தாய்க்குலத்தின் ஆதரவு விசுவுக்கும் கிடைக்கலாம்!

— விஷுவல்தாசன்

• அவெரெஜ்

# சோகத்துக்கிடையே ஆறுதல்!

✉ கிளிப்பிள்ளைக்குக் கூறுவது போல், படித்துப் படித்து பக்கம் பக்கமாக, தலையங்கம் மூலம் கருத்துக் கூறி வந்தீர்கள். மக்கள் ஏமாற்றி விட்டார்களே!

சென்னை - 78, சி. பூங்கோதை

✉ 2001ன் சூப்பர் கமெண்ட். தேவந்தி துரைராஜுயின் கேள்விக்குத் தராகவின் பதில் தமிழ்ப் பாடப் புத்தகத்துக்கு நோட்ஸ் போடலாம்...!

சென்னை - 78, அஹலவலன்.

✉ என்.சி. ஸ்ரீதரனின் 'மாண்புமிகு மெமரி!' தொடர் ஞாபக மறதியைப் போக்கி அறிவாற்றலை வளர்த்துக் கொள்ள உதவியது. பாராட்டுக்கள்.

திருப்பூர். பி. சிவக்குமார்

✉ ஸ்ரீ முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யாரின் பொன்னுடல் மறைந்தாலும் அவர் நமக்களித்த இன்னுரைகள் என்றும் மறையாது. ஒலி நாடாக்களில் பதிவான பிரவசனங்கள் இனி தொடர்ந்து வெளிவரும் என்று நீங்கள் குறிப்பிட்டிருந்தது, சோகத்துக்கிடையேயும் ஆறுதல்.

சென்னை-91, அஸ்வதி மணாளன்.

✉ லட்சக்கணக்கான வாசகர்களுக்கு ஆசார்யராக இருந்து பகவானிடத்தில் மனத்தை ஆச்ரயிக்க வைத்த ஸ்ரீமுக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார் நம்மை விட்டுப் பிரிந்தது ஈடு செய்ய முடியாத குறை.

சென்னை - 40, நெ.ரா. சந்தானம்.

✉ வால்மீகியும், கம்பனும், காளிதாஸனும், பட்டாத்திரியும், ஆழ்வார்களும், வியாஸரும், பரத்வாஜரும் போட்டிப் போட்டுக் கொண்டு முக்கூரின் வாக்கின் மூலம் வந்தார்களே? நித்திய கர்மானுஷ்டானத்தின் முக்கியத்துவம், காயத்ரியின் பெருமை, தர்ம சாஸ்தர வியாக்யானம், ஸ்த்ரீ தர்மம் - என்று எத்தனை வித பாடங்களைப் புரிய வைத்தார்? கம்பீரமான வேத மந்த்ர கோஷங்கள், உதாரணங்கள், உப கதைகள் - தங்கு தடையுண்டா அவருடைய 'கம்ப்யூட்டர் மெமரியில்?' - சமஸ்கிருதம் தெரியாதவர்களுக்குக்கூட எளிய தமிழில் புரிய வைத்தவர் முக்கூர்.

மும்பை- 71, எஸ்.டி. ராஜன்.

✉ 'சர்வம் விஷ்ணு மயம்; அதுவே என் மூச்சுக்காற்று' என முக்கூர் கூறியது போல், அவர் மூச்சுக்காற்றை அன்றே எடுத்துச் சென்று விட்டான் அந்த மாயக் கண்ணன். சொர்க்க லோகத்தில் 'குறையொன்றுமில்லை கண்ணா' என கண்ணனை நேரிலேயே கண்டு மகிழ்ந்து பூரித்துக் கொண்டிருப்பார்.

சென்னை - 90, சியாமளா சுவாமிநாதன்.

**ஸ்ரீ முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யார் மறைந்த துயரைப் பகிர ஏராளமான கடிதங்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. ஒரு சிலவற்றை மட்டும் பிரசுரித்திரிக்கிறோம்.**

**— ஆர்.**

நேரம் : காலை 10.00

தேதி : 14.4.2001

அதிகபட்ச மதிப்பெண் : 100

பாடம் : "தங்க நகை - உற்பத்தி நுட்பங்கள்"

.... என்ன யோசிக்கிறீர்கள்? எந்தக் கல்லூரியில் வைத்த தேர்வு - வினாத்தாள் என்றா?

கேள்விகளைப் படியுங்கள்.

# 'தங்க'மான மனைவி! 'வைர'மான மகள்!! எங்கே..?

கீழ்க்கண்ட அனைத்துக் கேள்விகளுக்கும் பதிலளிக்க வேண்டும் :

1. 'KDM' அல்லது 'Cadmium' என்றால் என்ன? அதன் பயன் என்ன?
2. பற்றவைக்கும் பொடி என்பது என்ன?
3. 916 என்பது எதைக் குறிக்கிறது?
4. தங்கத்தில் 'காரட்' மற்றும் வைரத்தில் 'காரட்' - என்ன வேறுபாடு?
5. எத்தனை 'காரட்' ஒரு கிராமுக்குச் சமம்?
6. 'போல்க்கி டயமன்' என்பதைப் பற்றி சிறு குறிப்பு எழுதவும்.
7. மிக அதிகத் திண்மையுள்ள 'கல்' எது?
8. ஜர்க்கான் கல், A.D.கல் - ஒற்றுமை வேற்றுமை என்ன?
9. வைரத்திற்கும் மற்ற வெள்ளைக் கற்களுக்கும் வித்யாசம் காண்பதெப்படி?



.... கேள்விகள் தொடர்கின்றன. தனி அறையில் இரண்டு மாணவிகள் மட்டும் தேர்வு எழுதினர். ஒருவர் அம்மா, மற்றொருவர் மகள். அம்மா பெற்ற மதிப்பெண்கள் 92% மகள் பெற்றது 93%!!

ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? பரீட்சை வைத்தவர் பகல்லா ரோடு. ஸ்வர்ணாலயா ஜூவெல்லரியின் நிர்வாக இயக்குனர் திரு. சுகுமாரன். பரீட்சை எழுதியவர்கள் திருமதி லலிதா சுகுமாரன் மற்றும் செல்வி அமிர்தா சுகுமாரன்!

புதிதாகத் தொடங்கி 2 மாதத்திற்குள் வாடிக்கையாளர்களின் கவனத்தைக் கவர்ந்து அபிமானத்தைப் பெற்ற ஸ்வர்ணாலயா ஜூவெல்லரியின் இயக்குநர்கள்தான் லலிதா சுகுமாரனும் அமிர்தா சுகுமாரனும்.

"இந்த ஜூவெல்லரி பொட்டிக் உருவாவதற்கு முன்பேயே எனது மனைவிக்கும் மகளுக்கும் குறிப்புகளை எழுதித் தந்து விளக்கம் சொல்லி தயார் செய்து வந்தேன். 2, 3 வாரங்களில் அவர்கள் ஆர்வத்துடன் புரிந்து கொண்டதால் அவர்களுக்கு முக்கிய பொறுப்புகளைத் தந்து கடையை நடத்தச் சொன்னேன். லலிதா சுகுமாரன் நிர்வாகம் மற்றும் ஆர்டர் துறையினையும் மகள் அமிர்தா விற்பனை மற்றும் ஸ்டாக் பிரிவினையும் ஏற்று இயக்கி வருகிறார்கள். எனக்குப் பிடித்த மார்க்கெட்டிங் மற்றும் பொதுவான ஆலோசனை பிரிவுகளை நான் பார்த்துக் கொள்கிறேன். எனக்கே பிரமிப்பு தட்டும் அளவிற்கு நேர்த்தியாகவும் துல்லியமாகவும் நடத்திச் செல்கிறார்கள். நேரடி வாடிக்கையாளர்களில் பெரும்பான்மை பெண்களாக இருக்கும் இத்தொழிலில் பெண் நிர்வாகிகள் பரிவுடனும் பணிவுடனும் நடந்து சேவை செய்வது பெயர் பெறுவது பொருத்தமானதுதான். பரீட்சையில் காண்பித்த சாதனையினைப் பணியிலும் காண்பிப்பது எனக்குப் பெருமையே!

திருமதி. லலிதா சுகுமாரனது அனுபவம் பற்றி கேட்டபோது : "எனது சிறிய





அனுபவத்தில் கவனித்த விஷயம் இது தான் : நகை வணிகத்தின் தாரக மந்திரங்கள் மூன்று : 1. தரம், 2. தினுசுகள் 3. சேவை அல்லது உபசரிப்பு. இதில் மூன்றில் எது குறைந்தாலும் எத்தனை ஆயிரம் கிலோ ஸ்டாக் இருந்தாலும் வாடிக்கையாளர்களை திருப்திபடுத்த முடியாது. குறைந்த லாபம் வைத்தால், வாடிக்கையாளர்களைக் கவர முடியும்தான். ஆனாலும் 'உயர்ந்த தரம், குறைந்த விலை' என்பது கோட்பாட்டு முரண்பாடு என்பதையும் நாம் உணர வேண்டும்'' என்றார். தவறான பேரம் பேசுவதின் எல்லைகளை உணர்த்துவது போல இருந்தது அவரது வெளிப்படையான பேச்சு.

அதற்குள் வயதில் பெரிய ஒரு பெண்மணி ''லலிதா, இங்க வாம்மா, இந்த ஆரத்தை உனக்குப் போட்டுக் காண்பியேன்'' என்று சினேகமாக அழைக்கவே திருமதி சுகுமாரன் நம்மிடம் விடை பெற்றுக் கொண்டார். அதே கஸ்டமரைப் பார்த்து ''ஹாய் ஆண்ட்டி!'' என்று சைகயசத்தவாறு வந்த அமிர்தாவிடம் கேள்விகளைத் தொடர்ந்தோம்.

''நகைக்கடை என்றால் கடை வீதியில் இருக்கும் என்கிற நியதியிலிருந்து விலகி ஒரு அடுக்குமாடி குடியிருப்பில் வைத்திருக்கிறீர்கள். வியாபாரம் எப்படி இருக்கிறது?''

''கடை வீதியிலிருந்து விலகி இருப்பது ஒரு ப்ளஸ்பாயிண்ட்டுதான். நெரிசலை விரும்பாதவர்கள், செல்ஃப் டிரைவிங் செய்பவர்கள், ஆற அமர உட்கார்ந்து வாங்க விரும்புபவர்கள், ப்ரதியேகக் கவனத்துடன் உபசரிக்கப்பட விரும்புபவர்கள், பிரைவசி விரும்பும் வி.ஐ.பி.கள் ஆர்ட்டிஸ்டுகள் என்று இப்போதே எங்கள் வாடிக்கையாளர் பட்டியல் நீண்டு இருக்கிறது'' என்கிறார் அமிர்தா. ஸ்டெல்லா மாரிஸ் கல்லூரியில் படித்த அமிர்தாவை நகைக்கடை அதிபர்களிலேயே மிக இளைய பெண் இயக்குநர் என்று சொல்லலாம். ''அப்பா திரு. சுகுமாரன் ஒரு எக்ஸலண்ட் டீச்சர். 1998 வரை லலிதா ஜூவல்லரியின் நிர்வாக இயக்குநராக 14 வருடம் அவர்கள் செய்த மார்க்கட்டிங் மற்றும் பப்ளிக் ரிலேஷன் சாதனைகள் இன்று எங்களுக்கு இன்ஸ்பிரேஷன். நகை, வைரம் என்று பாடம் சொல்லும் போது எங்களது அனுபவக் குறைவைக் கேலி செய்யாமல், • உற்சாகப்படுத்தி சொல்லிக் கொடுத்து, பரீட்சையும் வைத்து எங்களை தயார் பண்ணியது மறக்க முடியாத அனுபவங்கள்'' என்று கண்களில் உற்சாகம் மின்ன விவரித்தார் அமிர்தா சுகுமாரன். மாடியில் இருந்த V.I.P. Lounge, கவுண்ட்டர்களுக்கிடையே கண்ணாடி தடுப்புச் சுவர்கள், குடும்பமே வளைய வந்து செய்யும் உபசரிப்புகள், மற்ற சேல்ஸ் அலுவலர்களது புன்சிரிப்புடன் வரவேற்பு, நேர்த்தியான வேலைப்பாடுள்ள நகைகள், பஜாரில் கிடைக்காத தினுசுகள், காரட் வெறும் ரூ.7000க்கு பட்டை தீட்டிய தட்டை வைர டிசைன்கள், சிங்கப்பூர், ஹாங்காங் செயின்கள், துபாய் ஹார்ட்



பென்டன்ட், வேறெங்கும் கிடைக்காத ப்ரைவசி, தொந்தரவில்லாத கார் பார்க்கிங், பழைய நகைகளை மார்க்கட் விலைக்கே வாங்கிக் கொள்ளும் பாலிசி, தங்கம், வெள்ளி, வைரம், பர்த்ஸ்டோன்கள், Flat Diamonds, பரிசுப் பொருள்கள், கொலுசுகள், கார்னட், Jade ரூபி, Onyx மாலைகள் என விரியும் ஸ்டாக்.... இவை எல்லாம் 5, பசுல்லா ரோடு, தி.நகரில் ஜொலிக்கும் ஸ்வர்ணாலயா ஜூவல்லரியின் வெற்றிக்கு அஸ்திவாரங்கள். வளர வாழ்த்துகிறோம்.

"அண்ணி... கௌதம் அண்ணா 98ல பேட்டிங்.. சென்சுரி அடிக்கப் போறான் வாங்க" என்றான் கார்த்திக். பூஜை அறையில் இருந்த திவ்யாவிடம்.

திவ்யா பூஜையறையில் பிரார்த்தனையில் இருந்தாள். "பெருமாளே... அவர் நூறு ரன் அடிக்கணும்" என்று வேண்டியபடி.

திவ்யாவின் மாமியார் உள்ளே வந்து, "அவன் என்ன சண்டைக்கா போறான்? அவன் ஆடறதை நீ பாக்க வேணாமா."

"நான் பிரார்த்தனை பண்ணினாத்தான் அவர் நல்லா ஆடறார் அம்மா... நான் வேண்டிக்கலைன்னா அவுட் ஆயிடறார்."

"சர்தான்."

திவ்யாவுக்குக் கிரிக்கெட் தெரியாது. புரியாது. ஆறடிக்கும் எட்டடிக்கும் ராட்சஸ ஆகிருதியில் கறுப்பர்களும் சிவப்பர்களும் குண்டு வீசுகிறார்போல் பந்து எறிந்து... யுத்த களக் கர்ணன் மாதிரி முகம் கை, கால் எல்லாம் கவசம் அணிந்து பரிதாபமாய் அதை எதிர் கொள்ளும் ஆட்டக் காரர்களைப் பார்த்தால் அவளுக்குச் சிரிப்பு வரும்.

கௌதம் இந்திய கிரிக்கெட் அணியின் தலைவன். இந்தியாவின் தலைசிறந்த ஆட்டக்காரர்களில் ஒருவன். தோத்தாங்கொள்ளிகள் என்று பெயர் பெற்றிருந்த இந்திய அணியைத் திறமையாக நிர்வகித்து வெற்றிப் பாதையில் நடத்திச் செல்பவன்.

வரவேற்பறை தொலைக்காட்சி மறுபடி அலற... "அண்ணி செஞ்சுரி" என்று கார்த்திக் இரைந்தான்.

திவ்யா தொலைக்காட்சியிடம் ஓடினாள். ஜனங்கள் "ஹே" என்று ஆர்ப்பரிக்க வர்ணனையாளர் ஆரவாரத்துக்கு மேல் பாராட்டுக் குரலெழுப்பி இரைந்து கொண்டிருக்க... தொலைக்காட்சியில் கௌதம் தெரிந்தான். அவன் அடித்த நான்கும், ஆறும் மறுபடி ஸ்லோமோஷனில் பவனிவருவதைச் சந்தோஷமாய்ப் பார்த்தாள்.

கௌதமுக்கும் திவ்யாவுக்கும் திருமணமாகி மூன்று ஆண்டுகள் ஆகிறது. கௌதமும் திவ்யாவும் பதினைந்து வருடப் பழக்கம். ஒரே பள்ளியில் படித்து ஒன்றாய் வளர்ந்த சின்ன வயது நண்பர்கள். நட்பு காதலாக, இருவர் வீட்டிலும் எதிர்ப்பில்லை.

கௌதம் முதல் டிவிஷன், ரஞ்சி, துலீப் என்று முன்னேறி... ஸ்டேட் பாங்கில் ஒரு வெற்று உத்தியோகம் வாங்கி, டெஸ்ட் தொட்டு, சதம் அடித்து பத்திரிகைக்காரர்கள் துரத்த ஆரம்பித்தவுடன் திவ்யாவின் அம்மா, ஸ்டேடஸ் மாறிவிடப் போகிறதே என்ற கவலையில் நச்சரித்து, கல்யாணம் செய்து முடித்தார்கள்.

திவ்யா தன் வாழ்க்கையில் வேறு எந்த ஆணையும் பார்க்கா



# இரண்டாவது







மல், ஷாருக்... டாம் க்ரூஸ் என்று கனவு காணாமல் அவள் நினைவு பூராவும் கௌதம் நிரம்பியிருக்க, அவன் மனைவி ஆனாள். திவ்யாவுக்கு கிரிக்கெட் புரியாதே தவிர கௌதமின் கிரிக்கெட் கவனத்துக்குத் தடை வராத மாதிரி வீட்டுக் கடமைகள் அத்தனையும் அவள் மேற்பார்வையில் வைத்திருந்தாள். கல்யாணமான இரண்டாம் வருடமே வினோத் பிறக்க, அதன் பிறகு குழந்தையையும், கௌதம் என்னும் இந்தியாவின் குழந்தையையும் பேணிக் காப்பாற்றுவதே அவளின் முழு நேர வேலையானது.

கௌதம் அசுர வேகத்தில் வளர்ந்தான். கிரிக்கெட் இல்லாத நேரத்தில் கடைத் திறப்பு... கண்தான முகாம் என்று போட்டோக்கள் நடுவே சிரித்தான். இன்னும் வருடங்கள் கரைந்து வெற்றிகள் குவித்து வலம் வரும்போது

# இன்னிங்ஸ்

தான் அவன் வாழ்க்கை தடம் புரண்டது.

ஒரு வழக்கமான புயல் ஆந்திர ஒரிஸா பகுதியில் புகுந்து ரணகளம் செய்துவிட்டுப் போக, நிவாரணத்துக்குக் கிரிக்கெட்டர்களும் சினிமா நட்சத்திரங்களும் சேர்ந்து ஈடன் கார்டனில் ஒரு தமாஷ் விளையாட்டு விளையாடி, நிதி சேர்க்கும் ஆட்டத்திற்குப் பிறகு நடந்த விருந்தில் தான் அந்தத் தவறு நடந்தது.

எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு கிரிக்கெட்டில் கேனத்தனமாய்ச் சந்தேகங்கள் கேட்டுக் கொண்டிருக்க... நவீனா வந்தாள்.

நவீனா தமிழ்த் திரையுலகின் கனவுக் கன்னி. திரையில் அவளைக் கண்ட மாத்திரத்தில் காசு எறிந்தார்கள். அவள் ஆடும் நடனம் ஒன்று படத்தில் இணைத்தால் இன்னும் சில இலட்சங்கள் கூட்டித் தர விநியோகஸ்தர்கள் தயாராய் இருந்தார்கள்.

அவனிடம் வந்து அறிமுகம் தேவையில்லை என்கிற தோரணையில்... "ஹாய் நான் உங்க விசிறி" என்றாள் பரவசத்துடன்.

கௌதம் "நானும்தான்" என்றான்.

"கான்பூர்ல நீங்க அடிச்ச செஞ்சுரி மறக்க முடியாது. அபார ஆட்டம்" எனறாள் அவன் கண்களைப் பார்த்தபடி.

"நன்றி" என்றான்.

**ஆனந்த்**

"உங்க வெற்றிக்குக் காரணமே உங்க கான்சன்ட்ரேஷன்தான்னு நான் சொல்லுவேன். உள்ள நுழைஞ்சா யாரையும் பார்க்காம சிரிக்காம கல்லு மாதிரி விளையாடறீங்க..."

"என் மனைவி என்ன சொல்றா தெரியுமா? நான் ஆடும்போது அவ பிரார்த்தனை பண்றாளாம். அதுனாலதான் நான் நல்லா ஆடறனாம். அவ வேண்டிக்கிட்டபடிதான் நடக்குதாம்."

"நல்ல தமாஷ்... உங்க திறமையினாலன்னு நாங்க நினைச்சிக்கிட்டு இருக்கோம்."

"அவ அப்படி நம்பறா... அவ அப்படி சொல்லிச் சொல்லி எனக்கே அப்படி ஒரு சென்டிமென்ட் வந்திருச்சு..." என்று சிரித்தான்.

இருவரும் அந்த சின்னக் கூட்டத்திலிருந்து சற்று விலகி வந்து பேச ஆரம்பித்தார்கள். நவீனா அவன் கண்களுக்குள் பார்த்தபடி பேசியது அவனுக்குப் பிடித்தது.

அடுத்த முறை சந்திக்கும்போது "நீங்கன்னு சொல்லாதீங்க" என்று இன்னொரு கண் கெஞ்சலுக்குப் பிறகு இருவரும் "நீ" என்று தாவி இன்னும் கொஞ்சம் பழகிய பிறகு, நவீனா அவனை "கோம்ஸ்" என்றும், அவன் அவளை "நவி" என்றும் கூப்பிட ஆரம்பித்தார்கள். அவன் ஆடும் இடங்களெல்லாம் அவள் வந்து பார்த்தாள். வெளியூரிலிருந்தாலும் தொலைபேசி அவனைப் பாராட்டினாள். இன்னும் சந்தித்தார்கள். தமிழ் நாட்டின் கனவுக் கன்னி தன்னிடம் இவ்வளவு நேசத்துடன் நடந்து கொள்வதில் அவனுக்கு இலேசான கர்வமிருந்தது.

மேலோட்டமாய் இருந்த காதல் விளையாட்டு இங்கிலாந்தில் தீவிரமடைந்தது. கிரிக்கெட் போட்டி நிறைவு பெற்று சகாக்கள் எல்லோரும் திரும்பி இந்தியா போக, கௌதம் மட்டும் நாட்டிங்ஹாம்ஷையருக்கு ஆடுவது பற்றிப் பேச வேண்டும் என்று இன்னும் சில நாட்கள் தங்கினான். இங்கிலாந்துக்கு வந்திருந்த நவீனாவிடன் ரகசியமாய் நேரம் செலவிட்டான்.

இருவரின் ரகசியக் காதலும் உச்சகட்டம் எட்டியது. வெற்றி மேல் வெற்றி அடைந்து புகழின் போதையில் இருந்த கௌதம் இந்த கள்ளக் காதலின் வசீகரத்தில் வீழ்ந்து அதில் திளைத்தான். தன் ஆண்மையின் அடையாளமாய் அதைக் கருதியதில் அவனுக்கு அதில் மிகுந்த சந்தோஷமிருந்தது. தமிழ் சினிமாவில் இன்னும் கொஞ்சம் மும்பை வசீகர யுவதிகள் வந்து குவிந்து, நவீனாவின் வாய்ப்புகள் மெல்லச் சரிந்து கொண்டிருந்த நேரத்தில் அவள் கௌதமின் முழு நேரக் காதலியானாள்.

கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கும் காலாவதியான நடிகைகளுக்கும் இருந்த சோபர்ஸ் கால தொடர்பை அறிந்திருந்த பத்திரிகையாளர்களின் சந்தேகப் பார்வையில் இருவரும் ஒன்றாய்ப் பட, விவகாரம் புகைய ஆரம்பித்தது. கௌதம் மேற்கிந்தியத் தீவில் கொஞ்சம் சரியாய் ஆடாத தருணத்தில் இந்த விவகாரம் இன்னும் பேசப்பட்டது. ஒரு அதிகப்பிரசங்கி நிருபர் கௌதமிடம் இதைக் கேட்க, அவன் நிருபரை ரொம்ப கோபித்ததில்... பெட்டிச் செய்தித் தலைப்புச் செய்தியானது. நவீனா "நாங்கள் இருவரும் நல்ல நண்பர்களாய்த் தான் பழகுகிறோம்..." என்றெல்லாம் அனாவசிய பேட்டி கொடுத்து இன்னும் கிளறினாள்.

இதெல்லாம் திவ்யாவை வந்து அடைந்தபோது முதலில் அவள் அதைப் புரளியென்று ஒதுக்கினாள். மேலும் மேலும் பத்திரிகைகளில் இந்தச் செய்தி வர, அவளின் நண்பர்கள், அக்கம் பக்கத்தார் எல்லோரும் கொஞ்சம் துருவித் துருவிக் கேள்வி கேட்டுத் துன்புறுத்தினார்கள். நிறைய உபதேசித்தார்கள். அவனைச் சற்று அந்தரங்கமாக கவனித்ததில் அந்த வதந்தியில் நிறைய உண்மை இருக்க வேண்டும் என்று புரிந்தது. அப்பா அம்மா கலவரப்பட்டு அவளிடம் வினவ, சற்று பதற்றமடைந்தாள்.

கௌதம் வீட்டிலிருந்த ஓர் இரவு... அவனை அணுகி...

"உன் போக்குச் சரியில்லை. கொஞ்சம் பட்டும் படாமலும் இருக்க. இப்படி நீ இருந்ததில்லை. ஏதோ குருட்டு யோசனை பண்ற.. எங்கிட்ட சரியா பேசறதில்லை. பேசினா காதுல வங்காம தலையை மட்டும் ஆட்டற..."

"நான் சரியாதான் இருக்கேன் திவ்யா."

"இல்லை கௌதம்... உன்னை எனக்கு இருபது வருஷமா தெரியும்... நீ பேசற விதத்துல.. நடந்துக்கற விதத்தில்... இன்னும் அந்தரங்கமான விஷயங்கள்ல எனக்கு மாற்றம் தெரியுது. எனக்குச் சொல்லத் தெரியல கௌதம்... நான் நேராவே கேட்டுடறேன். என்ன அது நவீனா விவகாரம்?"

"ஒண்ணுமில்ல. அவ என் விசிறி. அவளுக்குக் கிரிக்கெட்ல நல்ல ஆர்வம். நாங்க ரெண்டு பேரும் நல்ல நண்பர்கள்; அவ்வளவுதான்"

"நடிகை ஒருத்தியோட நட்பாயிருக்க வேண்டிய அவசியம் என்ன கௌதம்? அதுவும்

"டி.வி. சீரியல் பார்க்கிற பெண்களுக்கெல்லாம் தலைவர் கைக்குட்டை வாங்கித் தர்றாரே.. ஏன்?"

"தாய்க்குலத்தின் கண்ணீரைத் துடைப்பேன்னு வாக்கு கொடுத்துட்டாரே!"

– தஞ்சை தாமு



பத்திரிகைகள்லாம் இப்படி தாறுமாறா எழுதற அளவுக்கு..."

"நான் இந்தியாவின் தலை சிறந்த ஆட்டக்காரன். என்ன வச்சி எதாவது எழுதினாத்தான் அவங்க பத்திரிகை விக்கும்."

ஒரு வாரப் பத்திரிகையின் ஒரு பக்கத்தில் நவீனா கவர்ச்சி உடையில் ஒரு கதாநாயகனைத் தழுவிக் கொண்டு படுக்கையில் இருக்கும் படம் விரிந்திருக்க... "இந்த மாதிரி ஒரு பொம்பள என் புருஷன் ஃபிரண்டுன்னு நான் எப்படி சொல்லிக்கறது?"

"நான் காசு வாங்கிக்கிட்டு மைதானத்துல போய் ஆடறா மாதிரி, நடிக்கறது அவ தொழில். அதுக்காக அவளை அசிங்கமா பேசாத" என்று வெகுண்டு அந்தப் பத்திரிகையை அவள் முகத்தில் எறிந்தான்.

படுக்கை அறையின் கதவு மெல்லத் தட்டப்பட்டு "கௌதம் என்னடா கலாட்டா?" என்றாள் அம்மா... உள்ளே நுழைந்து "அவளை அடிச்சியா?" என்று திவ்யாவை அணைத்துக் கொண்டாள்.

"... உனக்கு இருக்கற புகழ்ல நீ பண்ற தப்பு உனக்குத் தெரியலை கௌதம். அவ உன் காசுக்காக உன் பின்னால் அலையறா... நாளைக்கே நீ பிரபலமா இல்லன்னா உன்னை விட்டுட்டு வேற ஆளு பின்னால் போயிடுவா..."

"வாயை மூடறியா இல்லையா...!"

"வா திவ்யா அப்பறமா பேசலாம்."

"நீ வேணா பாரு உன்னை டீம்லர்ந்து விலக்கினா உன்னைவிட்டுப் போயிடுவா..." என்று சொல்லிக் கொண்டே அம்மா அவளை அழைத்துச் சென்றாள்.

**கௌ**தம்- நவீனா தொடர்பு மறைவில் தொடர்ந்தது. தொலைபேசித் தொடர்பு மட்டும் வைத்துக் கொண்டு கொஞ்ச நாள் போகட்டும் அதுவரை பொறுமையாயிருக்கலாம் என்று பேசிக் கொண்டார்கள். தொலைபேசியிலேயே காதல் செய்தார்கள்.

இலங்கையோடு நடந்த பந்தயங்களில் அந்தக் குழுவுக்கு ஈடு கொடுக்க முடியாமல் இந்தியர்கள் தோற்றார்கள். இந்தியா மோசமான நிலைமையில் இருக்கும்போதெல்லாம் அவன் ஆடிக் காப்பாற்றிய நிலை போய் அவன் மோசமான ஃபார்மினால் குழுவுக்குச் சுமை ஏறியது. கௌதம் தன் அந்தரங்க சந்தோஷம் ஊர் வம்பானதில் அவமானமடைந்து இன்னும் கவனம் சிதறி தன் ஆட்டத்தைக் கட்டுக்குள் கொண்டு வர முடியாமல் திணறினான். நம்பிக்கை ஆட்டம் கண்டு போய் கால் நகர்த்துவதில் தயக்கம் இருந்தது. அவன் முத்திரை ஸ்கொயர் கட்டின் வேகம் தளர்ந்து தயங்கித் தயங்கி ஆப் சைடில் பேட்டை நீட்டி ஆடியதில் அநேகமாய் ஸ்லிப்பில் காட்ச் கொடுத்து அவுட் ஆனான். அவன் வந்தால் மூன்று ஸ்லிப்பும் ஒரு கல்லி, ஷார்ட் லெக் என்று பிரத்யேக கள அமைப்பு வைத்ததில் இன்னும் தடுமாறினான். அவன் மைதானத்துக்குள் விளையாட வந்தால் மெல்ல "ஊ" சப்தித்தார்கள் ரசிகர்கள். அவுட் ஆகிப் போகும் போது மைதானமே "நவீனா... நவீனா" என்று ஒரே குரலில் கோஷமிட்டது. ஆஸ்திரேலியாவுடன் நடக்கவிருந்த அடுத்த தொடர்தான் கௌதமுக்குத் தரப்படும் கடைசி வாய்ப்பு என்று பரவலாகப் பேச்சு எழுந்தது. கௌதமுக்குக் கீழ் துணைக் காப்டனாய் இருந்த ராகேஷ் தாமனுக்கு அடுத்த வாய்ப்பு என்று கிரிக்கெட் போர்டு தலைவர் சூசகமாய்த் தெரிவித்தார். அவன் தலைமையில் தோற்பது போதாதென்று அவனும் நன்றாக ஆடாத பட்சத்தில் அவன் அணியிலிருந்தே விலக்கப்படலாம் என்ற நிலை எழுந்தது.

கௌதமின் தலைமையில் இந்திய அணி ஆஸ்திரேலியாவுக்குப் பயணித்தது.

இந்தியாவில் தொலைக்காட்சியின் ஒளி பரப்பு துவங்க லட்சக்கணக்கான மக்களோடு திவ்யாவும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் களம் இறங்கியதும்... தொலைக்காட்சி அவன் கவலை முகம் காண்பிக்க. திவ்யா பூஜை அறையில் நுழைந்தாள். புன்னகை மாறாமல் சிரித்துக் கொண்டிருந்த சுவாமி படங்களின் இடையே, பிரார்த்தனையைத் துவங்கினாள்.

மெல்போர்னின் ஏராளக் கூட்டம் ஓலமிட... ஸ்லிப்பில் ஆஸ்திரேலிய வீரர்கள் எகத்தாளமாய் அவனைக் கிண்டல் செய்து பேச... புயல் வேக போலர் ஓடி வந்து பந்து வீசும் இறுதித் தாவலில் பாய... கார்த்திக்... முன்னறையில் உட்கார்ந்து "அண்ணி... முதல் பால் போடறான்" என்றான்.

திவ்யா... கண்ணை மூடிப் பிரார்த்தித்தாள். "பெருமாளே அவர் அவுட் ஆகணும்... டீமிலிருந்து விலக்கப்படணும்... தோக்கணும்... அவர் அவுட் ஆகணும்." ○

**பெ**ரிய வீடு. வராண்டாவில் மீசையைத் தடவிய படி தாத்தா. அவரைச் சுற்றி 'காச் மூச்' என்று கத்தியபடி ஏழெட்டுப் பேரக் குழந்தைகள். திடீரென்று இவர்களிடமிருந்து அழுகை, சிரிப்பு, அடிதடி எல்லாம். "ஏய்... மூச். சத்தம் போடாத..." என்றபடி இவர்களைச் சமாளிப்பது தாத்தாவுக்குச் சுகமான அனுபவம்.

இதெல்லாம் நாம் குழந்தையாக இருக்கும்போது. நாம் தாத்தாவாகும் காலத்தில் இப்படியொருச் சூழலை எதிர் பார்க்க முடியுமா? தலைகீழாக நின்றாலும் நிச்சயமாக முடியாது. காரணம் ஒற்றைக் குழந்தை மனோபாவம்!

இந்தியா உள்பட பெரும்பாலான நாடுகளில் இந்த மனோபாவத்துக்கு மாறி விட்டனர் மக்கள். இது ஆரோக்கியமானதுதானா?

"**நி**ச்சயமா இது நல்லதுன்னு நினைக்கிறேன். என்னோட ஒரே குழந்தையைப் பெரிய ஸ்கூல்ல படிக்க வைக்



# மாமா, அத்தை உறவுக்குக் குட்பை!

**நா**ட்டில் மக்கள் தொகை பெருகிக் கொண்டே இருக்கிறது. அதைத் தடுத்தாக வேண்டிய நிலையில் ஒரு குழந்தை என்பது சரிதான். பொருளாதார ரீதியான பல்வேறு பிரச்னைகளுக்கு இது நல்ல தீர்வு. ஒரு குழந்தையாக இருக்கும்போது பெற்றோர்களின் முழுக் கவனமும் அந்தக் குழந்தையின் மீதுதான் குவிகிறது. நன்றாகப் படிக்க வேண்டும், வெளியில் அதிகமாகச் சுற்றக் கூடாது, அங்க போகாதே; இங்க நிற்காதே என்பது போன்ற கட்டுப்பாடுகள் ஜாஸ்தியாகின்றன. ஆனால் இந்த கவனிப்பும் கட்டுப்பாடும் ஜாஸ்தியாக ஆக அது குழந்தைகளின் மனநிலையைப் பாதிக்கிறது.

இந்த நிலை காரணமாக தற்போது பத்து, பன்னிரண்டாம் வகுப்பு மாணவர்கள் பலருக்கு நான் சிகிச்சை அளித்திருக்கிறேன்.

இந்தக் குழந்தை வளர்ந்த நிலையில் பெற்றோருக்கு 'பொஸஸிவ்னஸ்' ஏற்பட்டு விடுகிறது. குறிப்பாக அம்மாவுக்கு. இதனால், தான் மாமியாராகிறபோது மருமகளைக் கொடுமைப்படுத்தும் வக்ர சிந்தனை கூட ஏற்பட வாய்ப்பிருக்கிறது. நாற்பது, ஐம்பது

கிறேன். நடுத்தரவர்க்கக் குடும்பத்தினருக்குப் பெரிய ஸ்கூல் படிப்புங்கறது எட்டாக்கனி. இருந்தாலும் ஒரே குழந்தையா இருக்கறதால தான் இப்படிப் படிக்க வைக்க முடியுது" என்கிறார் சைதாபேட்டையில் வசிக்கும் வி.எஸ். ராஜவர்மன்.

"வருங்காலங்களில் இன்னும் போட்டியை அதிகமாகச் சந்திக்க வேண்டி வரும். அந்த நிலைமையில் சாதாரண கார்ப்பரேஷன் ஸ்கூல்ல குழந்தையைப் படிக்க வைச்சா, 'நாம பெரிய இடத்துல ஏன் பிறக்கலைங்கற ஏக்கம்' குழந்தைக்கு வந்துடும். இந்த ஏக்கம் வேறு மாதிரியான பல பிரச்னைகளை ஏற்படுத்த வாய்ப்பிருக்கு. அதுமட்டுமில்லாம இப்ப ஒரே குழந்தைங்கறதால அது கேட்டதை, விரும்பறதை வாங்கிக் கொடுக்க முடியுது. நான் குழந்தையா இருக்கும் போது கிடைக்காதவற்றை என் ஒரே குழந்தைக்கு நான் பண்ணமுடியுது. அதிக குழந்தைகள் இருந்தா இது சாத்யமில்லை. எங்க கவனமும் சிதறிடும்" என்கிறார் இவர்.



• வரதராஜன்



• ராஜவர்மன்



• ஜெயந்தி

"எங்க வீட்டுல மொத்தம் ஏழு பேர். எங்களுக்கு ஆரோக்யமான சூழ்நிலையை, படிப்பை எங்க பெற்றோரால வழங்க முடியலை. ஏன்னா நம்பர்ஸ் ஜாஸ்தி. ஒரே குழந்தையா இருந்திருந்தா நிச்சயம் நல்ல படிப்பு, நல்ல சூழ்நிலை வாய்த்திருக்கும். அதைதான் நான் என் ஒரே குழந்தைக்குச் செய்யறேன்" என்கிறார் திருவல்லிக்கேணியைச் சேர்ந்த வரதராஜன்.



• கீதா ராவ்

"எதிர்காலத்துல அவங்களுக்கு மாமா அத்தை உறவு கிடைக்காது; மனநிலை பாதிப்படை வாங்கங்கறதெல்லாம் அப்புறம். இப்ப நல்லா படிச்சு, ஒரு சூப்பரான நிலைக்குப் பெற்றோர்கள் தூக்கி விட்டுட்டாங்கன்னா பின்னால வர்றதை அவங்க சமாளிச்சுடுவாங்க. அதுல கஷ்டம் இருக்கற மாதிரி தெரியலை" என்கிறார்.

ஆனால் போரூரைச் சேர்ந்த ஜெயந்தி சொல்வது வேறு விதமாக இருக்கிறது.

"ஊட்டி, கொடைக்கானல்னு வெளியூர் டூரோ அல்லது வெளிநாடு டூரோ போறோம். ஒரே குழந்தையா இருந்தா ஸ்டார் ஹோட்டல்ல தங்கலாம். இரண்டு, மூணு இருந்தா

---

வயதுக்குப்பின் பயம் வந்துவிடும். ஒரே பையன். அமெரிக்காவில் இருப்பான். ஈ-மெயிலில் பேசுவான்; டாலரில் செழிக்கலாம். ஆனால் அம்மா அப்பாவுக்கு உடல்நிலை சரியில்லை என்றால் பக்கத்தில் இருக்க முடியாத நிலையில் பெற்றோர்களுக்குப் பீதி ஏற்படுவது நிச்சயம். அடிமனத்தில் இட்டு நிரப்ப முடியாத ஒரு வெற்றிடம் ஏற்படுவதை எப்படித்தடுக்க முடியும்? இதை டாக்டர்கள் மத்தியில் PICA சின்ட்ரோம் என்போம். அதாவது Parents in India, Child in America.

எதிர்காலத்தில் சித்தப்பா, பெரியப்பா, மாமா, அத்தை உறவுகள் இருக்குமா? என்பதே சந்தேகம்தான்.

வேகமாக வளர்ந்து வரும் இந்த மக்கள் தொகையில் ஒரு குழந்தை மனோபாவம் என்பது சரியானதுதான். அதை வேண்டாமென்று மறுக்க முடியாது. ஆனால் அதற்காகச் சில இழப்புகளையும் எதிர்கொண்டுதான் ஆக வேண்டும்.

— டாக்டர் நம்பி
(மனநல மருத்துவர்)



படம்: ஸ்ரீஹரி

முடியுமா? பொருளாதார ரீதியா எவ்வளவு சௌகரியம்? அதுமட்டுமில்லாம ஒரு குழந்தைனா டென்ஷன் குறைவு. நானும், என் ஹஸ்பென்ட்டும் வேலைக்குப் போறோம். ஒரு குழந்தைனா ஸ்கூல்ல கொண்டு விட்டுட்டோ, அல்லது மாமியார், உறவினர்களிடம் விட்டுட்டோ போய்ட்டு வர முடியும். அதிக குழந்தைன்னா கஷ்டம். அவங்களைக் குளிப்பாட்டி, ரெடி பண்றதுக்குள்ளப் போதும் போதும்னு ஆயிடும். பெரும்பாலான நேரத்தை இதுக்காகவே செலவழிக்க வேண்டியிருக்கும்."

"குழந்தைங்க அதிகம் இல்லாத வீடு குப்பை மேடு மாதிரின்னு கிராமத்துல சொல்வாங்க. தங்களோட சௌகரியங்களுக்காகவும், தங்களோட சுகமான டென்ஷன் இல்லாத ராஜவாழ்க்கைக்காகவும் ஒரு குழந்தையோட நிறுத்திக்கறது நியாயமில்லாதது" என்கிறார் கே.கே நகரைச் சேர்ந்த ஆசிரியை ஒருவர்.

"இந்த மாதிரி செல்லம் கொடுப்பதற்காகவே வளர்க்கப்படும் குழந்தைகள், மாணவர்களாகும் போது ராஜா மாதிரியும் சர்வாதிகாரி போலவும் நடந்து கொள்கிறார்கள். ஏதாவது ஒரு விஷயத்தில் தங்களால் முடியவில்லையென்றால் அதிகமான ஆத்திர, கோப மனோபாவத்துக்குத் தள்ளப்படுவதை நான் என் வகுப்புகளில் பார்க்கிறேன்" என்கிறார் அந்த ஆசிரியை.

இவர்களை சகஜநிலைக்கு எப்படிக் கொண்டு வரலாம் என்பதை முன்னாள் தலைமையாசிரியையான தோராவ் கூறுகிறார் :

ஒரே குழந்தையாக இருக்கும் மாணவர்கள் சென்சிடிவ்வாக இருப்பார்கள். தாய், தந்தையின் அரவணைப்பிலேயே எப்போதும் இருப்பதால், அவர்கள் பள்ளிக் கூடத்திலும் டீச்சரைத்தான் நண்பனாகக் கருதுவார்கள். பேனா தொலைவது போன்ற சாதாரண விஷயங்களைக் கூட, பெரிய புகாராக எடுத்துக் கொண்டு 'ஓ'வென அழுவார்கள். ஆண் குழந்தையாக இருந்தால் சக மாணவிகளிடமிருந்தும், பெண் குழந்தையாக இருந்தால் சக மாணவர்களிடமிருந்தும் விலகியே இருப்பார்கள். இதெல்லாம் ஹை-ஸ்கூல் வரை என்று வைத்துக் கொள்ளலாம். பிற்பாடு வளர்ந்ததும், 'போர்' அடிக்கிறது என்று நிறைய ஃப்ரெண்ட்டுகளை ஏற்படுத்திக் கொண்டு, ஜாலியாக சுற்றுவார்

## பாப்பா இல்லைன்னா வேலை இல்லை!

உலக மக்கள் தொகை எல்லை கடந்து சென்று கொண்டிருக்க, இத்தாலிய மக்கள் தொகை குறைந்து வருவதாக அநியாயத்துக்குக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறது அந்நாடு. காரணம் எல்லோரும் ஒரே குழந்தையுடன் நிறுத்திக் கொள்கிறார்களாம்.

"ஒரு காலத்துல இத்தாலின்னாலே நிறைய குழந்தைகள் இருப்பாங்கன்னு பேசுவாங்க. ஆனா இப்ப காலம் மாறிப்போச்சு. குழந்தை பெத்துக்கறதுக்கு யாரும் தயாரில்லை. அப்படியே பெற்றாலும் 'ஒண்ணே ஒண்ணு; கண்ணே கண்ணு மாதிரிதான்' என்று கவலையில் மூழ்குகிறார் இத்தாலியப் பாட்டி ஒருவர்.

ஒரு குழந்தை மட்டும் இருக்கும்போது அக் குழந்தையின் நடைமுறைகளும் மனோபாவமும் மாறிவிடுகின்றன என்று அமெரிக்க ஆராய்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர்.

இங்கு, சில பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அல்லது விளையாட்டு மைதானங்களிலும் இந்தக் குழந்தைகளின் நடைமுறைகளைப் பார்த்துவிட்டு, "நீங்க வீட்ல ஒரே குழந்தையா?" என்று பலர் கேட்கிறார்களாம். சிலர் 'அட அவன்/ள் ஒரே பிள்ளைப்பா' என்று கிண்டலடிப்பதும் உண்டாம்.

## கதைகளை அனுப்பியாச்சா?

மிகச் சிறந்த சிறுகதைகளை அதிக அளவில் வெளியிடும் கல்கி, ரசனைக்குரிய எழுத்துக்களை ஊக்குவிக்கும் கல்கி, தரமான எழுத்தாளர்களை உருவாக்குவதன் பொருட்டு நடத்துவதுதான் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி.

உங்கள் எழுத்துத் திறனுக்கு வெளிச்சம் போட நல்லதொரு வாய்ப்பு! இவ்வாண்டு போட்டிக்கான கதைகள் அனுப்ப கடைசித் தேதி ஜூன் 15 என்பதை நினைவூட்டு கிறோம்.

முழு விவரங்கள் சென்ற அல்லது அடுத்த இதழில்... (–ஆர்)



இதனால் 'தாங்கள் சரியாக வளர்க்கப்படவில்லையோ; கெட்டுப் போய் விடுவோமோ?' என்ற பயம் இவர்களுக்கு ஏற்படுகிறதாம். மனம் ஒடிந்த ஒற்றைக் குழந்தைகள் ஒன்றாகச் சேர்ந்து தங்களுக்கான இயக்கம் மற்றும் வெப் சைட்களை ஆரம்பித்திருக்கிறார்கள். இதில், 'தங்களைக் கிண்டலடிப்பவர்களை எப்படி சமாளிப்பது. 'உருப்படாதவன்' என்று திட்டுபவர்களை எப்படி எதிர்கொள்வது; என்னென்ன வழிகளில் திறமைகளைக் காட்ட வேண்டும்; என்ற கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன.

இந்த 'ஒத்த பிள்ளைங்க' எல்லாம் சேர்ந்து சவிராஜ் சங்க்பால் எனும் இந்தியர் தலைமையில் இணைந்து பணம் பிரித்து குஜராத் பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட அப்பா, அம்மா இல்லாத குழந்தைகளுக்கு அனுப்பியிருக்கிறார்கள். இப்படி அனுப்பிவிட்டு, "பொதுவாகவே எங்களை ஒரு வேலைக்கும் உதவாதவர்கள், அடங்காதவர்கள் என்கிற மனப்பான்மையோடுதான் மக்கள் பார்க்கிறார்கள்; நாங்களும் உருப்படியான சமூக அக்கறையுள்ள காரியங்களைச் செய்வோம்" என்று கூறியிருக்கிறார் சங்க்பால்.

இவர்களுக்காகவே இன்டர்நெட் 'சாட் ரூம்'களில், 'ஒரே குழந்தையாக இருப்பவர்களுக்கு மட்டும்', என்ற பகுதி இடம் பெற்றிருக்கிறதாம்! இது மாதிரி, 'நான் ஏன் ஒரு குழந்தையாக பிறந்தேன்'; 'ஒரே குழந்தையாகப் பிறந்ததின் மகிமை' என்பது மாதிரியான புத்தகங்கள் ஏராளமாக கடைகளில் குவிந்துள்ளன.

ஒரு குழந்தையாக இருந்து புகழ் பெற்றவர்கள் யார்? யார்? என்ற பட்டியலையும் இவர்கள் தங்கள் வெப் சைட்டில் வெளியிட்டிருக்கிறார்கள். அதில் இந்திய முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி, கிளிண்டன் மகள் செல்஼ியா, மர்லின் மன்றோ உட்பட பல புகழ் பெற்ற தலைகளின் பெயர்கள் அடுக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு குழந்தையாக இருப்பவர்கள் இப்படித் தங்களின் மேன்மையை(?!) விளக்கிக் கொண்டிருந்தாலும் இவர்களுக்கு நாற்பத்தைந்து வயதுக்கு மேல்தான் அதிகமான பயம் வருகிறது.

இது ஒருபுறமிருந்தாலும், இத்தாலியில் பெரும்பாலான பெண்கள் இப்போது குழந்தையே வேண்டாம் என்ற நிலைக்கு வந்துவிட்டார்கள். இப்படி இருந்தால் இத்தாலியின் மக்கள் தொகையை எப்படி அதிகரிப்பது?

இதனால் அந்நாட்டு அரசு அதிரடி உத்தரவு ஒன்றைப் பிறப்பித்திருக்கிறது: 'குழந்தையில்லேன்னா வேலை இல்லை!'

நன்றி: நியூஸ் வீக்

கள். ஆனால் இதெல்லாம் பொதுவாகச் சொல்லப்படுவதுதான்.

வீட்டில் நிலவும் சூழ்நிலை, வளர்ப்பு, மனநலம், பெற்றோர் அணுகுமுறை, குழந்தையின் தனித்தன்மை, சுய மதிப்பீடு போன்றவற்றைக் கொண்டே ஒற்றைக் குழந்தையின் செயல்பாடுகள் அமையும் என்பதுதான் உண்மையானது.

ஒற்றைக் குழந்தையாக வளர்க்கப்படும் குழந்தைகள் பயந்த சுபாவமாகவோ, சார்ந்து வாழும் இயல்பு கொண்டோ இருந்தால், அவர்களை ஆசிரியர்கள்தான் நல்வழிப் படுத்த வேண்டும். எப்போதெல்லாம் மற்ற மாணவர்களுடன் கலந்து பழக முடியுமோ அப்போதெல்லாம் ஒற்றைக் குழந்தைகள் சுதந்தரமாக விளையாடுகிறார்களா என்று கவனித்து பரஸ்பர நட்பு மலர வழி செய்தாலேப் போதும். குழந்தைகளின் சங்கோஜமும், பயமும் விலகிவிடும். இதைப் பெற்றோரும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

— செ. ஏக்நாத்



• கலகலப்பு

**ப**தினாறாம் நூற்றாண்டில் நிசேலு என்ற ஒரு பெரும் புள்ளி பிரான்ஸ் நாட்டில் இருந்தார். ராணி மேரிக்கு எல்லா ராஜ தந்திரங்களையும் கற்றுத் தந்த அறிவாளி. If you give me six lines written by the most honest man I will find something in them to hang him என்றார் அவர்.

பாரதியில் துக்ளக் நேரம் நிகழ்ச்சியில், பத்திரிகைச் செய்திகளைப் படித்துக் காமென்ட் அடிக்கும் சோவைப் பார்க்கும்போது அந்தப் பிரெஞ்சுக்காரரின் ஞாபகம்தான் வருகிறது.

அடையாள அட்டை வைத்திருந்தும் வாக்காளர் பட்டியலில் பெயர் இல்லாமல் ஏமாந்து திரும்பியவர்களைக் குறித்தச் செய்தியைப் படித்தார் சோ. 'பெயர் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ள பல சந்தர்ப்பங்கள் பொதுமக்களுக்கு நாங்கள் கொடுத்தோம். வந்து பார்த்துக் கொள்ளாதது அவர்கள் தப்பு' என்று தமிழகத் தேர்தல் ஆணையர் சாரங்கி சொல்லியிருந்த பதில் சோவைத் துர்வாசராக்கி விட்டது.

'இது ஒரு பொறுப்பில்லாத பேச்சு. ஃபோட்டோ எடுத்துக்கொண்டு அடையாள அட்டை பெற்ற பிறகு வாக்காளர் பட்டியலில் பெயர் இருக்கிறதா என்று எதற்காகப் பார்த்து வர வேண்டும்? ஒன்று அட்டை வழங்கியதில் தப்பு. அல்லது அச்சடித்ததில் தப்பு. இனிமேல் சரி செய்கிறோம் என்றல்லவா இந்த அதிகாரி சொல்லியிருக்க வேண்டும்?' என்று வைத்தாரே பார்க்க வேண்டும் சாரங்கிக்கு ஒரு பீரங்கி!



• துர்வாசர்

**கூ**ச்சத்துடன் பேசுகிற மாதிரி தோன்றினாலும் அது ஒரு facadeதான். தன்னைக் கவனித்துப் பார்க்கும்படி அனுராதா ஸ்ரீராம் செய்யும் பாசாங்கு அது. உண்மையில், அடுத்த வீட்டுப் பெண் மாதிரி ஒரு கலகலப்புக் குடியிருக்கிறது அவர் பேச்சிலும் முகத்திலும்.

'புதுசாய் என்ன பண்ணியிருக்கிறீர்கள்?' என்ற கேள்விக்கு (சன்), 'கல்யாணி ராகத்திலும் தோடி ராகத்திலும் புதுசாய் என்ன பண்ண முடியும்? பல வித்வான்கள் பாடியதைக் கேட்டுக் கேட்டு அந்தக் கேள்வி ஞானத்தை வைத்துக் கொண்டுதானே பாடுகிறோம்?' என்று பதிலளித்தார்.

'அவார்டு ஏதேனும்...' என்ற கேள்வி வந்தபோது, என் பெயரை அறிவிக்கும்போதும், நான் மேடையில் ஏறும்போதும் அரங்கத்தில்

ரிமோட் - வினோத்



# சாரங்கிக்கு

ஒரு பரபரப்பு, ஒரு கைதட்டல், ஒரு புன்னகை பரவுகிறதே, அதற்கு எந்த அவார்டு ஈடாகும்?" என்றார்.

இந்தப் பேட்டியை அமைத்திருந்த விதம் ரொம்ப அருமை. பேட்டி நடக்கும் அறையோ, தோட்டமோ, ஷீல்டுகள் கோப்பைகள் முதலானவையோ எதையும் காட்டவில்லை. பாதித் திரைக்கு வெறும் நீல நிறப் பின்னணி. அதில், கத்திரித்து ஒட்டினாற் போல அனுராதா ஸ்ரீராமின் உருவம். திரையின் மறுபாதியில் எழுத்து வடிவாகக் கேள்விகள். வித்தியாசமான முயற்சி. Quality is doing things differently.

• 'எனக்கும் அடுத்த வீட்டுப் பையனுக்கும் காதல். என் பெற்றோர்கள் இதை எதிர்க்கிறார்கள். நான் என்ன செய்ய வேண்டும் என்பதை தயவு செய்து சொல்லுங்கள்.

சட்டப் பிரச்னை முதல், தாம்பத்தியப் பிரச்னை, படிப்புப் பிரச்னை முதலான எந்தப் பிரச்னைக்கும் அந்தந்தத் துறை நிபுணர்கள் பதிலளிக்கும் சன் நிகழ்ச்சியில் மேற்படி கேள்வி வந்திருந்தது. வழக்கமாக யாரும் கேட்பதுதானே என்று எண்ணாதீர்கள். இதைக் கேட்டவர்(ன்?) ஒன்பதாம் வகுப்பில் படிக்கும் பெண்.

பதில் சொன்ன மைதிலி வெங்கடேசுவரன் என்ற ஆசிரியை, இதைக் கேட்டுச் சினந்தாரா – சிரித்தாரா – என்று தெரியவில்லை. பொறுமையாக, 'உனக்கு வயது பதினான்குதான் இருக்கும். இப்போதுதான் பையன்களுடன் பழக ஆரம்பித்திருக்கிறாய். ப்ளஸ் டூ வரை படித்து முடித்து, காலேஜுக்குப் போய், பிறகு வேலைக்கும் போகும்போது பல ஆண்களைப் பார்ப்பாய். இவன் இன்னும் அழகாயிருக்கிறானே, இவன் இன்னும் அந்தஸ்தாக இருக்கிறானே என்று நினைப்பாய். இது காதல் அல்ல. Infatuation. இன்னும் பத்து வருஷம் பொறுத்திரு. அப்போதும் இதே பையனிடம் இதே காதல் இருக்குமானால் நானே உன் அப்பா அம்மாவிடம் வந்து உனக்காகச் சிபாரிசு செய்கிறேன்' என்றார்.

ஆகையால், இதைப் படிக்கும் நேயர்களே, பத்து வருஷம் பொறுத்திருந்து இந்தப் பெண் என்ன பண்ணினாள் என்று பாருங்கள். Nothing is lost by waiting.

கவர்னர் அம்மையார் புரட்சித்தலைவிக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைத்தது செல்லுமா செல்லாதா என்று சட்ட நிபுணர்கள் சிண்டைப் பிய்த்துக் கொண்டிருக்கட்டும். அந்த நிகழ்ச்சியை டீவியில் பார்த்துக் கொண்டிருந்த லட்சக்கணக்கான மக்களை வேறொரு சந்தேகம் ஆட்டிப் படைத்தது.

அம்மாம் பெரிய ராஜ் பவனில் இந்தத் தம்மாத்துண்டு இடம்தானா கிடைத்தது, பதவியேற்பு நிகழ்ச்சிக்கு? பத்திரிகையாளர்களும் புகைப்படக்காரர்களும் டீவி பிரதிநிதிகளும் முட்டி மோதியது பரிதாபமான காட்சி. அதைவிடப் பரிதாபம், மூப்பனார் போன்ற மரியாதைக்குரிய தலைவர்கள்கூட வசதியாக உட்கார முடியாமல் ஒதுங்கி நெளிந்ததுதான்.

அவசரமாக ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சி என்று அதிகாரிகள் சொல்வார்கள். ஆனால் திறமை வெளிப்பட வேண்டியது இத்தகைய சமயத்தில்தானே? If there is no wind row your boat hard என்று போலந்து நாட்டின் பழமொழி கூறுகிறது.

இதெல்லாம் போக, அகப்பட்ட ஆட்களை இழுத்து வந்து நேர்முக வர்ணனை செய்யச் சொன்னார்கள் போலிருக்கிறது. 'எங்கு பார்த்தாலும் மக்கள் வெள்ளம் அலை மோதுகிறது' என்ற வாக்கியத்தையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இனிப் பின்னையை அழைத்து வந்திருந்தால் கொஞ்சம் மாற்றிச் சொல்லியிருக்கும்.

• பொறுப்பில்லா பேச்சு...



# ஒரு ஜோக்!



கமி குப்பாமார்க்கெட்

எலக்ஷன்ல வோட்டுப் போடணும்னு வகேஷன் போகாம இருந்த பல ஃப்ரெண்ட்ஸ் பெட்டியைத் தூக்கிட்டுக் கிளம்பிட்டாங்க.

"நீ எங்கியும் போலியா சம்மருக்கு...?"ன்னு என் ஃப்ரெண்ட் சாயாவைக் கேட்டேன்.

"ஓ! டெய்லி போறேனே கமி..."ன்னா.

"என்னம்மா புதுசா ஏதாவது கடியா...?"

"நோ...! டெய்லி எர்லி மார்னிங் வகேஷன் டைம் எனக்கு டெரஸ்ல... ஹில் ஸ்டேஷன் அளவுக்கு இல்லைன்னாலும் வீட்டுக்குள்ளே இருக்கறதை விட டென் டிகிரீஸ் கூலர். தூங்குமூஞ்சி மரத்துல அரை டஜன் கிளி, எந்த ஆட்சி எப்படி மாறினாலும் விடாம கூவித் தள்ளுற குயில்; உலகத்தையே பறி கொடுத்த மாதிரி ஒரு அலறு அலறிக்கிட்டு வந்து உட்கார்ந்து மரத்தைக் கொத்தித் தள்ற ஒரு மஞ்சள் பறவை, உள்ளங்கை அளவுக்கே இருந்துக்கிட்டு ஊர் முழுக்க கேக்கற மாதிரி கூப்பாடு போடற தேன்சிட்டுக் கூட்டம். மஞ்சள் சிவப்புன்னு மரங்கள்ல ரெடிமேட் ஃப்ளவர் பொக்கே! கொஞ்சம் சுவரோரம் போய்ப் பார்த்தா டாப் ஆங்கிள்லேருந்து பக்கத்து வீடுகள்ல தெரியற பிங்க் அன்ட் ஒயிட் நட்சத்திரப் பூக்கள்..."

"ப்ளீஸ் வெய்ட் சாயா...! எங்கியாவது படப்பை பக்கம் ஃபார்ம் வாங்கிட்டுப் போயிட்டியா...?"

"இல்லே அதே பழைய வீடுதான்... ஆனா ஒரு டிஃபரன்ஸ் - இரண்டு வருஷம் முன்னால எங்க ரோட்ல நட்டு வச்ச மரமெல்லாம் நல்லா வளர்ந்திருக்க... இட் மேக்ஸ் எ பிக் டிஃபரன்ஸ்... லைஃப் இஸ் ஸோ மச் மோர் மீனிங்ஃபுல்..."

"விட்டா கவிதை எழுதிடுவே போலிருக்கே...!"

நான் இன்டலாத்தான் கேட்டேன். பட் சாயா நிஜமாவே எழுதிக் குடுத்துட்டா:

'மரம் நட்டால்
மழை வரும்;
புழலேரி, பூண்டி நிறைய,
எங்கள் 'கடைமடை' காலனி
அடிகுழாயில்
மாநகரக் குடிநீர்
கொப்பளித்து ஓடி வரும்'
- உன் நோக்கத்துடன்தான்
ஊன்றினோம் கன்றுகளை...

...பசித்த மாடுகள்,
பொசுக்கும் கத்திரி,

பொழுது போகா பையன்களின்
நினவெடுத்த விரல்கள்,

பருவம் தப்பி வீசி,
பிஞ்சுக் கிளைகளைப்
பிய்த்தெறிந்த பேய்க்காற்று.

- அத்தனையும் ஏய்த்துவிட்டு
திறந்தவெளிப் பல்கலையின்
சுய முன்னேற்றப் பிரிவில்
முதுகலை முதல்வகுப்பில் தேறி,
பகைமைச் சிரிப்புதிர்த்து
பரவசமாய் நிற்கும்
பெயரறியா பெருமர நிழலில்...

அதே மாடுகள் அசைபோட
அதே சிறுவர்கள்
கிட்டிப்புள் ஆட...

பொல்லாத மழை மட்டும்
பெய்யாமல் ஏய்க்கிறது!

பெருமரக் கிளைகளில்
பச்சைக் கிளிக்கூட்டம்
பரிகசித்துச் சிரிக்கிறது!

# பரிகசித்துச் சிரித்த

இப்போ ஒரு புரொஃபஷனல் கவிஞரோட புத்தகம் பத்தி....

ஆண்டாள் ப்ரியதர்ஷினியோடது. பெரும்பாலும் பெண்ணிய சிந்தனையுள்ள கவிதைகள் அடங்கிய 'சுயம் பேசும் கிளி.' புதிய தலைமுறை பெண்களின் போர் முழக்கம்'னு கலைஞர்கிட்டே பாராட்டு வாங்கியிருக்கு இவரோட ஒரு கவிதையின் சில வரிகள். 'பாரதி கண்ட புதுமைப் பெண்களில் இந்த ஆண்டாள் பிரியதர்ஷினியும் ஒருவர்'னு ஒரு பிரமாதமான காம்ப்ளிமென்ட் வேற கொடுத்திருக்கார் கலைஞர். ஆனா புத்தகத்துல இடம் பிடிச்சிருக்கற அவரோட அணிந்துரை

அஞ்சு பக்க முன்னுரை (தன்னிலை விளக்கம்...?) எல்லாத்தையும் தாண்டி கவிதைகளுக்கு வருவோம்... சுமி மாதிரி நிறைய இங்லிஷ் தயங்காம யூஸ் பண்றாங்க. ஆங்கில கலப்பில்லாத கவிதைகளும் உண்டு. ஆனால் கோபம் கலப்பில்லாத கவிதைகள் ரொம்பக் குறைவு! அதனால புக் முழுக்க கிட்டத்தட்ட ஒரே கலை. இது மாறணும்னா நல்ல கவிதை ஃபீலிங் உள்ள ஆண்டாள், வேற களங்களுக்குப் போகணும். பிற பாத்திரங்களில் தன்னைப் பொருத்தி எழுதணும்... இந்த இரண்டும் இவங்க கிட்டேயிருந்து வரவழைக்கக் கூடிய கவிதைகள் 'இந்த சுயம் பேசும் கிளி' கலெக்ஷன்ல உள்ள கவிதைங்களைக் காட்டிலும் சிறப்பாயிருக்கும்னு நினைக்கறேன். சுருக்கமாச் சொல்றதுன்னா சுயம் பேசறதை நிறுத்திட்டு, மத்தவங்க பேச்சு, உணர்வு, சிந்தனையையும் எழுத்துல நுழைய விட்டா பார்வையும் லாங்குவேஜும் விசாலமாகும். ஏற்கெனவே ஒரு டஜன் புத்தகம் எழுதியிருக்காங்களே ஆண்டாள் - அவங்களுக்கே தெரியாதான்னு கேட்காதீங்க... நானும் ஏற்கெனவே சொல்லியிருக்கேனே.. சும்மா பாராட்டிட்டா அப்புறம் நான் எப்படி சுமியா இருக்க முடியும்?



ரீசன்டா ஒரு சோகமான நியூஸ் கேள்விப்பட்டேன். ராஜம் கிருஷ்ணனோட ஹஸ்பண்ட் காலமாயிட்டார். கொஞ்ச நாள் படுத்த படுக்கையா இருந்திருக்கார். அவங்க பேனாவுல இங்க் நிரப்பறதைப் பார்த்துட்டுக் கண்ணீர் விட்டிருக்கார். ஏன்னா, வழக்கமா இங்க் ஃபில் பண்ணிக் குடுக்கறது அவர்தானாம்.

எத்தனை ஹஸ்பன்ட்ஸ் இவ்வளவு ஆதரவா ஹெல்ப்ஃபுலா இருப்பாங்கன்னு நினைக்கறீங்க...?

ஏன் இருக்கறதுலயே சின்னதா, எறும்பு ஊறுற



• ஆண்டாள் பிரியதர்ஷினி

# பச்சைக் கிளிகள்!

மாதிரி ஒரு ஃபான்ட்ல அச்சாகியிருக்குன்றது தான் புரியவேயில்லை. அதே பக்கத்துல ஆண்டாள் ப்ரியதர்ஷினின்ற ஆதர் நேம் பெரிய டென் பாயின்ட் போல்டுல வருது!

ஆண்டாள் மேடம் தொலைக்காட்சில பிஸியான நிகழ்ச்சித் தயாரிப்பாளர், தெரியும். பட் புக் போடும்போது இதையெல்லாம் கவனிக்க வேண்டாமா...?

கலைஞர் பாராட்டுக்கப்புறம் இல. கணேசன் அணிந்துரை. அப்புறம் ஆண்டாளுடைய

ஒரு பழைய ஜோக் ஞாபகம் வருது: 'அடுப்புல பால் வைச்சிருக்கேன் பார்த்துக்கங்க'ன்னு ஹஸ்பண்ட்கிட்டே ஒய்ஃப் சொல்லிட்டுப் போனாங்களாம். திரும்பி வந்து பார்த்தா பால் பொங்கி வழிஞ்சு கிடந்ததாம்.

''ஏங்க, பாத்துக்கச் சொல்லிட்டுப் போனேன் இல்லே...'' - இது மனைவி.

''பாத்துக்கிட்டேதான் இருந்தேன்.. கரெக்டா பத்து முப்பத்தஞ்சுக்குப் பொங்கி வழிஞ்சுது.''

- இது....!

— சுமி



நில், கவனி, வெற்றிகொள்!

கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்® இணைந்து வழங்கும்



# இளைஞர் திருவிழா!

சூரியன் ஓவரா வேலை பார்க்கறதாலே வீட்டுல ஒரே புழுக்கம். பீச், சினிமானு போகலாம்னா காசு செலவாகும். டி.வி. பார்க்கலாம்னா, 'இந்தியத் தொலைக்காட்சிகளில் பல முறையாக' மீண்டும் மீண்டும் அதே படங்கள்.

உங்க கஷ்டம் நல்லாவே புரியுது! அதான் குடும்பத்தோட நீங்க வந்து ரசிக்கிற மாதிரி ஒரு சூப்பர் நிகழ்ச்சி வழங்கறோம்.

**மே மாத திருவிழா தலைப்பு**
**'நலம் வாழ எந்நாளும்...'**

சுறுசுறுப்பா இருக்கணும். வயசே தெரியக் கூடாது. இளமையா, நல்ல ஆரோக்கியத்தோட... யாருக்குத்தான் இந்த ஆசைகள் இல்லை? நியாயமான விருப்பம்தான். அதை அடையணும்னா என்னென்ன பண்ணணும், பண்ணக் கூடாதுனு பலதுறை நிபுணர்கள் விவரமாச் சொல்லப் போறாங்க.

நாள் : 27.5.2001 (ஞாயிறு)
இடம் : **வாணி மஹால், தியாகராய நகர், சென்னை – 17.**
நேரம் : **மாலை 6 மணி**

*தலைமையுரை* : **டாக்டர் ஸ்ரீதர்** (அப்பலோ மருத்துவமனை)
*சிறப்புரை* : **ரவி. ஆறுமுகம்** (ஐ.பி.எஸ்)
*ஸ்பெஷல் தாளிப்பு* : கிச்சன் க்வீன் **மல்லிகா பத்ரிநாத்**

ஆரோக்கிய டிப்ஸ் + அடுக்களை அட்வைஸ்.
கண்டிப்பா கலந்துக்கிட்டு, தன்வந்திரி லேகியம் சாப்பிட்ட மாதிரி திரும்பிப் போங்க!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)




# கேட்க நினைத்ததும் கேட்கத் தயங்கியதும்

**கேள்வி:** சமீபத்தில் செய்து கொண்ட இரத்தப் பரிசோதனையில், எனக்கு எய்ட்ஸ் நோய் பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்று கண்டுபிடிக்கப்பட்டது. நான் இந்த நிமிடம் வரை விலைமாதருடனோ, முன்பின் சம்பந்தமில்லாதவர்களுடனோ உடலுறவு வைத்துக் கொண்டதேயில்லை. எனக்குத் திருமணமும் ஆகவில்லை. என்றாலும், என்னை எய்ட்ஸ் நோய் தாக்கியது எப்படி?

**பதில்:** எய்ட்ஸ் நோய் பாதுகாப்பற்ற உடலுறவின் மூலம் மட்டுமே பரவுகிறது என்று எல்லோரும் நினைப்பதால் ஏற்பட்ட சந்தேகம் இது. எய்ட்ஸ் நோய் பரவ, பாதுகாப்பற்ற உடலுறவு மிக முக்கியக் காரணம். பாதுகாப்பற்ற உடலுறவைத் தவிர எய்ட்ஸ் நோய் கீழ்கண்ட முறைகளிலும் பரவுகிறது.

எய்ட்ஸ் நோய் வரக் காரணமான எச்.ஐ.வி. கிருமி உள்ளதா என பரிசோதனை செய்யப்படாத இரத்தத்தை ஒருவருக்குச் செலுத்துவதால் பரவும்.

சரியான முறையில் சுத்திகரிக்கப்படாத ஊசிகளைப் பயன்படுத்துவதால் பரவும். எய்ட்ஸால் பாதிக்கப்பட்ட கர்ப்பிணியிடமிருந்து அவர் வயிற்றில் வளரும் குழந்தைக்கும் பரவுகிறது.

உடலுறவுக்கு அடுத்தாற்போல், எய்ட்ஸ் நோய் மிக அதிகமாகப் பரவுவது இரத்தம் செலுத்தப்படும் போதுதான்.

இப்படி பல காரணங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம். இன்றைய அவசர சூழ்நிலையில், பரிசோதிக்கப்படாத இரத்தத்தை நோயாளிக்குச் செலுத்திட நிறைய வாய்ப்பு உள்ளது.

அடுத்தது, கர்ப்பிணிகள் எய்ட்ஸால் பாதிக்கப்பட்டிருந்தால், அவர்கள் வயிற்றில் வளரும் குழந்தைகளுக்கு எய்ட்ஸ் நோய் பாதிப்பு ஏற்பட வாய்ப்பு உள்ளது. ஆனால், இது 30% குழந்தைகளுக்குத்தான் ஏற்படுகிறது. எய்ட்ஸால் பாதிக்கப்பட்ட 70% கர்ப்பிணிகளிடமிருந்து அவர்கள் வயிற்றில் வளரும் குழந்தைகளுக்கு இந்த நோய் பரவுவதில்லை.

மிகமிக அபூர்வமாக, சுத்திகரிக்கப்படாத ஊசிகள் மூலம் எய்ட்ஸ் நோய் பரவ வாய்ப்பு உள்ளது. அதாவது, எச்.ஐ.வி. கிருமியால் பாதிக்கப்பட்ட ஒருவருக்குப் பயன்படுத்தப்பட்ட ஊசியை, சுத்திகரிப்பு செய்யாமல், அப்படியே அடுத்தவருக்குப் பயன்படுத்தினால், ஊசிமூலம் எச்.ஐ.வி. பரவ வாய்ப்பு உள்ளது.

சற்று நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தால் மேற்சொன்ன எந்த வழியில் உங்களுக்கு எச்.ஐ.வி/எய்ட்ஸ் நோய் தாக்கியிருக்கக் கூடும் என்பது தெரியவரும்.

தொடரும்...



**தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாடு சங்கம்**
417, பாந்தியன் ரோடு, சென்னை - 600 008.
ஹாட் லைன் : 8256882.
இலவசமாகத் தொடர்பு கொள்ள : 1097

